

துறைமங்கலம் சிவப்பிரகாசசுவாமிகள்

அருளிச்செய்த

# பிரபுலிங்கலீலை




இந்நூல் கிடைக்குமிடம்:

அ. இரங்கசாமிமுதலியார் ஸன்ஸ்

புத்தக வியாபாரிகள்

நெ-24, தாண்டவராயப்பிள்ளை வீதி, சென்னை.




வேதாந்த சித்தாந்த வீரசைவ சமயாசாரியராகிய

துறைமங்கலம் - சிவப்பிரகாச சுவாமிகள்

அருளிச்செய்த

# பிரபுலிங்கலீலை

இது

திருவல்லிக்கேணி

தமிழ்ப்பண்டிதர்

T. C. பார்த்தசாரதி அய்யங்காரால்

எழுதிய

இன்றியமையாக் குறிப்புரையுடன்.




அமரம்பேடு

இரங்கசாமிமுதலியார் ஸன்ஸ்

பூமகள்விலாச அச்சுக்கூடம்

சென்னை

காபிரைட்] 1935 [விலை ரூபா 2

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# கதியினட்டவணை



ஆக கதி 25-க்கு திருவிருத்தங்கள்-1159.

## துறைமங்கலம்

# சிவப்பிரகாச சுவாமிகள் சரித்திரம்

பூமிதேவிக்கு முகம்போல விளங்கும் தொண்டைநாட்டிலே அம்முகத்தொளிர் திலகம்போல விளங்குவதாகிய காஞ்சிமாநகரிலே இற்றைக்குச் சற்றேறக்குறைய முந்நூற்றுப்பன்னிரண்டு வருடங்களுக்குமுன் வேளாளகுலத்திலே தொண்டைமண்டலத்தார் வழித் தோன்றியவர்களுக்கெல்லாம் சைவ தீட்சாகுருவாகக் குமாரசுவாமிபண்டாரம் என்னும் ஒரு பெரியார் இருந்தார். இவர் திருவண்ணமலையார் திருவடித்தாமரைக்கே அகங்கனிந்த அன்பர். ஆதலின் திருக்கார்த்திகைத் திருவிழாவிற்குத் திருவண்ணமலை நோக்கி யாத்திரை புறப்பட்டார். போம்போது வழியில் உச்சிக்காலத்தே ஓர் நந்தவனத்திற்றங்கி, சிவபூசையை முடித்துக்கொண்டு உணவு அருந்தி இளைப்பாறிப் பிறகு புறப்பட்டு அன்று மாலை அக்கச்சியம்பதியை அடைந்தார். உடனே ஈசானியதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து அனுட்டானங்களை முறையே முடித்துக்கொண்டு சிவபூசை செய்தற்கு பூசைப்பெட்டகம் எங்கே? என்று தன் பரிசாரகரைக் கேட்டார். அவர்கள் நாடித் தேடிக் காணுதவர்களாகி மனம்வாடி நொந்துவந்து தாம் பகலிற் றங்கியிருந்த நந்தவனத்திற்றனே மறந்து வைததுவந்ததாகப் பகர்ந்தனர். அதுகேட்டதும், அப்பெரியார் அகம்வருந்தி அப்பரிசாரகரையே போய்த் தேடிக் கொணரும்படிக் கட்டளையிட்டு, அவ்வூர் ஆள் ஒருவனையும் துணைசேர்த்து அனுப்பி வைத்தார். பரிசாரகர்கள் சென்றதன்பின் இப்பால் இப்பெரியார் தானும் தனது மனைவியும் ஓர் இடத்திற் றங்கியிருந்து, தம்முடைய ஆத்மார்த்த மூர்த்தியாகிய உடையவரைப் பிரிய நேர்ந்ததே என்று கழிதுயருற்றுக் கலங்கிச் சிவத்தியானஞ் செய்துகொண்டே நித்திரையின்றி இருந்தார்.

இவ்வாறு இப்பெரியார் எண்ணி ஏங்கிச் சிவத்தியானமே பண்ணித் தூங்கிடாதிருக்கும்பொழுது, இவர் பண்ணிய புண்ணியத்தாலே திருவண்ணமலையார் தாமே ஒரு சங்கமராகத் திருக்கோலம் பூண்டருளிவந்து என்னே அப்ப! நீ மனவாட்ட முற்றிருத்தற்குக் காரணம் யாதோ? என்று கேட்டருளினார். அதற்கு அப்பெரியார் வந்த சங்கமரை வணங்கி தனக்கு நிகழ்ந்ததாகிய உடையவரின் பிரிவை எடுத்து உரைத்தார். அதற்கு சங்கமர் திருக்கோலத்துடன் வந்த அண்ணமலையார் அந்தோ! அங்கம் வேறு; இலிங்கம் வேறாக இருந்ததனாலன்றோ அவரைப் பிரிய நேர்ந்தது, இலிங்காங்க சம்பந்தியாய் இருந்திருந்தால் இவ்வாறு நேரிட்டிராதே? ஆயினும் பரவாயில்லை; இன்றுமுதல் நீ இலிங்காங்க சம்பந்தியாகவே இரு; என்று வீரசைவமார்க்கத்தை உபதேசித்தருளி, உமது பூசைப்பெட்டகம் அதிகாலையில் உம்பால் வந்தெய்தும் எனவுந் திருவாய் மலர்ந்தருளினர். அதற்கு அப்பெரியார் அடியேனது சிஷ்யர்கள் பந்துக்கள் முதலாயவர்களுக்கு இச்செய்கை விரோதமாக இருக்குமே என்று பணிவொடு விண்ணப்பித்துக்கொண்டார். அதுகேட்டுச் சங்கமராக வந்த அண்ணமலையுடையரனர் சிஷ்யர் பந்துக்கள் முதலியோர் சார்பால் உமக்கு ஒரு பயனும் இல்லை. ஆதலால் நாம் உமக்கு உரைத்தபடி சிவலிங்கதாரணஞ் செய்துகொள்ளும் இதன்பிறகு நுமக்கு மூன்று புத்திரர்களும் ஒரு புத்திரியும் பிறப்பர். இவர்களால் நுமக்கு இகபாசாதகங்கள் எல்லாஞ் சித்திக்கும் எனத் திருவாய்மலர்ந்தருளினர்.

அப்பெரியாரும் சங்கமர் கட்டளைக்கு இணங்கினார். உடனே சங்கமராக வந்த திருவண்ணாமலையார் குமாரசாமிப் பண்டாரத்தாரை நோக்கி இத்திரு ஆலயத்துத் தெற்குவீதியில் இருக்கும் குருதேவரிடத்திற் சென்று தாரண தீக்ஷை செய்துகொள்ளும் எனக் கட்டளையிட்டருளி, இப்பெரியார்க்கு இத் தாரணதீக்ஷையைச் செய்துவிக்குமாறுங் கூறி அந்தர்த்தானமாயினார்.

பொழுது புலர்ந்ததும் சங்கமர் திருக்கோலந்தாங்கி எழுந்தருளி வந்த திருவண்ணாமலையார் திருவாய்மலர்ந்தருளியபடியே குமாரசாமிப் பண்டாரத் தாருக்கு அகம் பூரிக்க, உடல் புளகமுற, ஆனந்தக்கண்ணீர்சோர பூசைப் பெட்டகம் கைக்கெட்டியது. குருதேவர் மடாலயத்திருந்து குருதேவரின் அடியார்கள் இவரைத் தேடிவந்து அழைத்தார்கள். இவரும் இவையனைத் துஞ் சிவபெருமான் திருவருள் விளையாட்டே என்று திருவருளை வியந்து துதித்து, உடனே குருதேவர் மடாலயஞ் சென்று, குருதேவரைத் தரி சித்து, முறைப்படி நமஸ்கரித்து, அவரால் சிவலிங்க தாரண தீக்ஷைபெற்று மகிழ்ந்திருந்தார். திருக்கார்த்திகைத் திருவிழாத் தரிசனஞ்செய்து பின்னர் தம் கச்சிப்பதி வந்தடைந்தார்.

தன் சிஷ்யர்களுக்கும் தன் உறவின்முறையார்க்கும் வீரசைவ விசேடங் களை எடுத்துப்புகன்று, அவர்களுக்கும் சிவலிங்க தாரண தீக்ஷைசெய்து சிவாநந்தச் செல்வராகி வாழ்ந்துவந்தார்.

இவ்வாறு வாழ்ந்துவருங் காலத்தில் திருவண்ணாமலையார் திருவருள் செய்தபடியே இவர்க்கு மூன்று புத்திரர்களும், ஒரு புத்திரியும் அவதரித் தனர். புத்திரர்களுக்கு முறையே சிவப்பிரகாசம், வேலாயுதம், கருணைப் பிரகாசம் என்றும், புத்திரிக்கு ஞானம்பை என்றும் நாமகரணஞ்செய்து உரிய பருவத்து வித்தியாரம்பஞ்செய்து கல்வியயிற்றி நாளொருமேனியும் பொழுதொருவண்ணமுமாக வளர்த்துவந்தார். பிள்ளைகள் பிறைச்சந்திரன் போல வளர்ந்துவருங்காலத்தில் தந்தையாகிய குமாரசுவாமி ஐயர் சிவலிங்க ஐக்கியமாயினார்.

பின்னர், மூத்தவராகிய சிவப்பிரகாசசுவாமிகள் தன் தாயாரையும் சகோதரர்கள் சகோதரியையும் அழைத்துக்கொண்டு திருவண்ணாமலையைப் போய்ச்சேர்ந்து, குருதேவரை அடைந்து, சிலகாலம் அவ்விடத்திலேயே தங்கி, அவர் ஆதரவில் சிலகாலந் தங்கியிருந்து கல்வியில் மிகு நிபுணராயினர். இவ்வாறு வருநாள்களில் ஒருநாள் திருவண்ணாமலை என்னும் சோணசை லத்தை வலம் வரும்பொழுது சோணசைலமாலையைப்பாடி யருளினர். இச் சோணசைலமாலை திருவண்ணாமலைநாதர் துதியாக நூறுபாக்கள் அடங்கிய தாகும்.

பின்னர், இச்சிவப்பிரகாசசுவாமிகள் இலக்கணம் பயிலவேண்டும் என் னும் பேரவாவால் தென்னாடு செல்ல விரும்பி, தன் சகோதரர்களுடனே புறப்பட்டு, வாலிகண்டபுரத்திற்குத தெற்கே ஐந்துகடிகை தூரத்திலுள்ள துறைமங்கலம் என்னும் ஊரை அடைந்து, ஆங்கிருந்த ஒரு சிங்காரமான நந்தவனத்திற் றங்கி சிவபூசை செய்துகொண்டிருந்தார்.

இச்செய்தியை அவ்வூர்க்கிராமாதிகாரியும் சிவலிங்கதாரியும் குருலிங்க சங்கமபக்தி யுடையவருமாகிற அண்ணாமலைரெட்டியார் என்னுஞ் சீமான் சிலரால் கேள்வியுற்று, அந் நந்தவனத்திற்கு ஓடோடியும் வந்து, சிவப்பிரகாச சுவாமிகளைத் தரிசித்து, இவரிடத்துப் பேரன்புபூண்டு, இவர்க்கு வேண்டும்

உபசாரங்கள் பலவும் உள்ளன்போடு புரிந்து, அவ்வூரிலேயே தங்கி இருக்கும்படி சிவப்பிரகாச சுவாமிகளை வேண்டிக்கொண்டனர். சிவப்பிரகாச சுவாமிகளும் அவ்விரட்டியார் வேண்டுகோளுக்கு இணங்கிச் சிலகாலம் அவ்வூரில் வசிக்கிறதற்கு ஒருப்பட்டனர்.

ஒருப்பட்ட சிவப்பிரகாசர் அவ் இரட்டியாரோடு அவ்வூரிலுள்ள சென்ன பசவையர் மடத்திற்கு அடுத்து மேற்புறத்திலே ஒருமடம் கட்டுவிக்கச்செய்து இரட்டியார் பணிவிடை செய்ய அந்த மடத்திலேயே தங்கி இருந்தார்.

இவ்வாறு சுவாமிகள் இரண்டுவருடகாலம் இங்கேயே தங்கியிருந்து அண்ணாமலை இரட்டியாருக்குச் சன்மார்க்கங்களைப் போதித்துக்கொண்டிருந்து, பின்னர் தென்னாடு செல்ல எண்ணி, இரட்டியாரின் உத்தரவு பெற்றுக்கொண்டு, தன் சகோதரர்களுடன் திருநெல்வேலிக்கு வந்து சேர்ந்தார்.

திருநெல்வேலிவந்து தாம்பிரபர்ணி நதிக்கரையிலுள்ள சிந்துபூந்துறையிலுள்ள தருமபுர ஆதீனத்தைச் சேர்ந்த வெள்ளியம்பலத்தம்பிரான் என்பவர் இலக்கணக்கடலாக விளங்கி இருக்கின்றனர் என்பதைக் கேள்வியுற்று, அவரிடத்திற்சென்று அவரைக் கண்டார். அவ்வெள்ளியம்பலத்தம்பிரான் இவரை நோக்கி, நீர் நம்பால் வந்ததற்குக் காரணம் யாது? என்று வினவினார். சிவப்பிரகாச சுவாமிகள் இலக்கணங் கற்க வந்தேன் எனத் தன் வரலாற்றை அவர்க்கு ஆதியோடந்தமாகக் கூறினார். அதற்கு வெள்ளியம்பலத்தம்பிரான் இச்சிவப்பிரகாச சுவாமிகளின் இலக்கியத் தேர்ச்சியை அறிந்துகொள்ளும்பொருட்டு 'கு' என்று எடுத்து 'கு' என்று முடியுமாறு ஒரு நேரிசைவெண்பா சிவபெருமான் துதியாக இடையே 'ஊருடையான்' என்பது வரப்பாடுக என்று சொல்லினர்.

உடனே சிவப்பிரகாசர் தாமதிக்காது,

"குடக்கோடு வானெயிறு கொண்டார்க்குக் கேழன்
முடக்கோடு முன்ன மணிவார்க்கு—வடக்கோடு
தேருடையான் றெவ்வுக்குத் தில்லைத்தோன் மேற்கொள்ள
லூருடையா னென்னு முலகு"

என்ற வெண்பாவைப் பாடிக் காட்டினர். இவ்வெண்பாவின்கண்ணேயுள்ள 'வடக்கோடு தேருடையான் றெவ்வுக்கு' என்ற சொற்களின் நயங்களைப் பெரிதும் பாராட்டி, சிவப்பிரகாச சுவாமிகளைத் தழுவி, அணைத்துப் புகழ்ந்து, தன்னோடு சமமாக ஆசனத்தில் அமர்த்திக்கொண்டு, நமக்கு நான் போதிக்க வேண்டிய இலக்கணம் இல்லை. எல்லா இலக்கணமும் உம்பாலே அமைந்திருக்கிறது என்று கூறி, நும் சகோதரர்களுக்கு ஐந்திலக்கணத்தையும் ஐயந்திரிபறப் போதிப்போம் என்று கூறி, சிவப்பிரகாசரைத் தம்பக்கல் வைத்துக்கொண்டே ஒருபட்சத்துள் மிகுபட்சமாக ஐந்திலக்கணங்களையும் போதித்தருளினர். சிவப்பிரகாச சுவாமிகள் மிக மகிழ்ந்து வெள்ளியம்பலத்தம்பிரானுக்குக் குருதட்சணை கொடுக்க எண்ணித் தாம் அண்ணாமலை இரட்டியாரிடம் பெற்ற முந்நூறு பொன்னையும் அவர் திருமுன் வைத்தனர்.

வெள்ளியம்பலத்தம்பிரான் அது தனக்கு வேண்டுவதின்று என மறுத்துக்கூறி அதனை ஏற்றுக்கொள்ளாது நீங்கள் எனக்குக் குருதக்ஷணை தர விரும்பினால் நான் சொல்லுவதைச் செய்வதே குருதக்ஷணையாகும். அது யாதெனில்: திருச்செந்தூரில் ஒரு தமிழ்ப்புலவன் தனது கல்விச்செருக்கால்

அகங்கரித்து எம்மை நிந்தித்துக்கொண்டிருக்கின்றான்; அவன் வீறை அடக்கி அவன்வந்து நம்மைப் பணியும்படிச் செய்யவேண்டிய தொன்றையே நும் பால் எதிர்பார்க்கின்றேன் என்றார்.

சிவப்பிரகாசரும் அதற்கு இயைந்து, அவ்வாறே செய்வன் என்று சொல்லித் தம்பிரானால் அனுப்பப்பெற்ற மாணாக்கர்களோடு தாமும் திருச்செந்தூர்சென்று முருகப்பிரானைத் தரிசித்து வணங்கிக்கொண்டு கோயில் வலம் வரும்போழ்து அந்தத் தமிழ்ப்புலவர் சிவப்பிரகாச சுவாமிகளோடு வந்த மாணாக்கரைக்கண்டு, இவர் யார்? என்று உசாவி அறிந்து, சிவப்பிரகாசர் முன்வந்து தன் வழக்கம்போல வெள்ளியம்பலத் தம்பிரானை இழித்துக்கூறினர். உடனே அப்புலவனுக்கும் சிவப்பிரகாசர்க்கும் மாறுபாடு உண்டாகிக் கலாய்த்துச் சொற்போரைத் தொடங்கினர். எந்தவகையாலும் அத்தமிழ்ப்புலவன் சிவப்பிரகாசரை வெல்லமுடியாதவனாகிக் கடைசியாக ஒரு முடிவுக்கு வந்தனன். அஃதென்னை எனின்: அத்தமிழ்ப்புலவர் சிவப்பிரகாசசுவாமிகளை நூதனமாகப் பாடல் பாடி வென்றுவிடலாமென வெண்ணி, நிரோட்டகமாக ஒரு மாலை இச்செந்திலாண்டவன் துதியாக முப்பத்துசெய்யுள் இம்மாலையை வலம் வருவதற்குள் பாடிமுடிப்பது; இதில் யார் தோல்வி அடைகிறார்களோ அவர்கள் வென்றார்க்கு அடிமையாவது எனச் சூள் உரைத்துக்கொண்டு பாடத்தொடங்கினர். சிவப்பிரகாசர் திருக்கோயில் வலம் வருவதற்குள் ஒருமாலை நிரோட்டகமாக கலித்துறையமக அந்தாதி முப்பதுசெய்யுள் அடங்கிய மாலையைச் செநதிலாண்டவன் திருவருட்சகாயத்தாற் பாடி முடித்தனர். தமிழ்ப்புலவர் ஒரு செய்யுளும் பாடமுடியாது திகைத்து வெட்கி நின்றார்.

சிவப்பிரகாசர் அப்புலவரை நோக்கி, புலவரே! இப்போழ்து என்ன சொல்லுகின்றீர்? என்றார். அதற்கு அத்தமிழ்ப்புலவர் அடியேன் தோற்றேன்! தோற்றேன்! என முக்காலுங்கூறிச் சாஷ்டாங்கமாகச் சிவப்பிரகாசர் திருவடியில் விழுந்து வணங்கி, இனி அடியேன் தேவரீருக்கு அடிமை என்று கூறினர். உடனே சிவப்பிரகாசர் அப்புலவனை அழைத்துக்கொண்டு திருநெல்வேலிவந்து வெள்ளியம்பலத்தம்பிரானை வணங்கி நின்றார். வெள்ளியம்பலத்தம்பிரான் அகமிகமகிழ்ந்து பாராட்டிச் சிவப்பிரகாசரை நோக்கி, நீர் நமது கடனை முடித்தீர்; இனி நீர் சிறிதுகாலம் சிதம்பரத்து வாசஞ்செய்து இரும் என விடைதந்து அனுப்பிவைத்தனர்.

சிவப்பிரகாசர் தன் சகோதரர்களுடன் அவ்விடம்விட்டுப் புறப்பட்டு தென்னாட்டிலுள்ள சிவத்தலங்களை யெல்லாந் தரிசித்து வணங்கிக்கொண்டு, பின்னர் துறைமங்கலம் வந்துசேர்ந்து, தன்னைப் போற்றிவந்த அண்ணாமலை இரட்டியார்பொருட்டு அவருக்குரிமையான கம்பத்தக்கிராமமாகிய வாலிகண்டபுரத்திற்கு வாயுமூலையில் இருக்கும் வெங்கைமாநகரத்திற்கு வந்து சேர்ந்தார்.

இங்கு கோயில்கொண் டெழுந்தருளியிருக்கும் வெங்கைபுரீசராகிய பழமலையார்மீது தோத்திரப்பாருபமாக வெங்கைக்கோவை, வெங்கைக்கலம்பகம், வெங்கையுலா, வெங்கையலங்காரம் என்னும் நான்கு பிரபந்தங்கள் செய்து சிலநாள் அங்குத் தங்கியிருந்தார்.

பின்னர், அண்ணாமலை இரட்டியாரை அழைத்துக்கொண்டு சிதம்பரத்திற்குப்போய் ஆங்கு ஒரு திருமடங் கட்டுவித்து சிலகாலம் வசித்திருந்து, விருத்தாசலஞ்சென்று பழமலைநாதர்பேரில் அந்தாதியும், பிக்ஷாடன நவ

மணிமாலையும், கொச்சகக்கலிப்பாவும் பாடி முடித்துப், பின்னர் பெரியநாயகியம்மன்பேரில் பத்தொன்பது கலித்துறையும், பத்துக்கழிநெடில் விருத்தமும் பாடித்துதித்து, அங்கு வாசஞ்செய்துவரும் நாட்களில் ஒருநாள் மணிமுத்தாநதிக்கரை மார்க்கமாக உலாவிக்கொண் டிருக்கும்பொழுது ஒரு மாங்கனி பாட்டையின் பக்கத்துள்ள தோட்டத்திலிருந்து தொப்பென்று இவர் முன் விழுந்தது. இது சிவ நிவேதனைக்குதவும் எனச் சிவப்பிரகாசர் எடுத்துக்கொண்டு திரும்பி நாலடி எடுத்துவைத்தனர். மேலடி எடுத்துவைக்கு முன் தோட்டக்காரன் ஓடோடியும் வந்து சிவப்பிரகாசரை மடிபிடித்திழுதது வைய சுவாமிகள் சினந்து,

"அடுத்துவருந் தொண்டனுக்கா வந்தகனைத் தாளால்
அடர்த்ததுவுஞ் சத்தியமே யானல்—எடுத்தொரு
மாங்கனிக்கா என்னை மடிபிடித்த மாபாவி
சாங்கனிக்கா தித்தன்வரத் தான்."

என்று கூறிவிட்டு அவ்விடம்விட்டு அகன்றார். அந்தோ! அத்தோட்டக்காரன் * கன்னிகாராசியிற் சூரியன் வந்ததும் இறந்தொழிந்தான். பின்னர் வடதிசையை நோக்கிக் காஞ்சிபுரத்தைத் தரிசிக்க வரும்போது போரூரவிநாசியிலிருந்து சாந்தலிங்கசுவாமிகள் இடைமார்க்கத்தில் வர, அவரைக்கண்டு ஆனந்தங்கொண்டு அளவளாவி, தன்னுடனே அழைத்துக்கொண்டு பொம்மையபாளையத்திற்குச் சமீபமாக வந்தபோது சாந்தலிங்கசுவாமிகள் சிவப்பிரகாசசுவாமிகளைப்பார்த்து, நாம் இருவரும் சிவஞானசுவாமிகள் சன்னிதானத்திற்குப் போய் அவரைத் தரிசித்துக்கொண்டு போவோம்; அவர்மேல் தோத்திரப்பாடல்கள் பாடுக என்றனர். அதற்குச் சிவப்பிரகாசர் அடியேன் நரஸ்துதி செய்யேன் என்றான். பின்னர் அன்றிராத்திரி ஓரிடத்தில் தங்கி நித்திரை செய்யும்பொழுது முருகப்பெருமான் மயில்வாகனரூடராக எழுந்தருளி வந்து ஒரு பாத்திரத்தில் விடு புஷ்பங்களைவைத்து இம்மலரை மாலையாகத் தொடுத்து நமக்கணியவேண்டுமென்று கூறி மறைந்தருளினர். விடிந்ததும் இக்கனவைச் சாந்தலிங்கசுவாமிகளுக்கு அறிவிக்க, அதற்கு அவர் தேவரீர் பாமாலை தொடுக்கக்கூடாதென்று சொல்லியபடியால் அப்பாமாலையே தொடுக்கவேண்டுமென்று குறிப்பித்ததாகும் என்றார். உடனே சிவப்பிரகாசர் பாலையசுவாமிகள்பேரில் தாலாட்டு, நெஞ்சுவிடுதூது, கலம்பகம் என்னும் மூன்று நூற்களைப் பாடிப்போய்ச் சன்னிதானத்தில் அரங்கேற்றி ஞானோபதேசம்பெற்று, அந்த ஞானாசிரியன் கட்டளையின்படி தமது தங்கையாகிய ஞானம்பையை சாந்தலிங்கசுவாமிகளுக்கு விவாகஞ்செய்துகொடுத்து, பின்னர் காஞ்சிக்குவந்து வாசஞ்செய்துகொண் டிருக்குங்காலையில் தமது ஞானாசிரியர்பேரில் பிள்ளைத்தமிழும், திருப்பள்ளி யெழுச்சியும், அதிசயப்பத்தும் செய்தருளினார்.

நிற்க, இவர் இவ்வாறு இருந்துவரும் நாள்களில் ஓர்நாள் அண்ணாமலை இரட்டியார் இவரைக் கல்யாணஞ் செய்துகொள்ளுமாறு வேண்ட அதற்குச் சுவாமிகள்,

"சேய்கொண்டா ருங்கமலச் செம்மலுடனே யரவப்
பாய்கொண்டான் வந்துதொழும் பட்டீச் சுரத்தானே
நோய்கொண்டா லுங்கொளலா நூறுவய தளவிருந்தும்
பேய்கொண்டா லுங்கொளலாம் பெண்கொள்ள லாகாதே." என்றனர்.

* கன்னிகாராசியிற் சூரியன் மேவுவது புரட்டாசிமாதத் தென்றறிக.

இவர் திருத்தம்பியார் கருணைப்பிரகாச சுவாமிகளைக் கல்யாணஞ் செய்து கொள்ள வேண்டினபொழுது அதற்கு அவர்,

"நாணி யென்பதை நாரியென் றுரைத்திடு நசையால்
வேணு வானது வளைந்துபோய்ப் புகுந்தது வென்றூற்
காண லாவதோ ருருவமெய் நாரியைக் கண்டால்
பூணு வார்மயல் காளைய ரென்பதும் புதிதோ."

என்று தங்குறிப்பை வெளியிட்டனர். சிவப்பிரகாசசுவாமிகள் தம் சகோதரர் இருவர்க்கும் மணம் செய்வித்து இல்லறத்து இருக்கச்செய்து தான் துறவறத்திலேயே இருந்தார். தான் துறவறநிலையில் இருந்துகொண்டு பிரபுலிங்க லீலை, சித்தாந்தசிகாமணி, வேதாந்தசூடாமணி, சிவப்பிரகாச விசாகம், தர்க்க பரிபாஷை, திருக்கூவப்புராணம், சதமணிமாலை, நால்வர் நான்மணிமாலை, நிரஞ்சனமாலை, கைத்தலமாலை, அபிஷேகமாலை, இஷ்டலிங்கப் பெருங்கழி நெடில், குறுங்கழிநெடில், நன்னெறி, சிவநாம மகிமை என்னும் நூல்களைச் செய்தருளினர். இதன்றியும் திருப்பதிகம் பெற்ற திருத்தலங்கள் ஒவ்வொன்றிற்கும் இரண்டிரண்டு வெண்பாக்களும் பாடியருளினர்.

சிவப்பிரகாசசுவாமிகளின் சகோதரர்களில் ஒருவராகிய வேலைய சுவாமிகள் நல்லூர்ப்புராணம், இஷ்டலிங்கக் கைத்தலமாலை, குகநமச்சிவாயமூர்த்திகள் சரித்திரம் என்னும் நமச்சிவாயலீலை, வீரசிங்காதனபுராணம், கிருஷ்ண சரித்திர பாரிஜாதலீலை, மயிலத்திரட்டைமணிமாலை என்னும் நூற்களைச் செய்து அருளினர். இவ்வேலையசுவாமிகளின் இளையவராகிய கருணைப்பிரகாசசுவாமிகள் இஷ்டலிங்க அகவல், திருக்காளத்திப்புராணத்தில் சீகாளத்திச்சருக்கம் வரையிலும் செய்தருளி, வெங்கைமாநகரத்தில் பதினெட்டாம் வயதில் சிவலிங்க ஐக்கியம் ஆயினர்.

அதுகேட்டு சிவப்பிரகாச சுவாமிகள்,

"முன்னமொரு தமிழ்ப்புலவன் றனையுண்டு கண்டசுவை முதிர்ச்சி யாலே
தன்னியலை முழுதுமுரைத் தமையாமுன் னினைக்கவர்ந்து தடங்காளத்தி
மன்னவனுண் டானெனது மாதவத்தின் வலிதீர மண்ணின் மீதே
என்னுடன்வந் தவதரித்த விளங்கருணைப் பிரகாச னென்னுங் கோவே."

என்று இரங்கினர். வேலைய சுவாமிகள்,

"ஆண்டதனு லெனையொவ்வாய் வித்தையினுற் றமயனினு மதிகமென்றே
பூண்டவுல கதனிலுள்ளோர் புகல்வதுகேட் டிருந்துமென்ன புதுமைதானோ
காண்டருகண் மணியேநல்லிளங் கருணைப்பிரகாசக் காளாய்நீதான்
மாண்டனையென் றறிந்திருந்து முயிர்தரித்தேன்யானுமிகு வன்னெஞ்சேனே."

என்றிரங்கினர். பின்பு சிவப்பிரகாசசுவாமிகள் மிகவும் மகிமையோடிருந்து காளத்திப்புராணத்தில் கண்ணப்பர் சருக்கமும், நக்கீரர் சருக்கமும் செய்தருளி தனது முப்பத்திரண்டாம் வயதிலே நல்லாத்தூரில் பாலையசுவாமிகளால் விடப்பட்டிருந்த மடத்திலே சிவலிங்க ஐக்கியமாய்ச் சிறந்தார்.

அப்போது வேலையசுவாமிகள்,

"அல்லிமலர்ப் பண்ணவனு மாராய்ந் தறிகவிதை
சொல்லு மிருவரிடைத் தோன்றியயான்—முல்லை
யரும்பிற் பொலியு மணிமுறுவ னல்லாய்
கரும்பிற் கணுநிகர்த்தேன் காண்." என்று கூறி யிரங்கினர்.

பின்னர் இச்சுவாமிகள் காளத்திப்புராணத்தைப் பாடி நிறைவேற்றிப் பெருமத்தூர் மடத்தில் எழுபத்திரண்டாம் வயதில் சிவலிங்க ஐக்கியமாய்ச் சிறந்தார்.

திருச்சிற்றம்பலம்.

# பிரபுலிங்கலீலை



இது, பிரபு+லிங்கம்+லீலை என மூன்று சொற்கள் இரண்டு சந்தியா லாகிய ஒருதொடர்.

பிரபு, லிங்கம், லீலை என்னுஞ் சொற்கள் மூன்றும் வடசொற்கள்.

பிரபு+லிங்கம்=பிரபுலிங்கம் என்னும் இத்தொடர் அல்வழிப்புணர்ச்சி, பண்புத்தொகை. இது பிரபுவாகிய லிங்கம் என விரிதலின் இருபெய ரொட்டுப் பண்புத்தொகை.

சிறப்புப்பெயர்க்கும் பொதுப்பெயர்க்கும் இடையே 'ஆகிய' என்னும் பண்பு உருபு தொக்கது இருபெயரொட்டுப் பண்புத்தொகையின் இலக்கண மாதல் அறிக. இது இயல்புப்புணர்ச்சி. "இடையுரி வடசொலினியம்பிய கொளாதவும் - போலியு மருவும் பொருந்திய வாற்றிற் - கியையப் புணர்த்தல் யாவர்க்கு நெறியே" என்பது இலக்கணம்.

லிங்கம்+லீலை=லிங்கலீலை இது வேற்றுமைப் புணர்ச்சி, ஆறும் வேற் றுமைத் தொகை. இது லிங்கத்தினுடைய லீலை என விரிதல் காண்க. இதனில் லிங்கம் என்னும் நிலைமொழி ஈற்று மகரம் கெட்டு லிங்கலீலை என இயல்பாகப் புணர்ந்தது. என்னை, "மவ்வீ றொற்றழிந் துயிரீ றொப்ப வும் - வன்மைக் கினமாத் திரிபவும் ஆகும்" என்பது இலக்கணம்.

இறைவன் எல்லாம் உடையவன் ஞானச்செல்வன் ஆதலினாலும், அவ் இறைவனே அல்லமாப் பிரபுவாக வந்தவர் ஆதலினாலும் 'பிரபு' என்றார். இறைவன் எல்லாச் செல்வமும் ஞானச்செல்வமும் உடைய பிரபு என் பதனாலன்றோ ஈச்சுரன் என்னுந் திருநாமம் ஒன்று இறைவற்கு வழங்கு கின்றது.

'லிங்கம்' என்றது சதாசிவரூபத்தை. இறைவன் உருவம், அருவம், ரூபாரூபம் என்னும் மூவ்வுருவன். அவற்றுள் ரூபாரூபம் இலிங்க வடிவத்தால் உணர்த்தப்பெறும். இதுவே சதாசிவரூபம் எனவும் பெறும். லிங்கம் என்பது குறி, அடையாளம் என்னும் பொருளது.

'லீலை' இது விளையாட்டு என்னும் பொருளது. இறைவன் சர்வசக்தன் ஆதலின் அவனுக்கு அரியது ஒன்று இன்று. எல்லாம் இலேசானது ஆதலி னாலும் இங்கு இந்நூலில் குறிக்கும் திருவிளையாடல் இறைவிமாட்டு விளை யாட்டாகப் பேசிச் செய்துகாட்டியதாதலின் 'லீலை' என்றார்.

'பிரபுலிங்கலீலை' என்றது இறைவன் அல்லமாப்பிரபுவாக வந்து செய்த திருவிளையாடலைக் குறித்துக் கூறும் நூலுக்காயிற்று. இது நூலுக்குப் பொருள் குறித்து வந்த பெயராகும்.

இப் "பிரபுலிங்கலீலை" இருபத்தைந்து கதிகளைக் கொண்டுளது. இவ் வாறு இருபத்தைந்து கதிகளாகப் பாகுபாடுசெய்த ஆசிரியர் நோக்கம் யாதோ எனின்; ஆன்மதத்துவம் இருபத்துநான்காகும். இவ்விருபத்துநான்கு தத் துவங் கடந்துநின்ற இருபத்தைந்தாவது தத்துவம் முத்திதத்துவமாகும்.

ஆன்மா இருபத்துநான்கு தத்துவங்களைக் கடந்து இருபத்தைந்தாவது தத்துவமாகிய முத்தியை எய்துக என்பதை குறிப்பால் உணர்த்தியதாம்.





உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பிரபுலிங்கலீலை

## கணபதி காப்பு

சுரகுலாதிபன்றாய்மலர்நந்தனம்
பெருகவார்கடல்பெய்தவயிற்றினோன்
கரகநீரைக்கவிழ்த்தமதகரி
சரணநாளுந்தலைக்கணியாக்குவாம்.

முதலாவது

## துதிகதி

### சிவஸ்துதி

பூவாய்நெடுங்கோட்டுறுபசுந்தேன்கைகான்முடங்குபொறியிலித
னாவாயொழுகிற்றெனவுலகமளந்தமாலுநான்முகனுங்
காவாயெனநின்றேத்தெடுப்பத்தானேவந்தெங்காதலத்தின்
மேவாவமர்ந்தமாமணியைத்தொழுதுவினைக்குவிடைகொடுப்பாம். 1

() வார்கடல் பெய்த வயிற்றினோன் - அகத்தியன். பெருக-ஓங்கும்படியாக, இங்கு பெருகவென்னும் வினையெச்சம் கவிழ்த்தவென்னும் பெயரெச்சவினைகொண்டது.

(1) கோடு-மரக்கொம்பு. ஒழுகிற்று-ஒழுகினால். பசுந்தேன்-பசுமையாகிய தேன், பதனழியாத தேன் என்றும் பொருள் கொள்ளலாம். இப்பாடலில் காவாய் என்னும் எதிர்மறை வினைமுற்று வேண்டிக்கோடற் பொருட்டாய் உடன்பாட்டு ஏவற்பொருளில் வந்து காத்தருள்வாய் என்னும் பொருள் தந்து நின்றது. அன்றி, 'மூடவன் கொம்புத்தேனுக் கிச்சித்தல்போல' என்னும் உலகவழக்கைக் காட்டி, இல்லாத பொருளை உவமானமாக்கலால் இல்பொருளுவமை தொனித்தல் காண்க.

## தேவிஸ்துதி

ஆதிபகவன்றனதூடறணிப்பான்பணியவவ்விறைவன்
பாதமிறைஞ்சுமதற்குநெற்றிப்பகையுமல்குற்பகையுமாஞ்
சீதமதியுமரவும்விழுஞ்செயற்குமுவகைசெயாமலலை
மாதுபணியுமதற்குமனமகிழுமுமையைவணங்குவாம். 2

## கணபதிஸ்துதி

மாரனெடுத்துவளைக்குமொருகரும்பையொடித்துமலர்சிதறி
நாரியடுத்தவளிமாலைகுலையத்துரந்துநயந்தோடி
வீரமனத்துவினைப்பாகர்குறிப்பினொழுகிவிளையாடு
மீரமதிச்செஞ்சடைக்களிநல்யானையிணைத்தாளேத்துவாம். 3

## சுப்பிரமணியஸ்துதி

பாகமொருபெண்குடியிருக்கும்பரமனணியிற்பரித்தமணி
நாகநுழைவுற்றுடல்சுருண்டுகிடந்துநகுவெண்டலைப்புழையிற்
போகமெல்லத்தலைநீட்டிப்பார்த்துவாங்கப்போகுமொரு
தோகைமயில்வாகனப்பெருமாடுணைத்தாட்கமலந்தொழுதிடுவோம். 4

---

(2) ஊடல்-பிணக்கு, இது தலைவன் தலைவி என்கிற இருவர் மாட்டும் நிகழும் பிரணயகலகம். இப்பாடலில் கூறப்பட்ட ஊடல், பார்வதிதேவியாருக்குக் கங்கையாகிய சக்களத்தியால் பரமசிவனிடம் உண்டாகிய கோபம் என்க. அலைமாது - கங்காதேவி. ஆதிபகவன் - முழுமுதற்கடவுள். நெற்றிப் பகையும் அல்குற்பகையும் அன்மொழியாகக் கொள்க.

(3) கரும்புவில்லோன் - மன்மதன். நாரி - நாண். ஈரமதி செஞ்சடை-குளிர்ச்சிபொருந்திய சடை (கங்கையும் சந்திரனும் இருத்தலாலென்க.) வீரமனத்து வினைப்பாகர்-வீரத்தன்மைபொருந்திய மனதையுடைய இருவினையொப்பாராகிய ஆதோரணர். இருவினை யொப்பாவது-நல்வினையாகிய ஆக்கத்தினும் தீவினைப்பயனாகியகேட்டினும் கருத்து வேறுபடாதிருத்தலாம். இருவினை நல்வினை, தீவினை என்ப. பாகர்-யானையின்மீது ஏறி நடத்துபவர். இப்பாடலில் யானையின் இயல்பைக் கூறுமிடத்து, யானை தின்னுதற்காகக் கரும்பை ஒடித்தலும், மலர்களைப்பார்த்தால் விளையாட்டாக வாரி இறைத்தலும், மதநீர் உண்ணுவதற்கு வந்து மொய்க்கின்ற வண்டுகளைத் துரத்தலும், பாகர் குறிப்பின் வழி செல்லுதலும் சாதித்தன்மை என்பர்.

(4) நகுவெண்டலை-சிரிக்கின்ற வெண்மையாகிய தலை. புழை-துவாரம். மயில்வாகனன்-முருகன். ஒருபெண் பார்வதி. மணிநாகம் - மணியையுடைய, பாம்பு. இதை மாற்றிப் பொருள்கொள்ளின், பாம்பினிடத்திலிருந்து உண்டாகிய ரத்னம் என்னலாம்.

## அல்லமதேவஸ்துதி

கலையைமதிக்கும்புலவர்தமைச்சித்தர்குழாத்தைக்கடவுளரை
நிலையைமதிக்குமுனிவரரைத்திசைமாமுகனைநிரைவளையாச்
சிலையைமிதிக்குநெடியோனைவிழுங்கியுமிழாத்திறன்மாயை
தலையைமிதிக்குமல்லமன்செங்கமலமலர்த்தாடலைக்கணிவாம். 5

## வசவேசர்ஸ்துதி

வெள்ளவேணிப்பெருந்தகைக்கியாஞ்செய்யடிமைமெய்யாகக்
கள்ளவேடம்புனைந்திருந்தகள்வரெல்லாங்களங்கமறு
முள்ளமோடுமெய்யடியாராகவுள்ளத்துள்ளுமருள்
வள்ளலாகும்வசவேசன்மலர்த்தாடலையால்வணங்குவாம். 6

## சென்னவசவஸ்துதி

பங்கவளற்றுவழிமாற்றியொருநல்வழியைப்பகர்வார்போற்
றங்கண்மதியிற்பலபிதற்றுஞ்சமயருரைகடமைநீக்கி
யங்கநிலையிற்றிலிங்கநிலையிற்றென்றருளும்வீரசைவ
சிங்கநிலைத்தவருட்சென்னவசவன்றிருத்தாள்சிரத்தணிவாம். 7

## மடிவாலமாச்சையர்ஸ்துதி

வார்க்குங்குமமென்முலைபாகனடியாரறுவைமாசடித்துத்
தீர்க்குஞ்செயல்போல்விச்சலமன்னவன்றன்சேனைசெய்பிழையைத்
தாக்குங்கரவாள்கொடுசின்னபின்னமாகத்தடிந்திட்டுப்
போக்குங்கருணைமடிவாலமாச்சன்பொன்னங்கழல்போற்றி. 8

---

(5) கடவுளர்-தேவர். இச்சொல் பதினெண் கணங்களிலே இந்திரன் முதலிய தேவர்களை உணர்த்துஞ் சொல்லாயினும் இங்கு மற்றைக் கணங்களையும் உபலக்கணமாகக் குறித்தது. நிரைவளை - ஒழுங்கான வளையல்களை அணிந்த பெண். இது அன்மொழித்தொகை. சிலையை மிதிக்கும் நெடியோன்-இராமன் (இக்கதை அகல்யா சாப விமோசனத்தைக் குறித்தது.) மலர்த்தாள் தலைக்கணிவாம் என்றது தலையை மிதிக்குந் தாளை எனக்கொள்க.

(6) பெருந்தகை-பெரிய தகைமையையுடைய பரமசிவன் இது அன்மொழித்தொகை. களங்கம்-குற்றம். வேணி-சடை.

(7) பங்கம் - குழைந்த சேறு என்று பொருள்கொள்ளின் இருபெயரொட்டு. தங்கண்மதி-வேதாகமங்களின் அளவையில் பட்டவையல்ல. சமயர்-காட்சி யொன்றையே பிரமாணமாகக் கொள்ளும் உலோகாயதர். சிங்கம் என்பது இப்பாடலில் சிறப்புப்பொருளில் வந்தது.

(8) போற்றி-போற்றுதல், இது தொழிற்பெயர். இங்கு மாசுதீர்த்தலாகிய உபமானமும், பிழைபோக்கலாகிய உபமேயமும் ஒருபொருளின் செயலே ஆதலினால் ஒன்றில் ஒப்பணி என அலங்கார நூலார் கூறுவர்.

## நால்வர்ஸ்துதி

பெண்ணிற்கரசுதாணுகவென்புபெருநீற்றறைபிரச
வண்ணக்கமலமலர்ப்பொய்கையாகசசெங்கன்மாமழையாய்
நண்ணச்சிறியநரிகண்முடங்குளேயபரியாய்நகர்புகுதப்
பண்ணற்குரியவமுதுறழ்முத்தமிழ்நால்வரையும்பணிகுவாம். 9

## அடியார்போதுஸ்துதி

பரவைகேள்வன்றிருத்தொண்டத்தொகையுளடியார்பத்தியெலா
முருவமாகுநஞ்சோமநாதன்றுதியுளுறுசரண
ரரவவணியானடியார்கண்மற்றையவர்களனைவருந்தாம்
விரவிநாளுமிருப்பவிடங்கொடுக்குமுள்ளம்விரிந்தன்றே. 10

## சிறப்புப்பாயிரம்

(நூல் செய்தவர் பெயரும் நுதலிய பொருளும்)

தண்ணிலவுபுனைசடிலத்திறைபுகழல்லமதேவன்
சரிதத்தீம்பாற்
புண்ணியரஞ்செவிவாயிற்றமிழ்ச்சங்கத்தான்முகந்து
புகட்டினனால்
எண்ணரியபுகழ்மலயத்திருந்தவனோர்வடிவெடுத்தா
னென்றுகூறப்
பண்ணியமுத்தமிழ்க்கவிதைச்சிவப்பிரகாசப்பெரும்பேர்
படைத்துளானே. 11

---

(9) என்பு-எலும்பு. பிரசம்-தேன். பொய்கை-குளம், மானிடரால் ஆக்கப்படாத தடாகம். பரி-குதிரை, உளை-பிடரிமயிர். முத்தமிழ்-இயல், இசை, நாடகம். நால்வர்-சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர்.

(10) பரவைகேள்வன் - சுந்தரமூர்த்தி சுவாமி. சரணர் - தொண்டர். விரவுதல் - கலத்தல். இப்பாடலில், சைவநூல் ஆட்சிக்கேற்ப அடியார் என்றும், வீரசைவநூல் ஆட்சிக்கேற்ப சரணர் என்றுங் கூறினர். பக்தியெல்லாம் என்றது - குருபத்தி, லிங்கபத்தி, சங்கமபத்தி என மூன்று வகைப்படும்.

(11) சடிலம் - சடை, இறை - கடவுள். இருந்தவன் - அகத்தியன். இப்பாடல் சிறப்புப்பாயிரமாதலின், இவரது சகோதரர் ஒருவரால் செய்யப்பட்டிருக்கலாம். மலயம்-பொதியமலை.

### அவையடக்கம்

அடலுறுமல்லமனரியசீரொடு
படுதலினயந்துபாராட்டும்பன்முறை
மடனிகுமுலகமென்மொழியைவந்துவர்க்
கடலிலுமுழ்குவர்காலமொன்றினே. 12

### படலத்தொகை

நாற்கதிதருமிடர்கடந்துநச்சுநர்
பார்க்கதிமுதலிருபத்தைந்தாங்கதி
மேற்கதிபெறவருள்விளங்குமல்லமன்
சீர்க்கதியிருபதோடைந்துஞ்செப்புவாம். 13

### சம்பந்தம்

கன்றியவைரிகள்காதுங்காதையும்
வன்றுயர்மதனநோய்வளர்க்குமாற்றமும்
புன்மொழிவினர்வறும்பொழுதுபோக்கலு
மன்றருளல்லமனமலலீலையே. 14

### அதிகாரிகள்

புறங்கறையொழுகுசெம்புண்ணிலீயென
வறுங்கதைபுல்லியர்கொள்வர்மாமல
ருறுங்களிவண்டினல்லமனெணுங்காதையைப்
பிறந்துளபயன்பெறுபெரியர்கொள்வரே. 15

---

(12) அடல்-வலிமை. உவர்க்கடல்-உப்புக்கடல். நயத்தல்-விரும்புதல். மடன்-அறியாமை, இது கடைப்போலி. மொழி-சொல், இது ஆகுபெயர். உலகம்-உலகத்திலுள்ளவர், இது இடவாகுபெயர். ‘உலகமென்பது உயர்ந் தோர் மாட்டே’ என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தையுங் காண்க. காலம்-விசேடகாலம். (கிரகணம் முதலியவைகளைக் குறிக்கும்)

(13) நச்சுதல்-விரும்புதல். பார்க்கதி-பிருதிவிதத்துவம். இருபத்தைந்து கதி-இருபத்தைந்து தத்துவங்கள். அவையாவன: பூதங்கள் ஐந்து கருமேந் திரியங்கள் ஐந்து, ஞானேந்திரியங்கள் ஐந்து, தன்மாத்திரைகள் ஐந்து புருடன், மான், அகங்காரம், மனம், மூலப்பகுதி ஆகிய ஐந்தெனக்கொண்டு கணக்கிடுக.

(14) கன்றுதல் - வெதுப்புதல். வைரி - பகைவர். காதுதல் - கொல்லல். காதை-சரித்திரம். வறும்பொழுது - வீண்காலம். அமலலீலை - குற்றமில்லாத திருவிளையாடல். மாற்றம்-சரித்திரம்.

(15) கறை-இரத்தம். வறுங்கதை-பயனில்லாத கதை. புல்லியர்-சிறி யோர். மாமலர்-தாமரை மலர்.

### பிரயோசனம்

மயலளற்றான்றுகோன்மல்குமன்பெனு
மியலெழுத்தெழுதுகோலங்கலிங்கமாம்
வியனிலத்தளவுகோன்மதிவிளக்கினை
யயர்வறத்தூண்டுகோலமலலீலையே. 16

### விடயம்

நன்றிகொளடிகணான்குறநடந்துபோ
யென்றனிநாவினின்றெழுமிச்செய்யுளான்
வென்றிகொளல்லமன்சீர்த்திமென்பயன்
கன்றலிலன்பராங்கன்றையூட்டுமால். 17

### 3-பாட்டுகளால் உற்பத்தி சொல்லப்படுகின்றது

பரசிவம்பிரமமென்னப்பட்டொருதிரிவுமின்றி
யுரைமனமிறந்துநின்றவொருசிவலிங்கந்தன்னின்
வருமுயர்சதாசிவன்றான்மற்றவன்றனைப்பொருந்து
மருமைகொண்ஞானசத்தியவர்களாற்சிவனுதிப்பன். 18

சாற்றுமச்சிவனுக்கிச்சாசத்தியவ்விருவரானுந்
தோற்றுவனுருத்திரன்றான்சொல்லியவவற்குச்சத்தி
மாற்றருங்கிரியையென்பர்மற்றிவரிருவர்பாலும்
போற்றுமரியுதிப்பன்பொறியவன்சத்தியாமால். 19

---

(16) மயல்-மயக்கம். அளறு-சேறு. மல்கு-நிறைந்த. அன்பு-குருலிங்க சங்கமபத்தி. இயல்-இலக்கணம். வியன்-விசாலம்.

(17) ஆன் - பசு. அடிகள் நான்கு-நான்கடிகளாகிய நாலு பாதங்கள். சீர்த்தி-புகழ். கன்றல் - பதனழிதல், இங்கு அன்பராங்கன்று என்பது சிவ பத்தர்களாகிய கன்றெனப் பொருள் கொள்க. இப்பாடலில், இக்காப்பி யத்தைப் பசுவாகவும், நான்கடிகளையும் நான்கு கால்களாகவும், புகழைப் பாலாகவும், அடியாரைக் கன்றாகவுங் கூறியதால், உருவகவணிதொனித்தல் காண்க.

(18) இறந்து-கடந்து. பரசிவம்-பிரமம், பரசிவம் எனப்பட்டது சித் தாந்த நூற்கொள்கை என்றும், பிரமம் எனக் கூறப்பட்டது வேதாந்த நூற் கொள்கை என்றுங் கொள்க. தான், மற்று அசைகள்.

(19) இச்சாசத்தி - உயிர்க்கருள்நேயம். கிரியாசத்தி - படைக்குந் தொழில். (Operative Energy) அரி-நாரணன். (இது பலபொருள் ஒருசொல்) பொறி-திருமகள் (பலபொருள் ஒரு சொல்) தான், மற்று, ஆல் அசைகள். தோற்றுவன் என்னும் பிறவினை இங்குத் தன்வினைப் பொருளில் வந்தது.

அத்திருமாலுமாவுமளிப்பவந்துதிப்பன்வண்டு
மொய்த்திசைமுரலுஞ்செங்கேழ்முளரிவானவனவற்குச்
சத்திவெண்கமலையன்னோர்தரவருமுலகிற்றோற்ற
நித்தனங்குருகுகேசனிணைவுமாத்திரையினுமால். 20

## அல்லமதேவன் சிறப்பு

ஆக்குறுஞ்செயலதொன்றேயயன்றனக்காக்கலோடு
காக்குறுஞ்செயலிரண்டுங்கண்ணனுக்காக்கல்காத்தல்
போக்குதலென்றிம்மூன்றும்புராந்தகற்களித்தவர்க்கு
நீக்கருமிறைமைநல்கிநிறுவினன்குருகுகேசன். 21

முதலாவது

துதிகதி முற்றிற்று.

---

கதி 1-க்கு திருவிருத்தம்-22.

---

(20) மா-திருமகள். முரலுதல்-ஒலித்தல். கேழ்-நிறம். முளரி-தாமரை. முளரி வானவன்-பிரமன். வெண்கமலை-சரஸ்வதி. நித்தன்-அழிவில்லாதவன்.

(21) குகேசன்-அல்லமன். புராந்தகன்-உருத்திரன். ஆக்கல், காத்தல், போக்குதல் என்பன மூன்றும் முறையே படைத்தலும் காத்தலும் அழித்தலும் எனப்படும். இவற்றை வடநூலார் சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் என்பர். இறைமை-தலைமை. 'இறைமைதாமே தலைமைத்தாகும்' என்பதைக் காண்க. நிறுவினன்-வைத்தனன்.

இரண்டாவது

# கைலாசகதி

வெள்ளிமால்வரையினுச்சிவீற்றிருந்தருளுமுக்கண்
வள்ளலாரொடுசூளுற்றுமதரரிநெடுங்கட்செவ்வாய்ப்
பிள்ளைவாண்மதிநுதற்றம்பிராட்டியல்லமனைக்காண்பான்
கள்ளமாயையைஞாலத்துவிடுத்தவக்கதியுரைப்பாம். 1

ஆறுபாட்டுகள் கைலைச்சிறப்பு

இயங்குவநிற்பவானயாவையுங்கலைமாதோடு
முயங்குபுமுன்னமீன்றமுளரிவானவன்வகுத்து
வியன்புவியண்டந்தன்னுள்விதித்தனன்றகுமிடங்கள்
வயங்கெழுமசுரர்நாகர்வானவர்முதலியோர்க்கும். 2

நான்முகவண்டந்தன்னுணனிசிறந்தொப்பிகந்த
தூன்முகவிழிகளாற்கண்டும்பர்களுவகைபூப்பத்
தான்மிகுமருளான்மேனிசாத்தியபேரானந்தக்
கூன்முகமதியணிந்தகொற்றவன்கைலைக்குன்றம். 3

கொள்ளைவண்டிழிந்துதாதுகுடைந்துமூக்குழவுடைந்து
கள்ளழிந்தொழுகுசெம்பொற்கடுக்கைவேய்ந்திலகுவேணி
வள்ளல்வெண்புகழ்திரண்டவளங்கெழுகைலைக்குன்றில்
வெள்ளிவந்தத்தியாசமாகவேவிளைந்ததம்மா. 4

---

(1) சூள்-சபதம். மதர்-களிப்பு. வள்ளல்-பரமசிவன். அரி-ரேகை. பிள்ளை மதி-இளஞ்சந்திரன். நுதல்-நெற்றி.

(2) கலைமாது-சரஸ்வதி. முயங்குபு-கூடி. வயம்-வெற்றி, விதித்தான்-நிருமித்தான். இப்பாடலில் இயங்குவ நிற்பவான என்றது, நடையுள்ளதும் இல்லதுமெனக் கொள்க. இதையே வடநூலார் சராசரம் என்பர்.

(3) பேரானந்தம்-நிரதிசயானந்தம். கூன்முகமதி-கோணிய வடிவத்தையுடைய பிறைச்சந்திரன். கொற்றவன்-கடவுள். ஊன்-மாமிசம். இப்பாட்டில் சாத்திய கொற்றவன், ஆனந்தக் கொற்றவன், அணிந்த கொற்றவன், எனக் கூட்டி முடிக்க.

(4) தாது-மகரந்தப்பொடி. உழ-கிண்ட, செம்பொன் கடுக்கை-செம்பொன்போலுள்ள கொன்றைமலர். வேணி-சடை. வள்ளல்-கடவுள். திரண்ட-குவிந்த. அம்மா-வியப்புக்குறிப்பு.

கண்பிசைந்தொருசேயினுங்கலுழினுந்தனைக்கொடுப்பன்
மண்பிசைந்துண்டமாயன்மறித்திடவலியனல்ல
னண்பிசைந்திறைவனுக்கேநாமிடனாவமென்று
பண்பிசைந்தலைதிரண்டபரிசினின்றிடுமக்குன்றம். 5

ஒழுகுறுமருவியீட்டமொலியினானகுவெண்டிங்கள்
பழகுறுமுடற்களங்காற்பாகசாதனன்கூர்ங்கோட்டு
மழகளிறுமிழ்மதத்தான்மலர்மிசைக்கடவுளூர்தி
யழகுறுநடையாலன்றியறிதரப்படாவக்குன்றில். 6

விளங்கொளிதுளும்புமந்தவெள்ளியங்கிரியினுச்சி
துளங்கொளிவிரிக்குஞ்செம்பொற்சுடர்மணிச்செய்குன்றொன்று
களங்கறுபராரைத்துய்யகருப்புரக்குவாலின்மீது
வளங்கெழுசுடரொன்றுற்றுவயங்குதல்போலுமன்றே. 7

## அரசாட்சி மண்டபச்சிறப்பு

இனையதிக்கைலைவெற்பிலிறையரசிருக்கையொன்றுண்
டனையதையணியமாட்டாதப்புறம்போயினுமென்
றெனையிகழ்பவர்களில்லையிலங்குமம்மண்டபத்தின்
றனிவளமனந்தனாலுஞ்சாற்றிடற்கரிதுமாதோ. 8

## ஆதனத்திருத்தற்சிறப்பு

அன்னமண்டபத்தங்கணனோர்பகன்
மின்னுசெம்மணிவேதிகையொன்றன்மேன்
மன்னுசெங்கதிர்மண்டலத்துற்றன
னென்னவந்தங்கிருந்தனனென்பவே. 9

(5) கலுழ்தல்-அழுதல். பரிசு-உருவம். அலை, பரிசு ஆகுபெயர்கள்.

(6) நகு-விளங்குதல். களம்-களங்கம். மழகளிறு-இளமை பொருந்திய யானை. (களிறு - ஆண்யானை) துளங்குதல் - அசைதல். குவால் - கூட்டம். பராரை-பருமரத்தடி. வயங்குதல்-விளங்குதல். அன்று-ஏ அசைகள். சுடருக்கு வளம்-தூண்டப்படாமை மழுங்காமை, அலையாமை முதலியவையாம்.

(7) பராரை-பரிய அரை. கருப்புரக்குவால் - கர்ப்பூரக்குவியல். சுடர்-தீபம். உற்று-தங்கி.

(8) அணிதல்-வர்ணித்தல். அனந்தன்-ஆதிசேடன். மாது ஓ அசைகள் எனை யிகழ்பவர்களில்லை யென்றது-அனந்தனாலும் சாற்றுவதற்கரிது என்ற வாக்கியப் பொருளைக்கொண்டு சாதிக்கப்படுதலால் இப்பாடலில் செய்யுட்குறியணி தொனித்தல் காண்க.

(9) அங்கணன்-கடவுள். வேதிகை-மணல்மேடை. என்ப ஏ அசைகள்.

## 6-பாட்டுகேள் கடவுள்சிறப்பு

குழவியாயுடற்கூனிரைத்ததோர்
விழவுவாண்மதிவேணியின்மேவுறக்
கிழவியாகிக்கிரிக்கோன்மகப்பெறு
மழகுநீர்மகளாயிடைவாழ்வுற. 10

அங்கியென்றற்கடுப்பமேனோக்கிய
செங்கணொன்றுதிருநுதல்சேர்தரத்
திங்களென்றுந்தினகரனென்றும்வா
ழுங்கண்மல்குமருண்மடைபோன்றுற. 11

எண்ணுமன்பரிதயமென்புட்படு
கண்ணிபோன்றுவார்காதிடைத்தோடுற
நண்ணுமாதுமைநன்னுதற்பொட்டென
வண்ணநீலமணிமிடற்றொன்றுற. 12

நகந்தருங்கொடிகண்களைநாணியே
முகந்திரும்புமுறையிற்றிரும்புமால்
மகிழ்ந்திடங்கதிர்வீரமழுவலந்
தகுந்தகுந்தகுமென்றுநயங்குற. 13

சொற்றெரிந்தசுடர்மணிகங்கண
முற்றிலங்கவொருகருங்கேழலின்
பற்றிருந்தமதாணியிற்பட்டெனப்
புற்றருங்கலையுற்றரைபொற்புற. 14

---

(10) விழவு-உற்சவம். வேணி-சடை. கிரிக்கோன்-ஹிமோற்கிரி ராஜன். நீர்மகள்-கங்கை. ஆயிடை-அந்தச் சபையினிடத்து (மலையாசனுக்கு கங்கையும் பார்வதியும் புதல்விகள்.)

(11) அங்கி - அக்கினி. தினகரன் - சூரியன். மல்கு - பெருகுகின்ற. மடை - மதகுகள். என்றென்ற விரண்டும் செயப்பாட்டு வினைப்பொருளில் வந்தன.

(12) கண்ணி-வலை. இப்பாடலில் திலகம் நெற்றிக்கு எப்படி அழகு செய்கிறதோ அதுபோலக் கழுத்துக்குக் கறை அழகுசெய்கிறதென்றார்.

(13) நகம்-மலை. கொடிக்கு மலையிற்றோன்றலு முண்மையின் உவமையை நகந்தருங்கொடி யென்றார்.

(14) சொல்தெரிந்த - வியாகரணநூல் தெரிந்த. கங்கணம் - கடகம். கேழல்-பன்றி. மதாணி-பதக்கம். புல் - புலி. கலை - உடை. பொற்பு-அழகு. சொற்றெரிந்தவென்ற விசேஷணத்தால் சேஷகங்கணமென்பது குறிப்பிக்கப்பட்டது. புலி-தாருகவனத்து முனிவரால் விடப்பட்டது.

புரத்தைவென்றநகைக்குமென்போதினேன்
சிரத்தைவென்றசெங்கைக்குஞ்சிலைமத
னெரித்தகண்ணிற்குமின்றெனக்கூற்றடூஉத்
தரித்தவீரக்கழலொடுதாளுற. 15

## கடவுளிடத்து உமையிருந்தமை

இருந்தவாதியிடத்திலிருந்தனள்
பரந்தவானும்படியுமுயிர்களு
மொருங்குதோன்றவுதவிக்கருவுறீஇ
வருந்திலாதமணிவயிற்றன்னையே. 16

## 9-பாட்டுகள் உமாதேவிசிறப்பு

இறைவனங்கணொனுமுசசுடர்களு
முறவுகொண்டவிருளெனுமோதிமே
லறவனென்றவவ்வண்ணல்புனைந்நறு
ணறவுமிழ்ந்தநறுமலர்தாழ்ந்திட. 17

எற்றுவார்கொடியெந்தைசடைப்பிறை
யாற்றுள்வீழ்வுற்றிறப்பதற்கெண்ணுறத்
தோற்றமேவுசுடர்த்திருநெற்றியின்
ஞாற்றுமோர்மணிச்சுட்டிநலந்தர. 18

---

(15) போது-தாமரைப்புஷ்பம். போதினேன்-பிரமன். இன்றெண-இல்லையென. கூற்று-யமன். அடூஉ-கொன்று. மதனையென்னும் இரண்டனுருபு விகாரத்தால் தொக்கது.

(16) ஆதி-கடவுள். பரந்த-அகன்ற. படி-பூமி. கருவுறீஇ-சூலுற்று. மணி-அழகிய. ஏ-ஈற்றசை. சூலுற்று வருந்தலாகிய பிரசித்த காரணம் இல்லாதிருந்தும் உலகுயிரனைத்தும் ஒருங்குதோன்ற உதவுதலாகிய காரியம் பிறத்தலைச் சொல்லுதலால் பிறிதாராய்ச்சியணியாம். இவ்வணியின் இலக்கணத்தைப் பார்ப்பின், பிறிதாராய்ச்சியைப் பேசினுலகறி காரணமிலாதுறக் காரியம் பிறத்தல். இதனால் இச்சாமாத்திரமாகிய வேறுகாரணம் தோன்றல் அறிக.

(17) ஓதி-பெண்களின் தலைமயிர். அறவன்-தருமவடிவினன். (சிவபெருமான்) நறவு-தேன். இது முதல் ஒன்பது பாட்டுகளிலுள்ள தாழ்ந்திட முதலிய வெச்சங்கள் அடுக்கிப் பத்தாம் பாட்டில் இருந்த வென்னும் பெயரெச்சவினை கொண்டு முடிதலால் குளகம்.

(18) ஆறு-கங்காநதி. தோற்றம்-வடிவம். ஞாற்று-தொங்கவிடப்பட்ட. நலம்-அழகு.

ஈசனார்முகமென்னுமுளரியி
லாசைகூருமளிவிழிக்காரருள்
வாசமாமலர்வாய்க்கிளவெண்ணகை
தேசுலாமணியாகச்சிறந்துற. 19

மாணப்பூண்புனைமற்றையுறுப்பெனப்
பூணுட்பட்டிடாதோலையின்பூணென
யாணர்ச்செம்பொனிலங்கொளியோலைமேற்
காணக்காதெனும்வள்ளைகவின்செய. 20

ஓங்குவாவுடைடயும்பனயனரி
தாங்குமாவிதணங்தொழிநாளினும்
வாங்குறுவெழின்மங்கலநாணொளி
தேங்குபூணரசென்னச்சிறந்திட. 21

அரவுலாஞ்சடையண்ணலைப்பிள்ளைதான்
பருவமூன்றினிற்பாடவின்பாறரும்
பொருவில்கொங்கைப்புகழெனப்பொங்கொளி
மருவுமாரமணிவடந்தாழ்ந்துற. 22

பறந்திடாமணிவண்டுபடுமலர்
சிறந்தநீலமலரொடுசேர்பெற
மறந்திடாதுமறைமுடியின்பொரு
ளறைந்துபைங்கிளிமுன்கையமர்ந்திட. 23

---

(19) அளி-வண்டு. கூர்-மிகுதி ஆர்-நிறைநத. வாசம்-வாசனை. தேசு-ஒளி. (இப்பாடலில் முகத்திலே முளரியையும், விழியிலே அளியையும் ஆரோபிக்கப்பட்டது.) மற்றை யவயவங்களுக்குப்போல் கண்களுக்கும் வாய்க்கும் அணியில்லாமையின் முறையே அருளும் அன்பும் புன்னகையும் அணியாக உருவகஞ் செய்யப்பட்டன.

(20) யாணர் - அழகிய. ஓலை - கர்ணபத்திரம். மாண - மாட்சிமை, கவின்-அழகு.

(21) 'உவா வுடை. வும்பன்' என்றது தேவேந்திரனை. தணத்தல்-பிரிதல். (தணந்து-தணப்பவென்னும் பொருளில் வந்தது.) இப்பாட்டில் தண்டாபூபிக நியாயம் வந்திருத்தல் காண்க.

(22) பொருவு-ஒப்பு. பொங்குதல்-மிகுதல். தான்-அசை. ஆரமணி-இருபெயரொட்டுப்பண்புத்தொகை. இதில் திருஞானசம்பந்தர் உமையவளிடத்தில் ஞானப்பால் உண்ட கதை வந்திருத்தல் காண்க.

(23) வண்டு-வளையல். மறைமுடியின்பொருள் - வேதாந்தப்பொருள். (மஹாவாக்கியார்த்தம்.)

தோலுடைப்பரன்றன்மனையாட்டிதன்
பாலடுத்ததெவ்வாறெனும்பட்டரை
மேலுடுத்துவிளங்கவொண்மேகலை
நூலிடைக்குறுநோய்புரியாதுற. 24

புத்தனிச்சம்படினும்பொருமையை
யெய்ததுமற்றையிருமணத்தம்மியி
லத்தன்வைத்தவடிக்கமலங்களின்
முத்தரிச்செஞ்சிலம்புமுழங்குற, 25

22-பாட்டுகேள் மகாசபை கூடுதேற்சிறப்பு

இருந்தவாரருளெம்பெருமாட்டிபாற்
குரும்பைநாணுமென்கொங்கைப்பொறையினால்
வருந்துநூற்பகவன்னமருங்குலா
ரம்பைமாதரளப்பிலரெய்தினார். 26

முல்லையந்தொடையருந்ததிமுதலெழுமுனிவ
ரில்லறம்புரிதுணைவியராமெழுவரும்போய்
வல்லரும்பெனக்குவிமுலைப்பனிமலைமகளைச்
சொல்லருந்துதிசெய்துவாழ்த்தெடுத்தனர்தொழுது. 27

அன்னமொன்றறியாமுடிக்கங்கையையறிந்து
துன்னவந்தலமருமெகினங்களின்றொகுதி
யென்னவம்புயத்தொருசதகோடியிந்திரைகண்
முன்னடைந்துவெண்கவரிகளிரட்டினர்முறையால். 28

---

(24) ஒண் - ஒள்ளிய. உறு - வருகின்ற. இப்பாடலில் உடுத்தென்றது செயப்பாட்டு வினைப்பொருள்.

(25) அனிச்சம்-அனிச்சப்பூ, இதைத் தொட்டாச்சுருங்கி என்பர். எய்த்து-அறிந்து. அத்தன்-கடவுள். அனிச்சம்-ஆகுபெயர்.

(26) பொறை-பாரம். பகம்-பிளவு. அரம்பை-தெய்வமகள்.

(27) ஏழுமுனிவர்-அத்திரி, குச்சன், கௌதமன், பிருகு, காசிபன், அங்கீரசு, வஸிஷ்டன் முதலியோர். ஏழுமாதர் என்றது அருந்ததி முதலிய ஏழுரிஷிபத்தினிகளை. வல்-சூதாடுகருவி. பனிமலை-இமயம். முல்லை மாலை கற்புடையார்க்கு உரித்தாதலின், இங்கே அருந்ததி முதலியோர்க்குக் கூறப்பட்டது.

(28) அம்புயம் - தாமரைப்புஷ்பம். சதம்-நூறு. இந்திரை - திருமகள். துன்ன-நெருங்க. அலமரும்-சுழலும். எகினம்-அன்னம். இப்பாடலில் அன்னமொன்றென்றது நாராயணனோடு சூளுற்று அன்ன வடிவங்கொண்டு சென்று பரமசிவனுடைய முடியைக்காணாது மீண்ட பிரமனைக் குறித்தது. சதகோடியென்னுந் தொகைச்சொல் மிகுதிப்பொருளில் வந்தது; எண்ணுப்பொருளன்று பின்வரும் தொகைச்சொற்களும் இப்படியே. அண்டந்தோறு மிருந்து வருதலால் பலராதல் அறிக.

அரவுகௌவியகதிரெனப்பட்டசாந்தாற்றி
பரவையல்குல்வெண்முத்தவாணகைக்கொலைபயில்விற்
புருவமென்மலர்க்குழற்சசிகோடிகள்புகன்று
மருவியம்பிகைமருங்குநின்றசைத்தனர்மன்னே. 29

எடுத்துவீணைகளுளர்நரம்பிதுமிடறிதுவென்
றடுத்தகேள்வராம்பிரமருமறிவரிதாகப்
படத்தபாம்பணிபரன்புடைமாதுசீர்பாட்டிற்
றொடுத்துவாலியகலைமடந்தையர்பலர்துதித்தார். 30

செப்பமைந்ததண்ணுமையிசைதாளமென்சிறுதாட்
டுப்பமைந்தவொண்சதிதழீஇச்சுவையபல்காய
முப்பமைந்தவின்கறியெனநடித்தனருழையோ
டொப்பமைந்தகண்ணுருத்திரகணிகையருவந்து. 31

எந்தைபாலுமைமுக்குணங்களுமுருவெடுத்து
வந்தமாதர்களருகுநின்றனர்பணிமகிழ்உ
வந்தமாதருட்டமோகுணமாதுமையருளாற்
சந்தமாயையென்பெயர்கொடுதருக்கிநின்றனளே. 32

தெள்ளுவார்திரைக்கங்கையுங்கங்கையுஞ்சிறிய
பிள்ளையாகியமதியமுமதியமும்பெரிது
துள்ளுமோரிளநௌவியுநௌவியுந்தொடர்பு
கொள்ளுமாறவணொருங்கினவுருத்திரகுழாங்கள். 33

---

(29) பரவை-பரப்பு. அம்பிகை-உமாதேவி. மன், ஓ அசைகள். இப்பாடலில் பதுமராகத்தாற் செய்யப்பட்டவற்றிற்குச் சூரியனையும், முத்துக்களாற் செய்யப்பட்டவற்றிற்குச் சந்திரனையுங் கொள்ளவேண்டுதலினால் கதிரெனப் பொதுப்படக் கூறினார்.

(30) வாலிய-வெண்மையான. நரம்பு-வீணைக்குப் பூட்டும் தந்திரி, நரம்பு. மிடறு-ஆகுபெயர்கள்.

(31) தண்ணுமை-மத்தளம். உழை-மான். கணிகையர்-தாஸிகள். துப்பு-நன்மை. தண்ணுமை, தாளம், மான் ஆகுபெயர்கள்.

(32) தருக்கி-செருக்குற்று. சந்தம்-அழகு. ஏ-அசை. தமோகுணத் தன்மையாவது-பேருண்டி, நெடுந்துயில், சோம்பு, பொய், கொலை, மறதி, நீதிவழு, ஒழுக்கவழு, சினம், காமம் வஞ்சம் முதலிய வுடைமையாம்.

(33) தெள்ளுதல்-தெளிதல். குழாம்-கூட்டம். நௌவி-மான். ஓர்-அசை. உருத்திரகுழாம் என்றது குமரகோட்ட மென்பதுபோல் முடிந்தது. இது நன்-உயிரியல் 9-சூத்திரத்தில் கூறியுள்ள 'சிலவிகாரமாமுயர்திணை' என்னும் விதிபற்றித் தெளிக.

சங்கமொன்றுடனொன்றுதாக்குறவொளிதழைக்குந்
துங்கநேமியுமன்னவாயுறவலைசுருட்டும்
பொங்குவேலைவந்தெனவரிக்கணங்களற்புதத்த
வெங்கணாயகன்பேரவையிடத்துவந்திறுத்த. 34

முகங்கணான்கினுநான்மறைவிதிமுறைமுழங்க
வுகந்துகையிருநான்குநான்குச்சியிற்குவியச்
சகந்தருஞ்செயற்பிரமர்களளப்பிலர்தையல்
பகுந்தமேனியனவையிடைப்புகுந்தனர்பரவி. 35

அயனுமாயனுமெனினுயர்ந்தவரென்பதன்றிக்
கயிலைநாயகனமர்திருவோலக்கங்காண்பா
னயனமாயிரமிலாமையினதிகன்நானென்று
வயிரவான்படையிந்திரரெண்ணிலர்வந்தார். 36

உரகர்சித்தர்கள்வித்தியாதரர்சுரருயர்கிம்
புருடர்மெய்க்கதிர்முதலியகோடிசைபுரப்போர்
நிருதர்மற்றுளார்விழிபிதுங்கிடவுடனெருங்க
வரதனத்திருவோலக்கங்காணியவந்தார். 37

அழிவுமாக்கமுமுரையினாற்செயும்வலியடைந்தார்
மொழியும்யாக்கையுமனமுநல்லறங்களின்முயன்று
கழியுமாறுமுக்காலமுமுளர்தளைகழன்றார்
பழியிலாவதிட்டாதிமாமுனிவரர்பரந்தார். 38

குழவிபால்குடிப்பதுகடல்குடிப்பதுகுழவி
பழகுமாறுணன்மண்ணெடுத்துண்பதுபடைப்பு
முழுதுமோர்தளர்நடைமகச்செயலெனுமுரண்கொள்
வழுவிலாவருட்கணங்களெண்ணிகந்தனவந்த. 39

(34) அரிக்கணங்கள்-நாராயணருடைய கூட்டங்கள். தழைக்கும்-பெருகும். துங்கம்-உயர்ச்சி. நேமி-சக்கரம். வேலை-சமுத்திரம். இறுத்த-சேர்ந்தன.

(35) நான்மறை-இருக்கு, எஜுர், அதர்வணம், சாமம் என்பன. சகம்-உலகம். பரவுதல்-தோத்திரம்புரிதல். அவை-சபை.

(36) திருவோலக்கம்-அரசிருப்பு. நயனம்-கண்கள். அதிகன்-உயர்ந்தவன். உயர்ந்தவரல்லர் என்றது சொல்லெச்சம்.

(37) உரகம்-பாம்பு. உரகர்-நாகர். நிருதர்-இராக்ஷஸர். வரதன்-கடவுள்.

(38) ஆக்கம்-பெருக்கம். யாக்கை-தேகம். முக்காலம்-இறப்பு, நிகழ்பு எதிர்பு என்பன. தளைகழன்றார்-பாசபந்தம் நீங்கினவர்.

(39) முரண்-வல்லமை. வழு-குற்றம். கணம்-கூட்டம்.

செருக்கொடுஞ்சிவநிந்தைசெய்வாய்க்கிலைதீர்வு
விரிக்கினென் றுமுன்சிறுவிதிதலையறவெட்டி
யெரிக்குநல்கிநிந்தனைசெயாமறிமுகமியைத்துத்
தருக்கிநின்றவவ்வீரன்வந்தொருபுடைசார்ந்தான். 40

காதியாயிரமால்களைப்பிழிந்துமாங்கனிபோற்
கோதுவீசினுங்கடல்கவிழ்த்தனையசெங்குருதி
பாதியாயினுநிரம்புறுக்கபாலபாணியனும்
மாதுபாதியனவையிடைப்புகுந்தனன்வடுகன். 41

வீரமாதருக்கில்லையென்றுரைப்பதென்விளங்க
வீரமாதெனவறிகிலீரோவெனவிளம்பி
வீரயோகினிவெள்ளமோடமர்பொரவிரும்பும்
வீரகாளியும்புகுந்தனளவையிடைவிரைந்து. 42

ஊன்றுஞானமோடுயர்வயிராகநல்லொழுக்க
மூன்றுகாலெனக்கொண்டரன்முகத்திளமுறுவ
லேன்றுமாறுநின்றுடினன்சுடரவனிருளைப்
போன்றுமாயையைத்தொலைத்திடுபிருங்கியென்புனிதன். 43

படிகொண்மாமுடிக்கங்கணத்திறைபதம்படுமொண்
முடிகள்யாவையும்படுகழனந்தியெம்முதல்வ
னடிகளேந்துகையுறவடித்தொதுக்கியவ்வவையைக்
கடிகொண்மாலையம்பிரம்பொடுதிரிந்தனன்களித்து. 44

---

(40) தீர்வு-பிராயச்சித்தம். மறி-ஆட்டுக்கடா வேதத்திலே நாரணன் யாகவடிவினன் என்றும், கடவுளாகிய பரமசிவன் யாகத்தலைவன் என்றும் சொல்லப்பட்டிருக்க இங்கு வேறுவிதமாகச் சொன்னதென்னையோ வெனின், நாரணனை அதற்குத தலைவனாகவைத்துக் கடவுளை நிந்தித்தலால் தக்கனுக்கு அத்தண்டனை செயலாயிற்றென்க.

(41) காதி-கொன்று. கோது-குற்றம். வடுகன்-வைரவன். இப்பாட்டில் பரமசிவன் கைதியிற்கொண்ட கபாலத்தின் பெருமை தோன்றுதலைக் காண்க.

(42) வெள்ளம்-கூட்டம். (இப்பாடலால் மாதருக்கும் வீரம் உண்டெனக் கூறுதல் அறிக.) தாருகன் கதை உபமானமாகக் கூறுக.

(43) வயிராகம்-வைராக்கியம்.

(44) உற-பட. கடி-மணம்.

பெய்யுமாமழைமுகிலெனப்பெரியவாய்முழவந்
துய்யமாமதியனையவெண்சுரிமுகசங்க
மையவாணனும்பானுகம்பப்பெயரவனுங்
கையும்வாயுமொத்ததிர்த்தனர்செவிகரங்கவிழ்ப்ப. 45

துதிப்பரோர்சிலர்பாடுவரோர்சிலர்துள்ளிக்
குதிப்பரோர்சிலர்கைகளாற்றாளிணைகொட்டி
யதிர்ப்பரோர்சிலர்நெக்குநெக்குருகிநெஞ்சகமெய்
விதிர்ப்பரோர்சிலராயினரவையிடைமிடைந்தோர். 46

படைக்கலங்களினொளியிமையவரொளிபரித்த
தொடைக்கலங்களினொளியரம்பையர்பணைத்தோளி
னிடைக்கலங்களினொளியெலாமிருளிறைமிடற்றி
னடைக்கலம்புகநிறைந்தனபரந்தபேரவையில். 47

## 11-பாட்டுகள் கடவுளுக்குந் தேவிக்கும் வாக்குவாதம்

இன்னணமவையிடையிருந்தவெம்பிரான்
றன்னொடுவினவுமோர்தகைமையுன்னுபு
கன்னலுமமுதமுங்கைப்பவெம்முலை
யன்னைதன்வாய்திறந்துறைதன்மேயினாள். 48

தலைவநின்னவையிடைச்சார்ந்தவிப்பெரு
நலனுடையவரெலாநணுகிவெம்பவத்
தலைகிலராகியின்படைவரோவலா
னிலையிலரோவிதுநிகழ்த்துவாயென்றாள். 49

(45) ஐய-அழகிய. சுரி-சுழிந்த. வாய்-ஆகுபெயர். வாணனுக்கு ஆயிரங் கைகள். பானுகம்பனுக்கு ஆயிரம்வாய்கள் முன்வாணனும் பானுகம்பனும் சொல்லப்பட்ட முறையே பின்னும் முழவமும், சங்கமும், அதன்பின் கையும், வாயும் வரிசையாய்ச் சொல்லியுள்ளதை அலங்கார நூலார் நிரனிறை யணி என்பர்.

(46) அதிர்த்தல்-முழக்கல். விதிர்த்தல்-நடுங்கல். இப்பாடலில் வந்துள்ள ஓர் என்பன ஐந்தும் அசைநிலைகளாம்.

(47) பரித்த-தாங்கப்பட்ட. பணை - மூங்கில். அடைக்கலம்புகல்-பகைவரை அஞ்சியோர் காக்க வல்லோரை அடைந்து அவருடைமையாய் நிற்றல்.

(48) தகைமை-காரியம். உன்னுபு-நினைத்து. கன்னல்-சர்க்கரை.

(49) பவம்-பிறப்பு. இப்பாடலில் ஓகாரங்கள் இரண்டும் ஐயவினாவில் வந்தன.

விளங்கிழைநன் றுநின் வினாவென்றெந்தைமண்
ணளந்தவனயன்முதலாயினோருமின்
புளங்கொளுநாமரூபத்தொடொன்றறத்
தளைந்துளகிரியையாற்சார்கிலாரென்றான். 50

அனையதேனுமரூபக்கிரியைகளனைத்தும்வெல்ல
நினைவுறுசூழ்ச்சியொன்றுநீயெனக்குரைத்தியென்னாப்
பணிமலைதவஞ்செய்தீன்றபவளவாய்மடந்தைகூற
நனையவிழ்கொன்றைவேணிநம்பன்மற்றிதனைச்சொல்வான். 51

போகபூமியினிற்போகதனுவினாற்பொருந்தலாகா
தேகமாமின்பசித்தியியம்புறிற்கருமபூமி
யாகமானதுகொண்டன்றியாதலான்ஞாலத்தெய்தி
யோகமாநெறியினின்றோருண்மைசாதித்துக்கொள்வர். 52

என்றிதுகொழுநன்கூறவிளங்கொடியனையதாயி
னொன்றொருமக்கண்ஞாலத்துவமையின்ஞானசித்தி
நன்றுறவுணர்த்தவல்லகுரவன்யார்நவிறியென்னக்
குன்றணிமதியமொப்பக்குனித்தவன்கூறலுற்றான். 53

தொல்லையிலுயர்சுஞ்ஞானிதூய்நிராங்காரனென்போ
ரெல்லையிறவங்கள்செய்யவெமதுமெய்வடிவத்தானே
யல்லமநாமமைந்தனாயினமனையான்றன்னை
வில்லுறழ்நுதலாய்காண்டன்மிகவுனக்கரியதென்றான். 54

என்றலுமிமையவல்லியெனக்கரிதென்பதென்கொ
லுன்றனியல்லமன்றனுண்மையையறியவேண்டி
னின்றவர்தமக்கெலாமுமெளிதெனாநெகிழ்ந்துரைப்ப
வன்றினர்புரமெரித்தவணிநகையாளன்சொல்வான். 55

---

(50) இழை-கல்பதித்த ஆபரணம். நாமம்-பெயர். தளைந்து-பதிந்து. கிரியை-காரியம்.

(52) ஏகம் - ஐக்கியம். இன்பசித்தி - பேரின்பப்பேறு. ஆகம்-(மக்கள்) உடம்பு. தனு-உடம்பு. உண்மை-தத்துவஞானம்.

(53) குரவன்-ஆசாரியன். நவிறி-சொல். குன்றுகுனித்தவன் - (மேரு மலையை வில்லாக வளைத்த கடவுள்) பரமசிவன்.

(54) மெய்வடிவம்-தத்துவசொரூபம்.

(55) நெகிழ்ந்து-கலங்கி. அன்றினர்-பகைவர். அணி-அழகு.

முனிவுறேல்வறியவுன்றன்மொழியளவல்லன்மாதே
வினைதபுமன்பரன்பால்வேண்டியவடிவனாகி
யனையவர்விழியிற்றோன்றியருளுவனலமதேவன்
றனதியல்பியாவராலுஞ்சாற்றிடற்கரியதென்றான். 56

மெய்ம்மையிம்மாற்றமாகும்வேறுளார்க்கியான்செய்மாயை
பொய்ம்மலிசெயலிற்றப்பிப்போமெனிற்காண்பலென்னா
வம்மலைமகடருக்கியறைதலுநின்றனாற்றன்
மைம்மலிகுழலாய்காண்குமென்றிதுவள்ளல்கூறும். 57

இன்னணஞ்சூளியம்பியினிவறிதிருத்தியாயிற்
பொன்னவிர்சுணங்குபூத்தபுணர்முலைமடவாய்தோல்வி
நின்னிடைவருமென்றண்ணனிகழ்த்தலுமிமையவல்லி
யென்னுரைதவறாதென்னாநெடுமொழியிசைத்துப்பின்னர். 58

## மாயையைப் பூமிமேல் விடுதல்

ஆயிடையருகுநின்றதமோகுணவடிவமாரு
மாயையைவிளித்துநீபோய்மண்ணிடையல்லமப்பேர்
நாயகன்றனையறிந்துநணுகுதியென்றுகூறி
யேயினளவள்வணங்கியிணையடிதொன்றியம்பலுற்றாள். 59

## மாயை சூளுறவு

அல்லமனியல்பறிந்தங்கணைகுவனழுவுமாயின்
வல்லிதின்வலிந்துபற்றியீர்த்திவண்வருவலென்று
சொல்லினளொருசூள்வேலைசுவறவுண்டிடுவலென்று
புல்லியவெறும்பொன்றாற்றல்புகல்வதுபோலவன்றே. 60

---

(56) வறிய-வீணான. வினைதபு-கன்மத்தையொழித்த.

(57) மலி-நிறைந்த. மாற்றம்-சொல். மை-கருமை. இப்பாட்டில் வேறுளார் என்றது குறிப்பாக அயன் அரி முதலாயினோரை என்க.

(58) சுணங்கு-தேமல். புணர்-நெருங்கிய, நெடுமொழி-மேன்மையான வார்த்தை.

(59) ஆயிடை - சபையிடத்து. ஏயினள் - அனுப்பினாள். இப்பாட்டில் நணுகுதி யென்னும் முன்னிலைவினை, நணுகிடு என்னும் ஏவற்பொருளில் வந்தது.

(60) இயல்பு-சுபாவம். சுவற-வற்றும்படி. அன்று, ஏ அசைகள். வேலையைக்குடிக்கும் எறும்பொன்று இல்லாமையால் இப்பாடல் இல்பொருளுவமையாயிற்று.

அவள் பூமியடைவு

தன்னளவறியாண்மாழ்கித்தண்மதிதவழும்வேணி
முன்னவனவையுனின்றமொழிந்தவச்சூண்முடிப்பான்
பன்னகமுடிபரித்தபார்மிசைச்செலவைநெஞ்சத்
துன்னினளெய்தினளவ்வொளியிழைமாயைமாதோ. 61

இரண்டாவது

## கைலாசகதி முற்றிற்று.

---

கதி 2 - க்கு திருவிருத்தங்கள் - 83.

---

(61) மாழ்கி - மயங்கி, முன்னவன் - கடவுள். உன்னுதல் - நினைத்தல்.
மா, ஓ அசைகள்.

மூன்றாவது

# மாயையினுற்பத்திகதி

பூதலத்தைப்பொருந்துபுமாயையென்
றோதலுற்றவொருபிடிநுண்ணிடை
மாதவத்தர்மனங்கள்கலங்குறச்
சாதமுற்றுவளர்ந்தமைசாற்றுவாம். 1

## 4-பாட்டுகேள் நாட்டுச்சிறப்பு

களங்கவெண்மதிநெஞ்சங்கவற்றுமோர்
துளங்குசங்குடைத்தோன்றன்மணத்தணி
வளங்கொண்மண்மகண்மார்பின்மதாணிபோல்
விளங்குமென்பவிளவலதேயமே. 2

வாவியாவுமதன்பெருந்தூணிசெய்
யாவுமாரனெடுக்குஞ்சிலையிடங்
காவெலாமவன்காகளசாலைகள்
பூவைமார்மனைபோர்க்களமென்பவே. 3

பொறைக்கயிற்றிற் புகழையின்சொல்லெனும்
விறற்கயிற்றின்விருந்தைக்குரவர்சொன்
மறைக்கயிற்றின்மனத்தைத்திருவைநல்
லறக்கயிற்றினசைப்பவரெங்குமே. 4

---

(1) பொருந்து - அடைந்து. மாதவத்தர் - முனிவர்கள். சாதமுற்று-பிறந்து.

(2) துளங்குதல் - பிரகாசித்தல். என்ப, ஏ அசைகள். கவலுதலுக்குத் தன் களங்கமில்லாமையே ஏதுவாகலால் கவற்றுமென்றார். வளங்களாவன-நிலவளம், நீர்வளங் குடிவளம் முதலியன.

(3) வாவி-குளம். மதன்-மன்மதன். என்ப, ஏ அசைகள்.

(4) பொறை-பொறுமை. விறல்-வெற்றி. திரு-செல்வம், பலபொருள் ஒருசொல். இப்பாடலைத் திருவள்ளுவர் கூறிய 'ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப் பொன்றுந் துணையும் புகழ்' என்பதோடும், 'அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை மறத்தலி னூஉங் கில்லை கேடு' என்பதோடும் ஒப்பிடுக.

வறியனாவன்வடதிசைமன்னவ
னறிவிலாளனனந்தனுமாவனேர்
சிறியனாவன்சிலைமதன்பூம்பொழில்
வெறியுலாவும்விளவலத்தெய்தினே. 5

## 14-பாட்டுகள் நகரச்சிறப்பு

இணையிலாதவினையவளம்பல
நணுகிவாழும்விளவலநாட்டிலவ்
வணியினாப்பணமுழுத்தும்விலையிலா
மணியின்மேவும்வனவசைமாநகர். 6

படிக்குளீரப்பலாப்பழுத்தொண்புவி
வெடித்தவாயினனந்தன்மணிவெயி
லடுத்துவானத்தமர்மதியைத்தொடாக்
கடுத்தவேள்குடைக்காம்பெனத்தோன்றுமால். 7

நறவவிழ்ந்தநறுமலர்தோறும்வண்
டுறவருந்தியிருளுற்றொடுங்குமா
லறவர்தங்களகந்தொறுமையமுண்
டுறவர்தங்குகைதுன்னுதல்போலவே. 8

வாவிச்செங்கமலங்களில்வல்லிருண்
மேவித்துஞ்சிவிடிதருகாலையிற்
காவிற்சென்றுகளிவண்டினங்குயில்
கூவத்தண்மதுக்கொள்ளைகொண்டுண்ணுமால். 9

பெடையொடுற்றுப்பிரிவில்பைங்கிள்ளைகள்
குடியிருக்குங்குளிர்பொழில்வாய்மலர்ப்
பொடியுதிர்க்கிலவேலளிபோய்வயன்
மடையுடைக்குமதுப்பெருவெள்ளமே. 10

---

(5) வெறி-மணம். வடதிசைமன்னவன்-குபேரன். ஏர்-அழகு.

(6) வனவசை மாநகர் - விளவலநாட்டுத் தலைநகரம். பலவும் என்கிற முற்றும்மை விகாரத்தால் தொக்கது. இப்பாடலில் அவ்வணி என்றது- முன்னே மண்மகள் மார்பின் மதாணி யென்றதைச் சுட்டி நின்றதெனக் கொள்க.

(7) ஈரப்பலா-வேர்ப்பலா. வேள்-மன்மதன்.

(8) நறவு-தேன். அவிழ்ந்த-மலர்ந்த. அறவர்-இல்லறத்தோர்.

(9) வல்லிருள்-மிகுந்த இராப்பொழுது.

(10) கிள்ளை-கிளி. மது-தேன். அளி-வண்டு.

சேலுலாவித் திரியுநதிப்புனன்
மாலியானைமறையக்கதிர்த்தலைச்
சாலிநீடித்தழைத்துவிளைவயல்
காலினோடிக்கடிதுவிழுமரோ. 11

வரிக்கயல்செங்கமலம்வரிவளை
யிருக்கையான்மலரம்பினையேந்தலால்
விரிக்குமஞ்சிறைமென்னடைப்புள்வயல்
செருக்குவின்மதன்செங்கைநிகர்க்குமால். 12

நளிர்கடற்றுயினாரணன்றன்னுருக்
கொளவளிப்பவர்கையிற்கொடுத்திடும்
வளைபிறக்குமிடமெனவண்புனற்
குளமனைத்துங்குடவளைமொய்க்குமால். 13

தாழ்ந்தோருயர்வரென்றுமிகவுயர்ந்தோர்தாழ்வரென்றுமறஞ்
சூழ்ந்தோருரைக்குமுறைகண்டாமதில்சூழ்கிடந்ததொல்லகழி
தாழ்ந்தோரனந்தன்மணிமுடிமேனின்றன்றுயர்ந்துதடவரையைச்
சூழ்ந்தோர்வரையினுதிப்பவன்றாட்கீழ்நின்றதுபோய்ச்சூழெயிலே.

சொற்போர்புரிவர்நான்மறையாறங்கமுணர்ந்ததொழுகுலத்தோர்
விற்போர்புரிவர்நெடியசிலையிராமனனையவிறல்வேந்தர்
பொற்போர்புரிவர்பிறர்பொருளுந்தமபோற்பேணிப்புரிவணிகர்
நெற்போர்புரிவரந்நகரில்வேளாண்குலத்துநெறியினரே. 15

(11) சேல்-கெண்டைமீன். மால்-பெரிய. நீடி-ஓங்கி. அரோ-அசை.

(12) புள் - பறவை. வரிக்கயல் - மச்சரேகை. நெடிய மீனும் என்ற சிலேடைப் பொருள்படும். செங்கமலம்-பதுமரேகையும், செந்தாமரை மலருமாக விருபொருள் கொள்க. மலரம்பு - மலர்களையுடைய நீர், மலர்களாகிய கணை.

(13) நளிர்-குளிர்ந்த.

(14) அறஞ்சூழ்ந்தோர் - தரும சாத்திரத்தை ஆராய்ந்தோர். எயில்-மதில். இப்பாடலில் மதில் சூரியமண்டலம் வரையிலும் உயர்த்தப்பட்டும், அகழி நாகலோகவரையுந் தாழ்த்தப்பட்டும் இருத்தலின், உயர்தல் மதிலின் கண்ணும், தாழ்தல் அகழியின்கண்ணும் ஆரோபித்துக் கூறப்பட்டன.

(15) தொழுகுலத்தோர்-அந்தணர்.

உடுப்போர்க்குடுக்குந் துகில்களாலுண்போர்க்குண் ணும்பொருள்களாற்
றொடுப்போர்க்கெடுக்குமலர்களாலணிவோர்க்கணியுஞ்சுடரிழைய
லடுப்போர்க்கடுக்குமனைகளாற்குறைபாடுடையதன்றதுதான்
கொடுப்போர்க்கிரப்பாரில்லாதகுறையொன்றுளதுகூறுங்கால். 16

ஈசனளித்தவொருகோட்டியானைக்கியாங்களிணையாயின்
வாசவனைத்தாங்கிருகோட்டியானையெம்மைமானுமெனும்
பாசவுரற்கால்யானையொடுபாண்டிலிழுக்கும்பகடுயிற்
றேசினிரதப்பரிசிறந்தவென்னும்பரிகடெருவகலா. 17

மறையுங்கலைகள்பற்பலவுமுழங்குமொலியுமங்கலஞ்செய்
பறையுங்குழலும்யாழுமியம்பொலியுங்கரியும்பரிமாவு
நிறையுந்தெருவிலோடுமணித்தேரிஞெலியுநிறைகடலி
னறையுந்திரையிற்சென்றுவிசும்பமரர்செவியினடைந்திடுமால். 18

வேயைநகுமென்சுடர்த்தொடியதோண்மாதுமையைவிடைகொண்டு
பேயுமகன்றுவரற்கரியகைலைமலையைப்பிரிந்தெய்தித்
தூயமனமுங்கலங்கவருந்தவர்வேள்குவவுத்தோள்வீங்க
மாயைபிறந்தவனவசைமாநகரின்வளத்தையார்சொல்வார். 19

## 3-பாட்டுகள் அங்கராசன் சிறப்பு

இம்மாநகரிற்கரசாகியிருந்துவாழ்வோ
னம்மால்புணருஞ்செயன்மாதரையாகம்வைத்தல்
சும்மாபுகழன்றெனவிந்தையைத்தோளில்வைத்தோன்
கைம்மாறுவேண்டாமழைபோன்மமகாரனென்பான். 20

திறைதானளக்குந்திறல்வேந்தர்க்கரியசீரான்
குறைதானிரக்குமவர்க்கோடிக்குறுகநிற்பா
னிறைதானவெற்புமணிநாகமுநின்றுதாங்கும்
பொறைதாநெடுக்குமிகுமாற்றல்பொருந்துதோளான். 21

(16) பகடு-கடாக்கள். பாண்டில்-சகடம்.

(19) நகும்-பழிக்கும். தொடி-வளையல். குவவு-குவிந்த. வீங்க-பூரித்த லடைய. இப்பாடலில் உமையை என்றது உருபுமயக்கம்.

(20) ஆகம்-மார்பு.

(21) நிறைதானவெற்பு - நிறைந்த மதத்தையுடைய மலைபோன்ற அட்டதிக்கயங்களும். பொறை-பூமிபாரம். நிறைதானவெற்பு-அன்மொழித் தொகை.

இரப்பார்வரினோரடிஞாலமெளியதன்றிக்
கரப்பார்கரக்கும்பொருளன்றெனவீகைகற்றே
யுரைப்பாருரைக்குமுரையாவும்புகழில்வைத்தோன்
றரைப்பாலுவமையிலையாகத்தருக்கிவாழ்வோன். 22

## இரண்யோட்டுகள் அவன் மனைவி சிறப்பு

அன்னான்மனைவிவணர்வார்குழலையவேற்கண்
மின்னார்மருங்குறளர்ந்தொல்கிமெலியவிம்மிப்
பொன்னார்சுணங்குவிரிபூண்முலைப்பூங்கொம்பன்னா
ளின்னாரமுதமொழிமோகினியென்னும்பேராள். 23

ஒன்றானநம்பன்மருங்காயிழையுய்த்தமாயை
குன்றாதவாற்றன்முனிவோருளங்குன்றுமாறு
பொன்றாதபொற்பிங்கிவள்பூங்கருப்போந்துபெற்றா
ளென்றாலிவளுக்கிணையாவினியாரைச்சொல்வாம். 24

## அவ்விருவரும் மகவுக்காக நோற்றமை

இம்மகாரனுமோகினியென்னு
மைம்மலிமென்குழல்வாள்விழிமாது
மம்மகவின்மையினாரஞரெய்தி
மெய்ம்மெலிநோன்புவிளைத்தனரன்றே. 25

## அவள்கருவில் மாயையுற்றமை

முன்னியநோன்புசெய்மோகினிமாதின்
றன்னுதரத்துமைதண்ணருளாலே

---

(22) காப்பார் - உலுத்தர். (அந்த மறைத்துவைக்கப்படுகிற பொருள்- பொன் மணி முதலியன.) இப்பாடலில் பொருளுமென்னு மெச்சவும்மை தொக்குநின்றது. 'உரைப்பார் உரைப்பவை யெல்லாம் இரப்பார்க்கொன் றீவார்மேல் நிற்கும் புகழ்' என்னும் குறளுரையைக் காண்க.

(23) வணர்-வணங்கிய. ஒல்கி-தளர்ந்து.

(24) நம்பன் - கடவுள். ஆயிழை - உமாதேவி. பொன்றுதல் - கெடுதல். போந்து-வந்து. ஆயிழை என்பது ஆராய்ந்துகொள்ளப்பட்ட மணி அணியை யுடையவளென விரிதலின் அன்மொழித்தொகை.

(25) மைமலி - கருமையால் நிறைந்த. அஞர் - துன்பம். அன்று, எ அசைகள்.

(26) முன்னுதல்-கருதுதல். இப்பாடலால் ஆடவர்களுக்கு வலது தோள் துடித்தால் நற்சகுனமென்பதைக் குறிக்கிறார்.

மன்னியன்மாரன்வலப்புயமாடக்
கன்னிகைமாயைகருப்பமடைந்தாள். 26

## கருப்பகாலக்குறி

முத்தணிகொங்கைமுகங்கள்கறுத்தாண்
மெய்த்திருமேனிவிளர்த்துநரம்பு
பைத்தனமீதுபரப்பவிருந்தாள்
பொய்த்துயில்கொண்டுபுளிக்குமுவந்தாள். 27

## கருவுயிர்த்தமை

இன்னணமையிருதிங்களிருந்து
பின்னருமோகினிபெண்மகவின்று
டன்னிகர்கின்றசலஞ்சலமொன்றிங்
கின்னொளிமுத்தினையீன்றதையொத்தே. 28

## பிறந்துழிவிழா வெடுத்தமை

சங்கொடுதண்ணுமைசச்சரிதாளம்
வங்கியம்வெந்துடிவார்முரசங்கண்
மங்கலமங்கைமகப்பெறுநாளி
லங்கசன்வெம்முரசென்னவதிர்ந்த. 29

## இதுவுமது

தூண்டொளிபோன்மகடோன்றவுவப்புற்
றூண்டகைமன்னவனந்தணர்கொள்ளப்
பூண்டுகின்மாமணிபொன்னிலமற்றும்
வேண்டினயாவும்வெறுப்பவளித்தான். 30

---

(27) பைதல் - பசுமையடைதல். முதது - ஆகுபெயர். கறுத்தலாகிய உயர்திணை தொடர்ந்த சினைவினை அதறிணை முதலோடு முடிந்தது. இப்பாடலில் முலைமுகங் கறுத்தன் முதலியவை கருப்பங்கொண்ட பெண்டிர் இயல்பு கூறலின் இது தன்மை நவிற்சி அணி.

(28) திங்கள்-மாதம். பின்னர் என்பது உகரச்சாரியை பெற்று பின்னரும் என்றாயிற்று.

(29) வங்கியம்-ஊதுகொம்பு. வெந்துடி-விருப்பம் செய்கின்ற வுடுக்கை. அங்கசன்-மன்மதன்.

(30) தூண்டொளி-தூண்டப்பட்ட விளக்கு.

### அப்போது மன்மதன் செயல்

இங்கொருமாயையென்னுமெழின்முளைதோன்றலோடும்
பொங்குறுமுவகைநெஞ்சம்பொறுக்கலனாகியெய்யும்
வெங்கணைமழையுந்தூவுமென்மலர்மழையுமொன்றா
வெங்கணாமதனவேணின்றிடையறச்சொரிந்தானம்மா. 31

### அப்போது தவஞ்செய்வோர்க்கு நேரிட்ட இடையூறு

கண்ணகனிலத்தகங்கைக்கரையிலுமுழையிடத்தும்
புண்ணியவனத்துமெய்திப்புற்றுமாய்மரமாயுற்றுந்
தண்ணியபுனலிற்றீயிற்சார்ந்துமூண்டுயிருறந்து
பண்ணியதவத்தோர்நெஞ்சும்பதைத்தனமயலின்மூழ்கி. 32

### அவர் அதற்குக் காரணமாராய்ந்திருந்தமை

ஐம்பெரும்பூதமெல்லாமடுக்கழிந்தொழியும்போதுங்
கம்பமினமதுநெஞ்சங்கலங்கியதென்னைகொல்லோ
வம்புறுசெயலிஃதீங்குவந்தவாறெவ்வாறென்னாச்
செம்பொருளுணர்ந்தசீர்சால்செய்தவரிருந்தகாலை. 33

### அப்போது தூர்வாசர் வந்தமை

தளர்ந்துழியுதவுங்கல்விதானெனத்துருவாசப்பேர்
கொளுந்தனிமுனிவர்கோமான்குறுகலுமுனிவரெல்லா
முளங்களிவரநின்றேத்தியுயர்தவிசிடையிருத்தி
வளங்கெழுமலர்கடூவிவந்தனைசெய்துசொல்வார். 34

---

(31) இப்பாட்டில் 'எழின்முளை தோன்றலோடும்' எனவே உயர்வொப்பில்லாத அழகே ஒரு பெண் வடிவங்கொண்டு பிறந்தது என்று விளங்குகின்றது.

(32) முழை-மலைக்குகை. தீ என்பது இங்கு பஞ்சாக்கினியைக் குறிக்கின்றது. பஞ்சாக்கினியாவது-இராகம், காமம், கோபம், சடம், தீபம் என்பனவாம். 'ஆய்' இரண்டும் வினையெச்சத்திரிபு.

(33) ஐம்பெரும்பூதம்-பஞ்சமகா பூதங்கள். அவையாவன - பிருதிவி அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்பன. கம்பம்-நடுக்கம். ஓ-அசை.

(34) தூவி-சொரிந்து. 'தளர்ந்துழி யுதவுங்கல்வி' என்பதை 'உறுங்கவலொன்றுற் றுழியுங் கைகொடுக்கும்' என்ற குமரகுருபரர் வாக்கானும் அறியலாம்.

## முனிவர்கள் வினு

என் றுமெம்முள் ளமெல்லாமெழு தியவிளக்குப்போல
நின் றிடுமின் றென்கொல்லோநிலைதடுமாறுநின் ற
தென் றன் முனிருந்தசெய்யசிறுசுடர்போலவைய
நன் றிதையுணருமாறுநவின் றருள்செய்தியென்றார். 35

## அதற்கு அவருத்தரம்

சங்கரியொருசூளாற்றன் றமோகுணவடிவமாயை
மங்கையைவிடுப்பவன் ளுள்வனவசைநகரிற்பிள்ளைத்
திங்களினுதித்தாளின் றுசெய்தவக்கிழமைபூண்டீ
ருங்கவெஞ்சதனுலாற்றலுடைந்தநெதன் றவனுரைத்தான். 36

## அதனை அங்கீகரித்தமை

அருந்தவமுனிநீகூறிற் றுண்மையேயன் றியெங்கள்
பெருந்தவமுயனுநெஞ்சம்பிறழ்தரற்கேதுவில்லை
யிருந்துளம்வருந்தியாய்ந்தவெம்மிடையையமெல்லாம்
பரிநதனவருளானீயெம்பால்வருகையினுலென் று. 37

## அதனை விரித்துரையென்றமை

முனிவரர்துருவாசப்பேர்முனிவர்கோன் றனைவழுத்திப்
பனிமலைவல்லியேவப்பட்டெழின்மாயையென் னும்
வனிதையிவ்வுலகில்வந்தவாறுநீவிரித்தியாங்க
ளினிதுணர்வுறுமாறோதுகென் றலுமவனுரைப்பான். 38

## அவ்வாறுரைத்தமை

கயிலையோலக்கத்துற்றகண் ணுதலல்லமன்ற
னியல்பினையறிதற்றெறருயென் றுமையுடனுரைப்ப
மயிலியலறிவலென் றுமாயையைவிளக்கைக்காண்பான்
பயிலிருளினைவிடுத்தபரிசெனவிடுத்தாளன்றே. 39

(36) கிழமை-உரிமை.

(37) பரிந்தன - களையப்பட்டன. வினைமுற்று - செயப்பாட்டு வினைப் பொருளில் வந்தது.

(38) வழுத்தல்-துதித்தல்.

(39) ஓலக்கம்-திருக்கூட்டம். இயல்-தன்மை. பரிசு-விதம். கண்ணு தல், மயிலியல் அன்மொழித்தொகைகள்.

அவ்விடையூறு நீக்குமாறு கூறினமை

காரணமிதுவேயெங்கோன்கைலையைவிடுத்துமாயை
தாரணிதனில்வரற்குத்தக்கவம்மாயையென்னு
மாரணவிடங்கலந்தமயக்கமல்லமனென்றிட்ட
பேரணிகளுமன்றன்னைநினைந்திடிற்பெயருமன்றே. 40

இதுவுமது

பிணிதபவேண்டில்வாழ்நாள்பெரிதுறவேண்டிற்செல்வ
மணிதரவேண்டிற்கல்வியறிதரவேண்டில்வானம்
பணிதரவேண்டின்முத்திப்பயன்பெறவேண்டிலென்று
மிணையறுமில்லமப்பேரெந்தையைநினைப்பரென்று. 41

புகன்றவருளத்திற்றுன்பம்போக்குபுதுருவாசன்று
னகன்றுதன்னிடத்தடைந்தானன்றுதொட்டருந்தவத்தோர்
மகிழ்ந்தருளல்லமன்றன்மலரடிமனத்திற்றுங்கி
யுகந்தவன்புகழாய்வந்தவாறெலாமுரைக்கலுற்றார். 42

அது நீங்கினமை

நெஞ்செனுமகலிலன்பாநெய்நிறைத்துள்ளமென்னும்
பஞ்சுறுதிரியினுச்சிபற்றிடவல்லமப்பே
ரஞ்சுடரிலகவேற்றியருந்தவர்மாயையென்னுந்
துஞ்சிருளகன்றிருந்தார்தொல்லைமாதவங்கள்செய்து. 43

மந்தரகிரிப்பேர்பெற்றமத்தெறிகடல்போலையர்
சிந்தனைகலங்கிமெல்லத்தெளிந்தமைதெரிந்துரைத்தாம்
வந்துமண்பிறந்தவன்றேமாதவர்மனங்கலக்கும்
வெந்திறன்மமகாரன்றன்மகடிறம்விளம்பலுற்றாம். 44

(40) மாரணவிடம்-மரணத்தைச் செய்கின்ற விஷம். (காருட மந்திரத்தால் விஷரோகந் தீரும் என்பது வெளிப்படை.)

(41) தப-கெட. இணை-ஒப்பு.

(43) துஞ்சிருள் அகன்று - அழிவுக்குக் காரணமாகிய இருள் நீங்கப்பெற்று.

(44) ஐயர்-முனிவர்கள்.

## தந்தை நாமகரண முதலிய செய்தமை

*காந்தம்வலியுமிரும்புபோற்கண்கடன்னோடுறப்பிணித்து*
*நேர்ந்தமனமோரணுவென்னனியாயமன்றென்றம்மனத்திற்*
*போந்தவாசைப்பெருங்கடலைப்புகட்டுமகளைக்கண்டுவந்து*
*வேந்தன்மாயையெனுநாமம்விளம்பிச்சிறப்புப்பலசெய்தான்.* 45

## 4-பாட்டுகள் மோகினி மகளை வளர்த்தமை

*மாயைப்பெயர்கொண்மகளைநறுமஞ்சடிமிர்ந்துகணைக்காலி*
*னேயக்கிடத்திநீராட்டியிணைக்கணுந்திநீரூதி*
*நேயத்துகிலின்மெய்துடைத்துநெகிழ்மென்முலையோடுறத்தழுவி*
*வாயிற்றிவலைகொடுதேய்த்துமண்பொட்டணிந்துநீறிட்டு.* 46

*கண்ணிற்கமையமையெழுதிக்காற்குச்சதங்கைபொற்றண்டை*
*நண்ணப்புனைந்துபொன்னரைஞாணடுவிற்பூட்டிப்புலியுகிர்சேர்*
*வண்ணப்பசும்பொனணிமார்பில்வனைந்துசிறுமென்றொடிசேர்த்திப்*
*பெண்ணிற்கரசிதிருநுதற்பொற்பிறைமேற்சுட்டியொன்றணிந்து.*

*போக்கும்பொருளாற்கண்மிச்சில்போக்கியன்பான்முலையூட்டித்*
*தூக்கும்பவளக்காற்பசும்பொற்றொட்டின்மலியக்கிடத்தியே*
*பார்க்குஞ்சுவைவானமுதமேபார்வேந்தணியேயென்றுயரந்*
*தீர்க்குங்கரும்பேகண்மணியேதிருவேயென்றுசீராட்டி.* 48

*மிடியனொருசெய்யாளனச்செய்விளையக்காக்குஞ்செயல்போலப்*
*படியில்கல்விவிரும்பினோன்பாடம்போற்றுமதுபோல*
*வொடிவில்செங்கோன்மனுவேந்தனுலகம்புரக்குமுறைபோலக்*
*கொடியநோன்புசெய்தீன்றகொடியைவளர்த்தாண்மோகினியே.* 49

---

(45) நேர்ந்த-இயைந்த. இப்பாடலில் ஆசைக்கடலாகிய பெரிய ஆதேயத்தினும், மனமாகிய ஆதாயத்தைப் பெரிதாகக் காட்டியுள்ளது.

(46) திமிர்ந்து - பூசி. இணைக்கண்ணுந்தி - இரண்டு கண்களிலும் நீர் விழாமலொதுக்கி.

(47) உகிர்-நகம். வளையலுக்கு மென்மை வழுவழுப்பு.

(48) மிச்சில் - குற்றம். மலிய - நிறைய. போக்கும் பொருள் - செஞ்சோற்று நீர் முதலியன.

(49) மிடியன்-ஏழை. செய்-வயல். படியில்கல்வி-ஒப்பில்லாத கல்வியை ஒடிவில்-கெடுதலில்லாத. மனு, கொடி ஆகுபெயர்கள்.

## 4-பாட்டுகள் மாயை வளர்தற்சிறப்பு

கள்ளமாயைதன்னெழில்போற்கண்டதில்லையென்னமிக
வுள்ளம்வியந்துதலையசைப்பதொப்பவசையுஞ்சுடர்பார்த்து [து
மெள்ளவிரலொன்றனைச்சுவைத்து மிளிர்பூஞ்சதங்கைத்தாளுதைத்
விள்ளுமலர்வாய்குவித்தழுதுமீளநகைத்துங்கிடக்குமால். 50

மாயைகவிழமுகங்கவிழ்ந்தமதனனிருந்தானவளிருப்பப்
போயசிலையொன்றெடுத்தெழுந்தான்பொன்னாலியன்றபாவையெழ
மேயவனங்கவேணடந்தான்வேந்தன்பயந்தமகணடப்பத்
தூயதவஞ்செய்தைந்தவித்ததுறவினோர்பாலோடினான். 51

குழலும்யாழுமினியவெனக்கூறுவண்ணமென்கனிவாய்
மழலைமொழிந்துமுடற்கின்பமருவவோடிமேல்விழுந்தும்
விழையுமமிழ்தின்மிகவினிமைவிளையநுகருஞ்சுவையடிசில்
செழியசிறுகையாலளைந்துஞ்செய்தாண்மோகமீன்றோரை. 52

பரவுபெருஞ்சீரல்லமனைப்பற்றவந்தமதியாற்றன்
னுருவநிழலைப்பற்றநினைந்தோடியோடிக்கலுழ்ந்திடுவாள்
பொருவின்மதியமேன்முனிந்துபொங்குமழலைவிசாமன்
மருவியுறவுகொள்வாள்போல்வாவாவென்னவழைத்திடுவாள். 53

---

(50) சுடர் - விளக்கு. விள்ளல் - விரிதல். ஆல் - அசை. சுடர்பார்த்தல் குழந்தைகளுக்கு இயல்பு.

(51) ஐந்தவித்து - ஐந்தாசையுமொழித்து; ஐந்தென்பது - மெய், வாய், கண், மூக்கு, செவி முதலாயின. அவற்றாலுண்டாகும் அவாவை அறுத்தலாம்.

(52) குழல்-புள்ளாங்குழல். மழலைமொழி - உருத்தெரியாத வார்த்தை. விழைதல்-விரும்புதல். அடிசில்-சோறு, குழல், யாழ் இரண்டும் ஆகுபெயர்கள். ஈன்றோரை என்றது உருபுமயக்கம். திருக்குறளில் 'குழலினிதி யாழினி தென்பதம் மக்கண் மழலைச்சொற் கேளாதவர்' என்றும், 'மக்கண் மெய்தீண்ட லுடற்கின்ப மற்றவர் சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு' என்றும், 'அமிழ்தினு மாற்ற வினிதே தம்மக்கள் சிறுகை யளாவிய கூழ்' என்றும் சொல்லப்பட்டமை காண்க.

(53) மருவி-அடுத்து. பொங்கு - கொதிக்கின்ற. மதி-ஆகுபெயர், அது குறிப்பினாலே பேதைமையை யுணர்த்தி நின்றது.

## அவள் பெதும்பைப்பருவ மடைந்தமை

*மாதிப்பரிசுதந்தைதாய்மகிழவளர்வுற்றரசிருந்த*
*நீதிக்கிழவனிறப்பவவனெறிசேரிளஞ்சேயவன்றவிசின்*
*மீதுற்றதுபோன்முன்முளைத்தவெண்பல்விழவேறெயிறுதிப்பப்*
*பேதைப்பருவங்கடந்துமேற்பெதும்பைப்பருவநண்ணினாள்.* 54

## அப்பருவச்சிறப்பு

*செய்யவல்லகம்மியன்செய்சிங்கஞ்சுமந்தமணியணைமேற்*
*பையவந்துமணிமௌலிப்பார்வேந்திருக்கும்பரிசுபோல்*
*வெய்யகுதம்பைவளர்த்தகலவிழுநீர்வள்ளைக்காதினிடைத்*
*துய்யபசும்பொன்மணிகுயின்றதுணைத்தோடமையத்தோன்றினாள்.*

## 3-பாட்டுகள் அப்பருவத்தின் வளர்ச்சி

*மட்டுக்கணைவேளரணாகவளர்த்தகுழற்காடலர்விரவிக்*
*கட்டுற்றதுநம்பரன்களத்திற்கடுவும்விழிகள்சிறிதுற்ற*
*முட்டித்துறவாம்பறவைமயன்முடியிற்படுதன்மெல்லமறைந்*
*தெட்டிப்பார்ப்பவெனமுகங்கொண்டெழுந்தமார்பிலிளமுலைகள்.* 56

*அன்னநடையுமன்னமிலாவையர்நடையுந்தளர்வெய்தக்*
*கன்னிநடக்குநடைகற்றாள்கரும்புகசக்குமொழிபெற்றாண்*
*மன்னுமலர்வீழ்சுரும்பனையமைந்தர்பார்வைக்குறிப்புணர்ந்தாள்*
*தன்னையரியளெனவறிந்துதானேமனத்திற்றருக்குற்றாள்.* 57

---

(54) *நீதிக்கிழவன்-அரசன்.*

(55) *கம்மியன்-கம்மாளன். பைய-மெல்ல. குதம்பை-தக்கை. நீர்-குணம் குயின்ற-பதித்த. தோடு-குண்டலம்.*

(56) *மட்டு-தேன். அலர்-பழிமொழி, மலர் என இருபொருள் தந்து, சிலேடையாக நின்றது. கடு - விஷம். துறவாம் பறவை - துறந்தோராகிய பறவைகள். மயல்-மயக்கம். முடி-வலை. இப்பாடலில் மலை, காடு, மதில், அகழி என அரணம் நான்காதலின் இங்கே காட்டரண் சொல்லப்பட்டது. கடு, துறவு ஆகுபெயர்கள்.*

(57) *கசக்கும் என்றது பிறவினைப் பொருளில் வந்தது. மலர்க்குவளம்-தேனும் பொடியும் வாசனையும் பெற்றிருத்தல். இவைபோல உபமேயத்தில் வடிவும் அழகும் இளமையுங் கொள்க. குறிப்பு - தன்மேற்காதற் கருத்து. செருக்கு-வடிவ முதலியவற்றால் பிறமகளிரை யெல்லாந் தன்னிற் றாழ்ந்தவராக மதித்தல்.*

இந்தக்கன்னிமதிமுழுநோக்கெய்திச்செவ்வாய்வலியடைந்து
சந்தச்சிங்கந்தனையடுத்ததக்கவரவின்வலிசார்ந்து
முந்தைக்கொடிமீனத்தலைவன்முனிவராகும்பகைவெல்லக்
கந்தப்பகழிபலவேழக்கருப்புச்சிலையிற்றொடுத்தனனால். 58

### மங்கைப்பருவ மடைந்தமை

பாகமாகப்பொங்கியெழும்பதமேபோலப்பொங்குமெழின்
மோகமாயைதன்பருவமுன்னிமுடிவேந்தயனுமா
லாகுமாட்டொன்றுபுரிந்ததன்கட்கல்விபற்பலவும்
போகுமாதர்பலர்சூழப்போற்றியிருப்பசெய்தனனால். 59

### 5-பாட்டுகள் அவள் பொழுதுபோக்கு

வாய்த்துளவம்மணிமாடநண்ணுபு
பாத்தொடைபற்பலபயின்றுந்தந்திரி
நாத்தனியாழைமாணுக்கனென்றுதான்
பேர்த்துளர்விரல்களாற்பேசுவித்துமே. 60

---

(58) சந்தம் - அழகிய. மீனக்கொடியோன் - மன்மதன். கந்தம்-மணம் ஆல்-அசை. வேழக்கரும்பு-இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

(59) பாகம்-பக்குவம். ஆல் - ஈற்றசை. கல்வி பற்பலவாவன: அக்ஷர லக்ஷண முதலிய அறுபத்துநாலு கலைகள்.

(60) நண்ணுபு-அடைந்து. பாத்தொடை-பாமாலை. தந்திரிநா-நரம்பாகிய நாக்கு. பேர்த்துளர் விரல்களால்-அசைத்துத் தடவுகின்ற விரல்களாலே. இப்பாட்டில் யாழை வேறு பிரித்துக்கூறிய தெற்றுக்காகவெனின், பாத்தொடை பற்பலவென்றது யாழின்றி மிடற்றாற் பாடப்பட்டவற்றை. அவையாவன: ஏழிசைகளின் முறைவழுவாது பைரவி முதலாகிய முப்பத்திரண்டு இராகங்களாலும் அமைத்துப் பாடப்பட்ட பாட்டுகள். ஏழிசைகளாவன-குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன. முப்பத்திரண்டு ராகங்களாவன - பைரவி, தேவக்கிரியை, மேகரஞ்சி, குறிஞ்சி, பூபாளம், வேளாவளி, மலகரி, பௌளி, ஸ்ரீராகம், இந்தோளம், பல்லதி, சாவேரி, படமஞ்சரி, தேசி, லலிதை, தோடி, வஸந்தம், ராமக்கிரியை, வராளி, கைசிகம், மாளவி, நாராயணி, குண்டக்கிரியை, கூர்ச்சரம், பங்காளம், தன்னியாசி, காம்போதி, கௌளி, நாட்டை, தேசாக்ஷரி, காந்தாரி, சாரங்கம் என்பனவாம். பயின்று என்றமையால்-பாடும்போது கண்ணிமைத்தல் முதலிய குற்றங்களின்றிப் பாடுதல் வல்ல சிறப்பும் குறிப்பிக்கப்பட்டது.

அங்கொருமடவரலதிர்ப்பத்தண்ணுமை
மங்கையர்சிலரிசைமரபிற்பாடுறக்
கொங்கவிழ்மலரளிகுமுறத்தென்றலாற்
பைங்கொடியசைதல்போற்பாடியாடியும். 61

(60-வது பாடலின் தொடர்ச்சி)

"கண்ணிமையா கண்டந் துடியா கொடிறசையா
பண்ணவை வாய்தோன்றா பற்றெறியா-வெண்ணிலிவை
கள்ளார் நறுந்தெரியற் கைதவனே கந்தருவ
ருள்ளாளப் பாட லுணர்."

என்றதனால், தனியாழென்றது பேரியாழ், மகரயாழ், செங்கோட்டியாழ், சகோடயாழ் என்னும் நான்கினுள்ளே சிறப்புடையது பேரியாழென்பதும், அது இலக்கணப்படி தண்டு, பத்தர், நரம்பு, முருக்காணி, கொழுவாணி முதலிய வெல்லாம் அமைந்துள்ளதென்பதும் பெறப்படும். இவற்றிற்கு நரம்புகள் பேரியாழிற்கு இருபத்தியொன்றும், மகரயாழிற்குப் பதினேழும், சகோடயாழிற்குப் பதினாறும், செங்கோட்டியாழிற்கு ஏழுமென வறிக. பேர்த்தெனவென்று மிகுத்துக் கூறியதால் பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, விளையாட்டு, கையூழ், குறும்போக்கு எனப்படுகின்ற எட்டுக்கலைத் தொழில்களையுஞ் செய்தல். அவற்றுள்-பண்ணல், பாட நினைக்கப்பட்ட பண்ணுக்கு இணை கிளை பகை நட்பான நரம்புகள் பெறுந்தன்மை மாத்திரை அறிந்து கட்டுதல். பரிவட்டணை-அக்கட்டப்பட்ட நரம்பை அகவிரலாலும் புறவிரலாலும் அனுகரணஞ் செய்து தடவிப் பார்த்தல். ஆராய்தல்-ஆரோகண அவரோகண வகையால் இசையைத் தெரிதல். தைவரல்-அதைச் சுருதி ஏற்றுதல். செலவு - ஆளத்திலே நிரம்பப்பாடுதல். கையூழ்-பாட நினைக்கப்பட்ட வண்ணத்திலே சந்தததை விடுதல். விளையாட்டு-வண்ணத்திற் செய்யப்பட்ட பாடலெல்லாம் இன்பம் பிறக்கப் பாடுதல். குறும்போக்கு-குடகச்செலவும் துள்ளற்செலவும் பாடுதல். அன்றியும் வார்த்தல், வடித்தல், உந்தல், உறழ்தல், உருட்டல், தெருட்டல், எள்ளல், பட்டடை எனப்படுகின்ற எண்வகை இசைக்கரணஞ் செய்தலுங் கொள்ளப்படும். பேசுவித்தென்றதனால் மிடற்றோசையும் ஏழாலும் வேற்றுமை காணப்படாமை அறிக. மற்றும் இவற்றின் விரிவைத் தெரிந்துகொள்ளவேண்டின், இசைநூல் சிலப்பதிகாரம் முதலிய நூல்களைக்கண்டு தெளிக.

(61) மரபு-முறைமை. குமுற-ஒலிசெய்யாநிற்க. இப்பாடலால் இவளது சங்கீதத்திற்கும் பரத நாட்டியத்திற்கும் உற்ற துணையாக விருந்தது பெண்டிரே என்பதும் பெறப்படுகிறது. துணையாவார்-ஆடலாசிரியன், பாடலாசிரியன், யாழாசிரியன், தண்ணுமையோன், குழலோன் முதலியோராவர்.

வருமுலையிறைக்கிணையாகவந்துறக்
காமெனுமேவலன்புடைக்குங்காட்சிபோல்
விரைமலரோதிமேன்மிஞிறிரைந்தெழப்
பருமணிகுயின்றமென்பந்தடித்துமே. 62

பூந்தொடைவார்குழல்புனைந்துநல்விரைச்
சாந்தமுநானமுந்துயங்கப்பூசியு
மேந்திழைபலவுறப்பிசையத்தாங்கியு
மாந்துறுசுவைபலவகையமாந்தியும். 63

தீங்கனிபாலொடுசெம்பொற்பஞ்சரந்
தாக்குறுபைங்கிளியூட்டித்தன்மொழி
யாங்கதுபயில்வுறவளித்துங்கற்பகப்
பூங்கொடியனையவள்பொழுதுபோக்குநாள். 64

## 8-பாட்டுகள் மணத்தலைவனைத் தேர்தல்

தென்னவன்செம்பியன்சேரன்கொங்கண
மன்னவன்மாளுவன்மகதநாட்டிறை
யென்னுமிங்கிவர்தமுள்யாவர்கண்ணதோ
கன்னிதன்மணவினைக்கடனென்றுன்னியே. 65

ஆய்ந்திருந்தனன்மமகாரனுயிடைப்
போந்தனனவன்குருவாகப்போற்றறுஞ்
சாந்தவாங்காரனுந்தகுதிப்பேரினோன்
வேந்தனுமெதிர்கொளீஇவிதியிற்றாழ்ந்தனன். 66

---

(62) காட்சி-தோற்றம். விரை-மணம். மிஞிறி-வண்டு. இது ஞிமிறு என்பதன் போலி.

(63) நானம்-கஸ்தூரி. மாந்து-குடி.

(65) தென்னவன் - பாண்டியன்; இவன் பகர்சீர்ப் பொருநையும், செந்தமிழ் நாடும், திகழ்பொதிய மலையும், வைகை யாறும், மலிவேம்பாரமும், கனவட்டமாகக் கழறுங் கற்கியும், மீனக்கொடியு முள்ளவன் என்க. செம்பியன்-சோழன்; தொல்லுறையூருந் தண்புனனுடும், தனி நேரிமலையும், காவிரியாறும், கவினார்மாலையும், கோரமென்னுங் குதிரையும், வரிப்புலிக் கொடியு முடையவன். சேரன்-திகழ்சீர் வஞ்சியும், குடநாடும், கொல்லி மலையும், பொருனையாறும், புகழ்பனைமாலையும், பாடலமென்னப் பகருங் குதிரையும், விற்கொடியு முளன்.

மன்னவன்வந்தனமரபிற்கொண்டவன்
கன்னிதனெழினலங்காணப்போயினு
னன்னவளெதிர்நடந்தாரியன்றனைச
சென்னியின்வணங்குபுசிறப்புசசெய்தனள். 67

மாந்தளிராலிலைவயங்குகோங்கரும்
பேந்தெழின்மரைமலரெய்தியற்புதப்
பூந்துணர்வல்லிநேர்பொன்னைக்கண்டவ
னேர்ந்தனன்காரணமாதென்றுன்னியே. 68

மாதுருவுறுகுறிமதித்தறிந்தவ
ஞதரவொடுமுடியரசைநோக்கிநின்
கோதையையார்கொலோதோளிற்கொள்பவ
ரோதுகவென்றலுமுரைத்தன்மேயினுன். 69

உணர்ந்திலனடியனேனெருநங்கோதைதன்
மணந்தனக்குரியவர்மனிதர்வானவர்
கணங்களுளொருவரைக்கருத்திற்றேர்ந்துநீ
யிணங்குறவெனக்கிவணியம்புகென்றனன். 70

கொங்கவிழ்தொடையினுய்கூன்கொக்கன்றுவான்
கங்கையையடைவதுகடவுளன்னமே
மங்கையையணைபவர்மனிதரல்லர்நஞ்
சங்கரனேயிவடலைவனென்றனன். 71

மாலுநான்முகனுநாடரியவள்ளலிவ்
வேலவார்குழலினுட்கெளியனேவென
வாலமார்மிடற்றினேனன்பர்வேண்டிய
கோலமாய்நணுகுமீதுண்மைக்கூற்றென்முன். 72

---

(67) வந்தனம்-வழிபாடு. சென்னி-தலை.

(68) வயங்குதல் - விளங்குதல். துணர் - பூங்கொத்து. வல்லி-கொடி. பொன்-திரு.

(69) கோதை-பெண். தோளிற்கொள்பவர் - பாணிக்கிரகணம் பண்ணுவோர். கோதை என்றதற்கேற்பத் தோளிற்கொள்பவர் என நயம்பெற உரைத்தார். (குறியாவது யாதெனின்: கரதலத்தில் தோன்றும் இரேகைகள். அதை ரேகைசாத்திர முணர்ந்தவர்களின்பாற் கேட்டுணர்க.) இனி அங்க இலக்கணத்தாலறிதல் என்னினுமமையும்.

(71) தொடை-மாலை.

(72) ஆலம்-விஷம். மிடறு-கழுத்து. கோலம்-வடிவு.

அவளுக்கு உபதேசஞ் செய்தமை

இன்னணமாசனேடியம்பிமாயையாங்
கன்னியைவிளித்தவள்கருத்திணங்குறச்
செந்நிலைதனையுபதேசித்தேகினன்
றன்னிகர்குருபரன்றனதிடத்தரோ. 73

குருவருண்மொழிநெறிகொண்டுமாயைதான்
வரவனவசைநகர்மதுகைநாதனைப்
பரவினளருச்சனைபயின்றுபூசனைக்
கருவிகண்முழுவதுங்கடைப்பிடித்தரோ. 74

மூன்றாவது

மாயையினுற்பத்திகதி முற்றிற்று.

---

கதி 3 - க்கு திருவிருத்தம் - 157.

---

(73) இணங்குற-பொருந்த. செந்நிலை-செவ்வையான அனுஷ்டானநிலை. குருபரன்-தேசிகோத்தமன். இப்பாடலில் உபதேசித்து என்று கூறியதனுல் தீக்ஷை செய்தமையும் பெறப்பட்டது.

(74) அருண்மொழி-உபதேச வார்த்தை. கடைப்பிடித்தல்-குறைவறச் சம்பாதித்தல். பரவுதல்-வழிபடல்.

நான்காவது

# மாயைபூசைகதி

பதியைமேவுறுங்காதனெஞ்சகத்தினுட்பதித்து
மதுகைநாதனைவரன்முறைவழிவிழிமாயை
யுதயகாலையிற்பூசைசெய்நாள்களுளொருநாள்
விதியையோதுவன்குவிமனத்தவர்கொளவிரித்து. 1

விதுவைச்சேய்மையிற்கண்டலர்குவளைகண்மேவிய
முதிர்விற்பூணிளமுலையெழின்மாயைதன்முகமா
மதியைச்சேர்தருவரிக்கருங்குவளைகண்மலரக்
குதிரைத்தேரவனெழுந்தனன்குணதிசைக்குன்றில். 2

அனையகாலையிலன்னமென்றூவிபெய்யணைமேற்
றனியண்மாமயில்போற்றுயின்றவடுயிறணந்து
வினையினுன்மலிமஞ்சனசசாலையுண்மேவி
யினியவாசநீராடினள்சேடியரேந்த. 3

விலைவரம்பறியாமணிக்கோவைசூழ்விளிம்பு
கலையணிந்தொருதலைமுலைமேலலங்கரித்தாங்
முலையொடுந்துகில்கண்டநாண்முதற்றொடர்ந்தன்றே
விலகுறுங்கலைவல்லவர்கடபடாமென்றல். 4

மணியமைந்தபொற்பாதுகையொருத்திமுன்வைப்பப்
பிணியவிழ்ந்தசெந்தாமரைப்பதங்கொடுபெயர்ந்தே
யணியணிந்திடுமண்டபத்தணைமிசையமர்ந்தாள்
பணியணிந்திடுமங்கையரடைந்தனர்பலரே. 5

---

(1) வரன்முறை-வேதாகமவிதி.

(2) விது-சந்திரன். வில்.ஒளி. குணதிசை-கிழக்குதிசை.

(3) தூவி-அன்னத்தின் இறகு. துயில் தணந்து - விழித்துக்கொண்டு. வினை-தொழில். மஞ்சனச்சாலை-ஸ்நானஞ் செய்யுமிடம். சேடி-பணிவிடைப் பெண்.

(4) விளிம்பு-கரை. ஒருதலை-முன்றானை.

(5) பிணி-கட்டு. அணி-ஆசனம்.

மாரவேள்சிலைவளைந்திடப்பூட்டியவண்டு
நாரியோர்தலைநெகிழ்த்துவிட்டெனவொருநாரி
காரவாமலர்க்குழற்சடைகைபுனைந்தியற்றி
வீரவேனெடுங்கண்ணிதன்முதுகுறவிடுத்தாள். 6

பின்னும்வேணிவார்குழலெனுங்கரியபேரரவ
முன்னமார்தருசுடர்களையுமிழ்ந்திடுமுறைபோற்
கன்னிவாணுதன்மிசைக்கதிர்பிறையொடுகவினப்
பொன்னவாஞ்சுணங்கவிர்முலையொருத்திகைபுனைந்தாள். 7

ஓதியாகியவறன்மிசைச்சுவடுறவூர்ந்து
தீதிலாதவொண்சந்தனத்திலகவெண்மதிக்குப்
போதுமோர்சிறுபாம்பெனமயிர்வகிர்ப்பொருந்தச்
சோதிமாமணிச்சுட்டியொன்றொருத்திதூக்கினளால் 8

வேனலம்பதிகொலைவிடமூட்டியவெவ்வேன்
மானவஞ்சனமெழுதியவிழிபொரவரலாற்
றூனதன்பகைதனைத்துணைகொண்டுறுந்தகைபோற்
பானலஞ்செவிமிசையணிந்தனளொருபாவை. 9

அடுத்துமாதவமழிமினென்றனங்கவேடமக்கு
விடுத்தவோலையைக்கண்கடம்மேற்பழிவிளம்பிற்
கொடுத்தவெண்மிசைநிந்தைகூறுதற்குவைத்திருத்தல்
கடுத்துவாழ்தரவொருத்திபொன்னோலைகாதணிந்தாள். 10

தன்னைநிந்தைசெய்வெண்ணகைமேற்பழிசார
மன்னியங்கதுநிகரறவாழ்மனைவாய்தன்
முன்னிறந்திடுவேனெனஞான்றுகொண்முறைமை
யென்னவெண்மணிமூக்கணியொருத்திநின்றிட்டாள். 11

கற்றையங்குழனறுமலர்த்தொடையொடுகனமா
யுற்றணங்குமென்றிலகுபூண்பிடித்ததையொப்ப
விற்றயங்குவாணுதலெழின்மாயைதன்மிடற்றிற்
பொற்றடந்தகட்டணியொருமடவரல்புனைந்தாள். 12

---

(6) நாரி-வண்ணமகள்.
(7) கவின-அழகுற.
(8) திலகம்-பொட்டு. சுவடு-வடு.
(9) அஞ்சனம்-மை. பொர-போர்செய்ய. பானல்-குவளை.
(11) சார-சேரும்படி. வெண்மணி-வெண்முத்து.
(12) அணங்கு-வருந்து.

கன்னியத்தம்வந்தினமணிக்கற்கடகத்தின்
மன்னியுற்றதற்புதமெனவளைபலகாக்க
வின்னுதற்கருங்கண்மடமாதுகைவிளங்கப்
பொன்னினற்கடகம்புனைந்தனளொருபூவை. 13

ஆயுமின்சுவைதரச்செலுங்கையுடனடுத்து
வாயினொண்கவின்காணியமருவுறுமாபோன்
மாயைதன்கையிற்பொற்கடகத்தின்முன்வனைந்தா
டுயசெம்பவளங்களைக்கோத்தொருதோகை. 14

மங்கலத்தொழிலாடவர்மனநடக்கிற்காக்
குங்குமப்பெருஞ்சேற்றினைக்குறித்திடுதற்போன்
மங்கையர்க்கொருதிலகமாகியவெழின்மாயை
கொங்கையிற்புனைந்தனளொருபெண்மணிக்கோவை. 15

பாயும்வெண்டிரைக்கருங்கடனிலச்சுமைப்பாம்பி
னாயிரம்படங்களுந்திறையிட்டனவனைய
மீயிலங்கொளிவிரிமணிமேகலைவேய்ந்தாண்
மாயைமங்கைதனல்குலினொருதிருமடந்தை. 16

கறையடிக்களியானையின்வரவினைக்கண்டு
மறுகினுற்றவரிரிதரமணிமருங்கிடல்போ
லுறுதவத்தினரறிந்தனரோடவொண்ணுதற்கு
நறுமலர்ப்பதத்தணிந்தனள்சிலம்பொருநங்கை. 17

கூடைமென்மலர்மணத்தினாலறிந்ததைக்குறுகப்
பாடும்வண்டினஞ்சூழ்தல்போலிளைஞர்கண்பரப்பத்
தேடரும்பொருளனையவட்குறுநறுந்தேய்வை
பீடுறுங்குவிமுலைக்கணிந்தனளொருபேதை. 18

---

(13) கன்னியத்தம் வந்து-மாயையினது கைகள் வந்து, கன்னியாராசியிலிருக்கிற அஸ்தநக்ஷத்திரம் வந்து. இனமணிக் கற்கடகத்தின் மன்னியுற்றது-ஒரு சாதியாயுள்ள மணிக்கற்களையுடைய கடகத்தினுள்ளே நிலைபெற்றது. கூட்டமாகிய முத்துக்கள்போன்ற கற்கடகராசியிலே நிலைபெற்றிருக்கிறது. இது சிலேடை நயம்படக் கூறியதாம்.

(14) ஆயும்-ஆராயும்.

(15) ஆடவர்-காளையர்.

(17) கறை-உரல். மறுகு-வீதி. இரிதர-ஓட.

(18) கூடை-குடலை. தேய்வை-சந்தனம். பீடு-பெருமை.

நின்றன் விம்பமேநினக்கெதிரன்றிவேறில்லை
யென்றுகண்கொளத்தெளிந்தபேராடியொன்றெடுத்தாள்
குன்றெனுங்குவிமுலையவளெதிர்கொடுங்குழைமேற்
சென்றுசென்றுபாயரிமதர்மழைக்கணேர்தெரிவை. 19

வீரவேள்வளையாதசெங்கரும்பவன்வில்லி
ஞரிமேவிடாமலர்மறுவிலாநகைமதியங்
காருறாதமின்கடற்பிறவாதவின்னமுதம்
வேரிலாதபூங்கொடியெனவிளங்கினண்மாயை. 20

மாதரிவ்வகையணியலுமதுகைநாயகன்றன்
பாததாமரையருச்சனைப்பொருள்கள்பற்பலவு
நீதியாலமைந்தனவினிநிகரிலெம்பிராட்டிப்
போதுவாயெனவொருமடமாதெதிர்புகன்றாள். 21

மயிலெழுந்தெனவெழுந்தனள்கோமகள்வாழ்த்திக்
குயிலெழுந்தெனவெழுந்தனமடந்தையர்குழாங்க
டுயிலெழுந்தெனவெழுந்தனநூபுரத்துழனி
வெயிலெழுந்தெனவெழுந்தனமணியணிவிளக்கம். 22

பொன்னிலங்கியசிவிகைமுன்கொணர்ந்தனர்பொறுப்போர்
மன்னியங்கதையேறினண்மதர்விழிமாயை
சின்னம்வெண்பணிலம்பணைதண்ணுமைதிமிலை
முன்னிரைந்தனமதியெழுக்கடன்முழங்குதல்போல். 23

ஆன்றிரட்டுறுங்கண்ணன்வாய்க்குழலிஃதணிபூண்
மான்றிரட்டுறுமெனக்குழலூதினர்மலர்விற்
கோன்றிரட்டியவமுதனையாண்முனங்குறுகி
மூன்றிரட்டியமுகமுடைமுருகனுமுருக. 24

வயங்குமாயையங்கரும்பினிற்றாழ்ந்தவர்மாவி
னுயர்ந்தமாதராரூற்றிருந்தொழுகுகண்மலரை
நயந்துசூழ்தருமளியினண்ணினர்பிறர்காலா
வியங்குமாதிருபுடையினுமிடையறவீண்டி. 25

---

(19) விம்பம்-வடிவம். குழை-காதணி. மதர்-களிப்பு. மழை-குளிர்ச்சி. தெரிவை-மாது.

(20) மறு-களங்கம். கார்-மேகம்.

(22) நூபுரம்-சதங்கை. துழனி-சப்தம்.

(23) பொறுப்போர்-சுமப்போர். மன்னி-விருப்புற்று.

(25) மா-திருமகள்.

வெளளித்தனன்றன்குடையெனக்குடைவிதிர்க்கும்
வாளெனப்பிறழ்மதர்நெடுங்கண்ணிபான்மருவக்
காளமொத்தகண்மடந்தையர்பலரிளங்கமுகின்
பாளையொத்தவெண்கவரிவீசினரிருபாலும். 26

காமவெந்தழன்மூட்டல்போற்கடிமலர்ச்சிவிறி
தாமசைந்தனபொய்க்கணைசொரிந்துவிற்றடக்கைக்
கோமகன்றிருந்திமைபுளமறிதல்போற்குறுகிப்
பூமடந்தையைவென்றவர்பூமழைபொழிந்தார். 27

பாகுவெள்ளிலைசந்தனங்குங்குமம்பளித
மோகைமான்மதம்வண்டிமிர்நறுமலரொலியல்
பேர்கெழும்பணிப்பெட்டிமென்றுகிலுடைப்பேழை
தோகைமார்பலர்மருங்கினிற்சுமந்துபோயினரால். 28

கொங்கையங்குவிமுகிழ்விழிக்கயலிதழ்க்குமுத
மங்கையம்புயமுந்தியஞ்சுழியிவையடுத்துப்
பொங்குறுங்கவினீர்பெருகாற்றினைப்புரையு
மங்கலந்திகழ்வுறுமணிமாளிகைமறுகு. 29

திங்கள்வாணுதன்மடந்தையர்செஞ்சிலம்பொலியுஞ்
சங்கினேடணிகலன்களின்சிற்றொலிதாமுங்
கொங்குலாமலர்த்தொடையளியிசைகளுங்குழுமிப்
பொங்குமாழியிற்பஃறுளிபெருகுதல்போன்று. 30

துன்றுபெண்படைசூழ்வரமாயையந்தோகை
வென்றியங்கனன்மழுவினேன்விழியினால்வேளைக்
கொன்றதேதன்னெனக்கேட்பமென்றுளவலிகொண்டு
சென்றுறுஞ்செயலென்னவத்தெருவிடைச்சென்றாள். 31

(26) காளம்-நஞ்சு. கவரி-சாமரை.

(27) கடி-வாசனை. தாம்-அசை. "சிவிறி" இது விசிறி என்பதன் போலி.

(28) பாகு வெள்ளிலை-பாக்கு வெற்றிலை. பளிதம்-பச்சைக் கற்பூரம். ஓகை-மகிழ்ச்சி. இமிர்-சப்தம். தோகைமார்-பெண்கள், இது உவமை ஆகு பெயர்.

(29) கவினீர்-அழகாகியநீர். புரையும்-ஒக்கும்.

(30) சங்கு-வளை.

(31) துன்று-நெருங்கு. உளவலி-மனோதைரியம்.

வேறு

அரிமதர்மழைக்கணல்லரிவைதன்புன்
வருமடவரலியர்வனப்புக்காண்டலு
மெரிபுரைவிழியரியேறுபோல்பவர்
கரிநுகர்வெள்ளிலங்கனியையொத்தனர். 32

இடையொருசற்றுவாணுதல்சற்றேழையர்
படைவிழிசற்றுவாய்ப்பவளஞ்சற்றிணைக்
குடமொருசற்றிவண்கொள்ளேகொள்ளகம்
புடைபெயரறிவெலாம்போயிற்றேயென்பார். 33

இனத்தியல்பாமறிவென்பதுண்மையே
மனத்துயர்செயுமயன்மாற்றுநீறுதா
னனிச்சமெல்லடியினுர்நுதலடுத்தலும்
பனித்துடல்வெதும்புமால்படுத்தலையெலன்பார். 34

தொல்லைநஞ்சடர்துயர்சொல்லக்காத்தவன்
வல்லிபங்குடையருண்மதுகைநாயகன்
செல்லுமங்கையர்விழிநஞ்சுசெய்வதுஞ்
சொல்லுதுமவனெடுதொழுதுநாமென்பார். 35

இக்குழுமகளிருள்யார்வனப்பினுன்
மிக்கவளெனத்தமைவினுவினுரெதிர்
முக்கனிகளுட்சுவைமுதிர்ச்சிபெற்றுள
தெக்கனியதனைநீரியம்புவீரென்பார். 36

கரும்பினுமினியசெங்கயற்கணுரிளங்
குரும்பையும்பயன்படாக்கோவைதன்னையும்
விரும்பினமுலகர்முன்வீணினெஞ்சகம்
வருந்துதனைகைதருமடமையேயென்பார். 37

விடங்குலாமதர்விழிவிரைத்தண்பூங்குழ
னுடங்குநூலிடைப்பிறைநுதற்பொற்கொம்பனுர்
குடங்கணுணுறுமிளங்குவவுக்கொங்கைபோ
லுடம்பெலாமுடினுலுய்யலாமென்பார். 38

(32) வனப்பு-அழகு. எரிபுரைவிழி-தீப்போலுள்ள கண்கள். அரியேறு-ஆண்சிங்கம். கரி-யானை.

(34) மாற்றுநீறு-நீக்குகின்ற விபூதி. படுத்தல்-செய்தல்.

(36) முக்கனி-வாழை மா பலா என்னும் மூவகைப் பழங்கள்.

(37) கோவை-அதரமாகிய கோவைக்கனி.

(38) நுடங்குதல்-துவளுதல். குவவு-திரட்சி.

இவ்வணங்கருத்தழிந்திளைஞர்மாழ்குறக்
கொவ்வையங்கனியிதழ்க்கோதைமாரொடு
மௌவலங்குழலெழின்மாயையென்பவ
ளவ்வரன்கோயிலினருகுபோயினாள். 39

சிவிகையினிழிந்துதன்சென்னிதாங்கிய
குவிகையினொடுபுகாக்கோபுரத்துள்வெண்
கவிகையனனுமமகாரன்கன்னிகட்
செவிகையினணிபரனெதிர்சென்றாளரோ. 40

வேண்டியவனைத்தையுமேவன்மெல்லிய
ராண்டருகுறவமைத்தளிப்பமாயைதான்
காண்டகுநுதல்விழிக்கடவுட்கன்புளம்
பூண்டனளருச்சனைபுரிதன்மேயினாள். 41

ஆதியவரன்முறைசெய்தருக்கிய
மாதியகொடுபரனணிந்திருந்தபூ
வாதியகளைந்துமந்திரமறைந்துநம்
மாதியைமஞ்சனமாட்டன்மேயினாள். 42

வேறு

தயிலமுடனானிடத்தைந்தையமுதநறுநெய்பாறயிர்செழுந்தேன்
வயலினெழுகரும்புடைத்துக்கொள்சாறுபழம்பிழிந்தமதுரச்சாறு
புயலளவுதாழையிளநீர்நறுஞ்சந்தனக்குழம்புபோற்றுநூலி [டி.
னியலினமைதபனமிவையொன்றன்பினொன்றுமுறையிறைவற்காட்

சங்குலவுமென்கைநெடுஞ்சுடரிலைவேல்விழிமாயைசாம்பற்பூத்து
மங்கலமாகியமேனிமுழுவதுஞ்சந்தனத்திரளைமலியச்சாத்தித்
திங்களெனுமொருசிறுகூன்முதுகிப்பியீன்றதெனச்சினவெள்ளேற்றான்
கங்கைமுடிமீதினில்வெண்ணிலவெறிக்குநித்திலவக்கதையுமிட்டாள். 44

---

(39) மாழ்குற-காளையர் மயங்காநிற்க. மௌவல்-மல்லிகை.

(40) மமகாரன் கன்னி-மமகாரவரசனது புதல்வி. சிவிகை-தண்டிகை. கையினணிபரன்-திருக்கரங்களி னணிகின்ற மதுகேசர்.

(43) தைலம்-எண்ணெய். ஆனிடத்தைந்து-பஞ்சகவ்வியம். ஐயமுதம்-பஞ்சாமிர்தம். புயல்-மேகம். தபனம்-ஸ்தபன கலசநீர். (பஞ்சகவ்வியம்-கோமயம், கோமூத்திரம், தயிர், நெய், பால் என்பனவற்றை ஒன்றாகச் சேர்த்தல்) (பஞ்சாமிருதம்-சருக்கரை, தயிர், தேன், நெய், பால் இவைகளை ஒன்றாகச் சேர்த்தல்.

(44) இப்பி-சிப்பி. நித்திலம்-முத்து. அக்கதை-அரிசியை மஞ்சளிட்டுச் சுபங்களுக்குக் கொடுத்தல். இது 'அக்ஷதை' என்னும் வடமொழித் திரிபு.

பிறைதவழுநெடுஞ்சடையெம்பெருமானைச்சார்ந்துசர்ப்பபிராந்திமேவ
நறுமலர்மென்றொடைமாலைபலவனைந்துகூர்ங்கோட்டுநால்வாய்ச்சீற்றக்
கறையடியீருரிசுமந்ததிருமேனியழகுறநுண்கலைபுனைந்திட் [தாள்.
டிறைவனெனும்பணிநாணவவிர்மணிப்பூண்பற்பலவுமெடுத்தணிந்

நற்றூமங்கமழ்நித்தியகல்லியாணிமணாளர்க்குநானஞ்சாத்திப்
பெற்றானங்கடிதலிலாக்கறிமருவுபோனகங்கள்பிச்சையல்லான்
மற்றொன்றில்லாதபெருந்தகைக்குநிவேதித்துவண்டுகிண்டி [ள்.
யுற்றாதுங்கடிமலர்மென்குழன்மடவாள்வெள்ளிலையுமுவந்தளித்தா

நறியபுகைசெழுஞ்சுடர்மென்சிவிறியொடுவெண்கவரிநாடுமாடி [ப்
நெறிமுறையினெடுங்கடல்போலியமுழங்கநின்றுதவிநிமலன்றன்னை
பிறைநுதலிவ்வகைபூசைபுரிந்துதுதிபலசெய்துபெருகுமன்பான்
மறைபுகலுமஞ்செழுத்துமறைந்துவலம்வந்துமுனம்வணங்கிப்பின்னர். 47

அன்பினுளமுருகிவிழிசொரிநீராலெழுதியமையழிந்திருப்பப்
பொன்புரையும்வடிவமயிர்பொடிப்பவெயர்வானுதலின் பொட்டழிந்
மின்புரையுநெடுஞ்சடிலப்பொன்மலையினணைந்தவெள்ளமூழ்கி [து
யின்பினடிப்பவளென்னவந்துநடநவிலரங்கிலெய்தினளால். 48

அரங்கினிடைநடநவிலுஞ்செயற்கேற்பவுடையணிந்திட்டரும்பைவென்ற
குரும்பைமுலையினைவம்புகொண்டணிந்துதவங்களெல்லாங்கொள்ளைகொள்ளுங்
கருந்தடங்கண்மலர்க்கோதைசிற்றடியிற்கைபுனையக்கற்றமாதர்
சுரும்புமுரன்மல்லிகைமென்போதனையசிறுசதங்கைதுளங்கவார்த்தார். 49

மாயைமுலைக்கிணையெனவென்முன்றானும்வந்ததெனவலக்கைத்தாளம்
போயிடக்கைத்தாளமதைப்பொறாமையினாற்றாக்குதல்போற்புடைத்தொலிப்ப
வாயுரைக்குமொழிபோலத்தண்ணுமைசெங்கைகளால்வார்த்தைசொல்ல
மேயகலைப்பெண்விளர்ப்பவெழின்மாதரிசைபாடவீணைகொண்டு. 50

---

(45) பிராந்தி-மயக்கம். கூர்ங்கோடு-கூரிய மருப்பு. நால்வாய்-தொங்குகின்ற வாய்; யானை.

(46) தூமம் - புகை. நித்தியகலியாணி - உமாதேவி. வெள்ளிலை - தாம்பூலம்.

(47) நாடு மாடி-நிழல் பார்க்கின்ற கண்ணாடி.

(48) மயிர் பொடிப்ப - உரோமங்கள் சிலிர்க்க. மின் - மின்னல். புரை-ஒத்தல்.

(49) அரங்கு-நிருத்தமண்டபம். வம்பு-கச்சு. சுரும்பு-வண்டு.

(50) விளர்ப்ப-நாண.

என்னொருகையொடுமற்போர்புரிகவெனநிற்பவள்போலிடையினோர்கை
மன்னியுறவைத்தொருகைநீட்டியரனெதிர்நின்றுமாயைவல்லி [கை
கன்னன்மதன்றனைவருகவென விளித்தல்போற்றழங்கக் காற்சதங்
பொன்னினியலொருபாவைநடிக்கின்றதென்னநடம்புரியலுற்றாள்.

## வேறு

தண்ணுமைவிளங்கலுறுதாளமிசையெல்லாம்
வண்ணமலர்மெல்லடிவழிச்சதியினிற்பக்
கண்ணிணைகொள்பல்வளையகைவழிநடப்பப்
பெண்ணமுதமன்னவள்பெயர்ந்தனணடித்தாள். 52

வாயுரைசெய்சொற்பொருண்மலர்க்கரமுரைப்ப
மீயுயர்விசும்பினெழுமென்புளொலியெல்லாம்
பாயொளியபஞ்சுறுபதத்துறமிதித்துப்
பேயொடுநடித்தவிறைபித்துறநடித்தாள். 53

அந்தணனிருங்கலையணங்கினையுமிழ்ந்தான்
செந்திருவைநேமியிறைசீயெனவெறுத்தா
னிந்திரனருஞ்சசியையெண்ணிலன்மறந்தான்
பைந்தொடிநடிப்பநரர்பட்டதெனுரைப்பாம். 54

பொன்னெயிலினொன்றியபுழைக்குண்முகம்வைத்துந்
துன்னிமுனர்நின்றவவர்தோளிடையிவர்ந்து
மின்னெனநடம்புரியுமெல்லியன்மருங்கு
லென்னும்வெளிகாணியவிடர்ப்படுவர்மைந்தர். 55

பற்றுமனமோடியிருபார்வையினுமெய்தி
மற்றையபுலன்களைமறந்துநடமாடும்
பொற்றொடியைநண்ணவுயர்பொன்மதிலுறுப்பி
னுற்றபொறிபோலசைவொழிந்திளைஞர்நின்றார். 56

---

(51) விளித்தல்-அழைத்தல். தழங்க-ஒலிசெய்ய.

(52) வண்ணம்-அழகு.

(53) பித்துறல்-மயக்கமடைதல்.

(54) நேமியிறை-நாராயணன்.

(55) புழை-துவாரம். இவர்ந்து-ஏறிநடத்தி.

(56) மற்றுமனமோடி-விஷயங்களிற் பற்றுகின்ற, மனமானது ஓடி. புலன்களை-விஷயங்களை. பொறி-பதுமை.

இளங்கொடிமருங்குலவளின்னணங்டிப்பக்
களங்கனியையென்றமணிகண்டனையருச்சித்
துளங்குளிரருந்தவனுவந்திறையணிந்த
வளங்கெழுமுசந்தமலர்மாலையொடளித்தான். 57

வணங்கிமதுகேசனிருமாலியமதேற்றங்
கணங்குமடவாருடனரங்கிடையிருந்தா
னுணங்கிழைமருங்குன்மிகநோமெனவிரைந்து
பிணங்குறுசதங்கையமுபிள்ளேயினடங்க. 58

மைத்தடநெடுங்கணிளவல்லிநிகர்மாயை
பத்தியொடருச்சனைபயின்றதையறிந்தா
னித்தனுலகெங்கணுநிறைந்தவனநாதி
முத்தனருளல்லமுதற்பெயரினுனே. 59

நான்காவது

மாயைபூசைகதி முற்றிற்று.

---

கதி 4-க்கு திருவிருத்தங்கள்-216.

---

(57) சந்தம்-சநதனம்.

(58) பிணங்குதல்-நெருங்குதல்.

(59) அநாதி-தோற்றமில்லாதவன். முத்தன்-இயல்பாகவே பாசங்களி லிருந்து நீங்கியவன்.

ஐந்தாவது

# பிரபுதேவர் வந்தகதி

நிரந்தரமடியார்வேண்டுநினைவெலாநிரப்பாநின்ற
பெருந்தகையல்லமையன்பெயர்ந்தொருமனிதனுகி
வருந்துறுமயன்மனத்தால்வந்தனைபுரிந்தாடன்பாற்
பொருந்துறுபவன்போற்செய்தபுணர்ப்பினைப்புகன்றுரைப்பாம். 1

தாமுறுநுகர்வும்வீடுந்தந்திடவல்லன்றனே
யாமெனவியம்பலாலேயல்லமதேவனுண்மை
நாமமுமறையவேறோர்நாமமுற்றம்மாயைக்குக்
காமியவினைப்பயன்றன்கடைப்பிடித்தருளவெண்ணி. 2

கதந்தருதிருநுதற்றீக்கண்ணினுனீறுபட்ட
மதன்செயல்செய்யவன்றனுன்வடிவுதான்கொண்டதென்ன
முதிர்ந்தழகொழுகுமாறுமுகங்களுட்சிறந்தவொன்றே
டெதிர்ந்துளமுருகனென்னவிளமையோடழகுவாய்ப்ப. 3

அவிர்சடைமுனிவர்மாதராழுங்குறக்கொண்டகோலங்
கவினுமிவ்வடிவங்கொள்ளக்கற்றுமுன்விட்டதென்னக்
குவிமுலைமகளிராவிகூட்டுணுங்கோலமென்னப்
புவியுறுமிரவியென்னப்பொங்கொளியுருவொன்றுற்றன். 4

விளிம்புறநடுக்களங்கம்வீழ்ந்துசூழ்மதியொன்றுண்டேல்
வளங்கெழுமயிரொழுங்குவள்ளல்வாண்முகநிகர்க்குந்
துளங்குறுமுந்திமேற்போய்மார்பிடைத்தோன்றுரோம
மிளங்கருநளினமுண்டேலேய்க்குமென்றியம்பநின்றன். 5

(1) நிரப்பாநின்ற - நிறைவேற்றுகின்ற. பெயர்த்தல் - தன்னியல்பில் வேறுபடுதல். பொருந்து-உடன்படு.

(2) நுகர்வு-போகம். காமியவினை-இச்சிக்கும் பொருட்காரியம்.

(3) கதம்-கோபம்.

(4) அவிர்-விளங்கும். அழுங்குற-மயங்கிவருந்துதற் பொருட்டு. கூட்டுணுங்கோலம்-கொள்ளைகொள்ளும் வடிவம்.

(5) விளிம்பு-ஓரம். நளினம்-தாமரை.

விலைவரம்பறியாவாடைவிரித்துடுத்தரையிலங்க
மலைவரும்புதியசந்தமான்மதங்காதநாறக்
கலைவரம்பறிந்துளோர்தங்கருத்தினுக்கரிதாயென்புன்
றலைவருங்கமலப்பொற்றாடம்பிரான்மலியச்சாத்தி. 6

தளிர்த்ததண்பொழிலிற்றேமாந்தடஞ்சினைக்குயின்முகம்போற்
றுளித்தலைமுகில்கவற்றுஞ்சுரிகுழற்சிகழியார்த்திட்
டளித்தொடர்மாலைவேய்ந்தவ்வலங்கனுக்குறுவோர்க்கெல்லாம்
வெளிற்றுரைப்பொருள்போற்றோன்றமென்றலைச்சாத்தணிந்து. 7

களத்திடையிருப்பினுண்மைகாண்குவரென்னவாலங்
குளத்திடைவாங்கிவைத்தகொள்கைபோற்றிலதந்தீட்டி
யொளித்தனிமதிதன்பாங்கருரோணியோடொருபெண்கூட்டி
யளித்துறவைத்ததென்னவணிமணிசெவிக்கணிந்து. 8

விலையில்வெண்டாளக்கோவைவீரசங்கிலிகேயூ
மிலகுசெம்மணிப்பொன்னாழியிவைமுதலாயவெல்லாக்
கலனுமொண்கவினெனுஞ்செங்கனவிற்பெய்நறுநெய்யென்ன
மலைவினங்குருகுகேசன்வயங்குறப்பெலாமணிந்து. 9

இந்திரதிருவிற்கேற்றவிலக்கணமுழுதும்வாய்த்த
சுந்தரகுமரற்காவாவிதனைத்தான்சுமப்பதாக
வந்துளதெதுகொலோவென்றெண்ணிமானிடர்மயங்க
நிந்தையின்முதுகின்பாற்றண்ணுமையொன்றுதிகழத்தாங்கி. 10

சென்றருண்மதுகைநாதன்றிருமுன்வான்சுடர்வலஞ்சூழ்
குன்றுறழ்கொடிநெடும்பொற்கோபுரத்தெதிர்போய்நின்று
மன்றிடைநவில்கூத்தாடிமத்தளத்தொழில்கைக்கொண்டா
னென்றுளமருளவெங்கோனெறிந்துதண்ணுமையதிர்த்தான். 11

---

(6) கலைவரம்பு-கல்வியின் எல்லை. மான்மதம்-கஸ்தூரி.

(7) துளித்தலைமுகில் - கார்காலத்தெழும் மேகம். கவற்றும் - வருத்துகின்ற. சுரிகுழற் சிகழியார்த்திட்டு - சுருண்டதலைமயிரை முடியாகக்கட்டி. அலங்கல்-மாலை. வெளிற்றுரை-வெளிப்படையான சொல்.

(8) களம்-கழுத்து. ஆலம்-நஞ்சு. பாங்கர்-பக்கம்.

(9) தாளம்-முத்து. கோவை-மாலை. கலம்-ஆபரணம்.

(11) வான்சுடர்-சந்திரசூரியர். மன்று-சபை.

உரலசைந்திடாதடுக்கியுறிபினையெடுத்தயின்றோன்
குரலசைந்தூதுமோர்வேய்ங்குழன்மொழிமாதர்மாழ்கச்
சிரலசைந்தாடாநின்றசிறகர்போன்மத்தளத்தை
விரலசைந்தறைதலன்றிமெய்யசையாமனின்றான். 12

சுத்தமெய்ஞ்ஞானானந்தசூரியன்கரத்தாலார்க்கு
மத்தளமுகின்முழக்கநடித்துறுமயில்கேட்டம்மா
வித்தரைமனிதர்கையாலெஞ்செவிப்படாதிருந்த
புத்தொலியிதுவென்றுள்ளம்வியந்திதுபுகலுமன்றே. 13

மோட்டிளமுலையீரின்னதண்ணுமைமுழக்கங்காதாற்
கேட்டிலமிவ்வாறுண்டென்றுரைப்பவுங்கேட்டிலேமால்
வேட்டுலகனைத்துநின்றுவியக்குமிவ்விஞ்சைகற்றுக்
காட்டியவவன்யார்கொல்லோகாண்கவென்றணங்குரைத்தாள். 14

மாதர்வல்விரைந்துசென்றுமத்தளமுழக்கிநின்ற
சோதியைவிழியாற்றாஞ்செய்தொல்லைமாதவத்தாற்கண்டு
காதொடுபொருதுமீளுங்கயனெடுங்கருங்கட்செவ்வாய்க்
கோதைதன்மருங்கின்மீண்டுவந்திதுகூறலுற்றாள். 15

கற்றதன்விஞ்சைபோலக்கவினுநாங்கண்டதில்லை
விற்றொழிலனங்கவேளேமேனிகொண்டடைந்தானென்ன
வுற்றனனொருவனென்னவொண்டொடிவிளிமினென்றாள்
மற்றவர்விளித்துவந்துமாயைமாதெதிர்விடுத்தார். 16

அந்நிலையலமனுமத்தண்ணலைக்கண்டபோதே
செந்நிலமுருகுநீர்போலச்செல்விமான்மயமேயாகிப்
பொன்னவிரொருபூம்பாவைபோன்றசைவறவிருந்தாள்
கன்னல்வின்மதவேளெய்துகையிளைத்தருகுநின்றான். 17

---

(12) வேய்ங்குழல்-புள்ளாங்குழல். மாழ்க-மயங்கும்படி. சிரல்-மீன்குத்திப் பறவை.

(13) ஆர்க்கும்-சப்திக்கும். முகில்-மேகம்.

(14) மோட்டிளமுலையீர் - உயர்வும் இளமையும்பொருந்திய முலையையுடையவர்களே. வேட்டல்-இச்சித்தல்.

(15) விஞ்சை-வித்தை.

(16) மருங்கு-சமீபம். விளிமின்-அழைமின். மற்று-அசை.

மயக்குமென்பதுபோய்மாயைமயங்குமென்றிடவிருப்ப
வியக்குநின்றேயம்யாதுவீரவேளனையாயின்பம்
பயக்குநின்பெயர்யாதெங்குப்பயின்றுறைகுவைசொல்லென்று
நயக்குமென்மொழியார்கேட்பஞானவாரிதியுரைக்கும். 18

செல்லுறழ்குழலீர்தேயமோபரதேயஞ்சூளால்
வல்லவரென்னவந்தோர்வலிநிலையல்லவென்று
மல்லமனென்பேரென்றுமன்புசெய்பவரிடத்திற்
புல்லுவன்றொடர்பிலாமலென்றனன்பொய்மையில்லான். 19

உலகுளவிஞ்சையெல்லாமுணர்ந்தவெம்பிராட்டிதன்பான்
மலைவறவிஞ்சைகற்றோர்தம்மொடுமருவியப்பாற்
செலவினையொழிந்திருந்திசெல்வமோடையவென்று
விலவிதழமுதமன்னாரியம்பினரிணங்கும்வண்ணம். 20

தன்கனிவாய்திறந்துசாற்றவேண்டியசொல்லெல்லா
மின்குழுவனையமாதர்விளம்பவுமகிழ்வுற்றீது
புன்சடைமதுகைநாதன்பூசனைப்பயனென்றெண்ணி
யின்குழன்மொழிமடந்தையிருந்தனளுரையாடாமல். 21

மோகினிதவஞ்செய்தீன்றமுகிழ்முலைமாயைதன்கைப்
பாகுவெள்ளிலையளித்துப்பரிந்தருகுறமடைப்பைப்
போகியென்பவள்சிறந்தபோகிபோனடித்துநின்ற
யோகிதன்காத்தளிப்பித்தரியனபலவுஞ்செய்தாள். 22

அடிக்கமலங்கள்போற்றுமடியவர்வேண்டிற்றெல்லாங்
கொடுத்தருள்கருணைவள்ளல்கொண்டகோலத்திற்சேற்ப
நடிப்பவனுதலாலேநாமமவேற்றடங்கண்மாயை
யெடுத்துதவுறுவதங்கையேற்றனனிழிந்துளோன்போல். 23

விடைக்கொடியமலன்றன்னைவிடைகொடுபுறம்போந்தங்கண்
மடக்கொடிமதவேள்வாளிமருமம்பாய்ந்துருவநைந்து
நடக்கரிதாகியம்பொனகைமணிச்சிவிகையூர்ந்து
தொடிக்கைநுண்ணிழைமருங்குற்றோழியர்சூழச்சென்றாள். 24

(18) ஞானவாரிதி-ஞானக்கடல்.
(19) சூள்-சபதம். புல்லுவன்-சேர்வேன்.
(20) மலைவற-ஐயந்திரிபில்லையாக.
(22) முகிழ்-தாமரையரும்பு.
(23) நாமம்-அச்சம்.

நண்ணிவெண்குடைவேந்தன்பானடம்புரிதொழிற்கிசைந்த
தண்ணுமையல்லமன்றன்சதுருரைத்துடனிருப்பக்
கண்ணகன்ஞாலங்காக்குங்காவலனிசைவுகொண்டு
பெண்ணமுதனையமாயைபிறங்குதன்மாடம்புக்காள். 25

வலம்புரிவளையனந்தமருங்குசூழ்ந்துறச்சிறந்த
சலஞ்சலமிருப்பதென்னத்தமனியமணிமாடத்திற்
பொலங்குழைமகளிர்சூழப்பூந்தவிசிருந்துவிஞ்சை
நலந்தெரிபவள்போலெங்கணம்பனோடுரைவிழைந்தாள். 26

நினைவவன்புணர்ச்சிமேற்றுநெடுங்கணோக்கனங்கனன்னா
னணிமிகுமழகின்மேற்றுநாவெறுங்கூற்றின்மேற்று
புனைமலர்வணர்வார்கூந்தற்பொற்றொடிக்கிதனாலன்றே
மனமொழிமெய்யொருங்குமங்கையரரியரென்பார். 27

தீதறுகழைக்கரும்பிற்றீஞ்சுவையிரதநீத்துக்
கோதினைவிரும்பிக்கொள்ளுங்கொள்கைபோனாவியின்கட்
போதுறுமதம்விடுத்துப்புன்மலங்கொள்ளுமாபோற்
பேதையெம்பிரானான்முத்திபெறாதுபுன்போகம்வேட்டாள். 28

ஒன்றிரண்டொழியவாளியுளவெலாமாரன்றூர்த்தான்
குன்றிரண்டனையகொங்கைக்கோமகளாற்றாளாகி
மின்றிரண்டனையமேனிவிமலன்மேற்சாய்ந்துவீழ்வாள்
பொன்றிரண்டனையமாதர்பொருந்தலானாணிநின்றாள். 29

தளிரியல்காமத்தீயிற்சருகுபட்டாற்றாளாகி
யுளநிகர்மகளிர்சில்லோருடன்வரவெழுந்துட்போகி
யளிமலரளகஞ்சோரவணிமுலைத்துகில்விலங்க
வளமலியணையின்மீதுவாயுயிர்ப்பெறிந்துவீழ்ந்தாள். 30

---

(25) வெண்குடை - வெண்கொற்றக்குடை. இசைவு-அநுமதி. பிறங்கும்-பிரகாசிக்கும்.

(26) அனந்தம்-பல. சலஞ்சலம்-ஓர்வகைச்சங்கு. பொலம்-பொன்.

(27) புனை-அலங்கரித்தல். கூற்றம்-சொல்.

(28) தீதறுகழை-குற்றமற்றகழை. இரதம்-சாறு. நாவி-கஸ்தூரி. மதம்-கஸ்தூரி.

(29) வாளி-பாணம். தூர்த்தல்-இறைத்தல். திரண்டு - கூடி. பொன்-திருமகள் (இப்பாடலில் ஒன்றிரண்டொழிய வாளி என்பதற்குக் கொல்லும் திறத்தனவாகிய வாளி ஒளிய மற்றைய பாணங்களைப் பிரயோகித்தான் என்க.)

(30) உயிர்ப்பெறிந்து-மூச்செறிந்து.

### வேறு

அள்ளிக்கொளும்பேரழகனருளும்புகலுமவாவாலு
முள்ளக்கருத்தையுயிர்போலுமகளிர்க்குணர்த்துமுளத்தாலு
மெள்ளப்பவளவாய்திறந்துவீடேதலமன்மேவுதற்குப்
பிள்ளைப்பிறைவாணுதன்மடவீரென்றாள்பிறரைவென்றாளே. 31

இறங்குதுறையினீத்தாயிற்றென்னமாயையிடத்துமயல்
பிறந்தபொழுதேயுயிரளவாய்நின்றதென்னும்பெற்றிமையை
யறிந்துமகளிர்நின்கருத்தையறியவுணர்த்திலல்லமற்குச்
சிறந்தமனையொன்றளிக்குதுமென்றுரைத்துப்பின்னுஞ்செப்புவார்.

காமமுளைதோன்றிற்றுனக்கென்றெங்கள்கருத்திற்றோன்றிற்று
வாமமணிமேகலைமருங்குல்வடிவேன்மருட்டுமதர்விழியா
யாமுநினதுநெஞ்சகமும்வேறலேநின்னிதயத்திற்
சேமமதனைநாளுமற்செப்புகென்றார்திருந்திழையார். 33

கன்னித்தன்மையழியுமெனுநாணுமுலகங்காக்குமொரு
மன்னற்குரியமகளென்னும்பெருமைதானுமத்தளிகன்
றன்னைப்புணர்ந்தாளென்றுவருந்தகாதமொழியுந்தன்னுளத்தி
லுன்னிக்கருங்கண்மடமாயையொன்றுமுரையாதிருந்தனளால். 34

இறைவியொன்றுமுரையாமல்வாளாவிருப்பவேவல்புரிந்
துறவினின்றசகளையெனுமாதுபிராட்டியுரையொடுதான்
பிறவுமின்றுவேறுபட்டாளென்னேபெண்ணேயறியேனென்
றறிவுகலங்கியொருவுகலாவிலாசியணங்கைவினாயினாள். 35

இனியான்மறைப்பதென்கொனுமக்கின்றுவந்தவல்லமனாந்
தனிநாயகன்பேரழகென்னுநறவையுண்டுதெரியாமற்
கனிவாய்மடந்தையுளமழிந்தாளென்றுவிலாசிகட்டுரைக்க
முனியாளியைந்துபுன்னகைகொண்டிருந்தாண்மாயைமுகங்கவிழ்ந்து.

மாயையிடையையுளண்முலையான்மற்றைமாதர்போலென்று
தூயமதிஞரானுமிதித்துச்சொல்லுமருங்குற்றோகைதான்
வாயினிளவெண்ணகைதோன்றவாளாவிருப்பக்கண்டுமய
லாயினுடையளெனமாதரறிந்தாரருத்தாபத்தியினால். 37

(31) பிள்ளைப்பிறை-இளம்பிறை.
(33) வாமம்-அழகு. காமமுளை-காமத்தின் அங்குரம்.
(36) ஒருவுதல்-நீங்கல். முகங்கவிழ்ந்து-புன்னகைகொண்டு.
(37) தூயமதிஞர்-தார்க்கிகர்.

வல்லியுள்ளமறிந்தனமிம்மாயைதனையுமயக்கவல்ல
வல்லமன்றன்கருத்தையினியறியவேண்டுமென்றவர்தாஞ்
சொல்லவொல்லைமதமானியென்பாள்யானத்தோன்றறனை
மெல்லவுள்ளமறிவலெனச்சென்றாள்வினோதவிமலன்பால். 38

மங்கைவருமவ்வரவையறிந்தவளோர்மாற்றம்வகுத்திடுமுன்
றங்குமனையிற்சென்றிருப்பனுங்கடலைவியெனைத்தேடிற் [ன்
றிங்கணுதல்வெண்ணகைக்கருங்கட்செவ்வாய்த்திருவேசெப்புகவெ
றெங்கடலைவனியம்பமதமானியியம்பன்மேயினாள். 39

வீடுபுறநீவேண்டற்கவையவெமதுவிளங்குமணி
மாடநினதேயிவணுறைகவரசர்கோமான்மகளிதய
பீடமதனிலுனைவிடாதிருத்தியிருந்தாள்பிரிவறநீ
கூடவுறையும்விருப்புடையளென்றாள்குறிப்புவெளிப்படவே. 40

ஒன்றுமில்லேனுனீவிர்மிகவுமுடையீரும்மிறைவி
வென்றியரசர்குலமடந்தைசாதியறியாவிகிர்தன்யா
னன்றிமகளிர்நீயிர்நான்மைந்தனென்றாலடாதம்மா
வென்றுமுங்களுடனுறைவென்றெந்தைநகைகொண்டியம்பினான். 41

நள்ளாதொழியினன்றியவணட்டாளாயிற்பினைப்பேதங்
கொள்ளாளொருவர்மாட்டுமெனிலுயிர்போற்சிறப்பிற்கொண்டவனை
யெள்ளாளென்னவேண்டுமோவென்சொலெல்லாமிருந்தறிதி
வள்ளாலெனவின்மொழிபுகன்றாண்மாற்றமறிந்தமதமானி. 42

காரிற்சிறந்தமலர்க்குழலாய்நின்சொலெல்லாங்கவர்பொருளைப்
பாரித்திருந்ததேறுகிலேன்பணியொன்றொருவர்பாற்புரிவோர்
தூரத்திருந்துவருங்காலந்துணிந்துவருதறுணிவென்றா
ணரிக்கிணங்குமவன்போலநடித்துவிடுத்துநழுவுவோன். 43

மன்னர்மன்னன்மகடிருவோலக்காணுமைந்தரோ
டுன்னையுன்னுமவளல்லடலைவனுகவுன்னினளா
லென்னவன்னமனையாய்நுந்தலைவிக்கியற்கையுயர்த்திடுதன்
முன்னமென்னவடங்கியொழுகுறுதலெனக்குமுறையென்றான். 44

(38) ஒல்லை-விரைவு.

(40) இருதயபீடம்-நெஞ்சமாகியபீடம்.

(42) மாற்றம்-வார்த்தை. நள்ளல்-நட்புசெய்தல். எள்ளல்-இகழ்ச்சிசெய்தல்.

(43) நடித்து-ஆடி. விடுத்து நழுவுவோன்-விட்டுப்போகும் அல்லமதேவன்.

(44) திருவோலக்கம்-திருச்சபை. ஒழுகுறுதல்-நடத்தல்.

சொற்போர்செய்துமறைப்பதினியென்னும்யாங்கடொழுமிறையாய்
நிற்போய்நின்னையெதிர்ந்தளவேகரியுண்விளவினிறையழிந்தாள்
கற்போனின்றவருந்தவருங்காணுமுன்னமுனைக்கண்ட
தற்போனின்றுதடுமாறநினைப்போலிருந்ததலைவியே. 45

என்றுமங்கைகூறுதலுந்தலைவியிதயமீயறிவை
யன்றியின்றுபுதியன்யானறிவனோவிங்காப்தமாய்
நின்றவுன்றன்மொழிகேட்குமதுவேயெனக்குநெறியென்றான்
குன்றைவென்றகுவிமுலையாள்களிப்பவெமையாட்கொள்ளுவோன். 46

நல்லசகுனமென்னவெதிர்கண்டுவந்தாய்நம்பிநீ
வல்லவசுரர்சுரர்முனிவரெல்லாமயங்குமாயையையோர்
புல்லினெளியளெனப்புல்லநின்றாயெனப்புன்முறுவலொடு
சொல்லிமகிழ்வுகொண்டிறைவிபான்மீண்டனளச்சுடர்த்தொடியே. 47

அங்குமாயைமதமானிசென்றதற்பினகந்தளர்ந்து
மங்கைவாய்மைகூறியுடம்படுக்குமோமன்மகடனக்குப்
பங்கமாமென்றென்னுயிரைச்சீறியகலப்பண்ணுமோ
விங்குநானென்செய்வளெனவறியேனென்னவிருந்தயர்வாள். 48

என்னோவறிந்துபோயினள்சந்துபொருந்தாதெய்துமோ
வன்னோவரசன்மகளென்னவஞ்சியழகனகலுமோ
வின்னோரன்னநினைவின்றியெனையேநினைந்திட்டிருக்குமோ
பொன்னோடுறழும்வாண்முகங்கண்டலதுதுயரம்போகாதே. 49

என்னப்பலவுநினைந்துமடமாயையிருப்பவிகுளைமார்
மின்னற்கருங்கணிடனுடக்குறிகணல்லவிளங்குதலாற்
கன்னிக்குவகைகைகூடுமென்னவிருக்குங்காலைதனி
லன்னப்பெடைபோனடந்துமதமானிகளிப்புற்றடைந்தனளால். ()

---

(45) கற்போனின்றவருந்தவர் - மலைபோற் சலியாதுநின்ற அரிய தவத்தினர்.

(46) இதயம் - கருத்து. குவிமுலையாள் - குவிந்த தனத்தையுடைய மாயை.

(47) நம்பி-புருடச்சிரேஷ்டன். முறுவல்-சிரிப்பு.

(48) அகம்-மனம். பங்கம்-பழுது.

(49) சந்து-தூது. "சந்துமிகவினிதென்றான்" என்ற வில்லிபாரதத்தையுங் காண்க.

(50) இகுளை-தோழி.

வண்டாமரைபோன்முகமலர்ந்துவந்தாள்சென்றமதமானி
கண்டார்மகளிரவனுள்ளங்காயோபழமோகழறென்றார்
தண்டார்வனைமென்குழன்மடவீர்பழமேயென்றுசாற்றினாள்
கொண்டாருவகையவர்மாயையுவகையாரேகூறுவார். 51

மன்னனறியினென்னுமோவறியோமிதனைமறைமினெனப்
பன்னிமகளிருளத்தடக்கிக்கங்குல்வரவுபார்த்திருந்தா
ரன்னமனையாளல்லமன்றனுடம்பாடுரைத்தவம்மொழியே
கன்னன்மதவேளெய்தபசும்புண்ணின்மருந்தாக்களிப்புற்றாள். 52

புனலின்விளையாடிருமைந்தர்தம்முளெழுந்துபோயோடிப்
புனலின்விழுவான்போல்விழுந்ததொளிஞாயிறுபோய்ப்புணரியிடை
புனலின்விழுந்துமூழ்குபுவந்தெழுவான்போலக்குணதுகடற் [ப்
புனலின்மிசைவந்தெழுந்ததிருள்பருகிப்புதுவெண்டிங்களே. 53

தொக்ககமலம்வாய்மூடக்கள்ளுண்டிடறுஞ்சுரும்பினங்கண்
மொய்க்குநறுமென்குவளைவாய்திறந்தமுகிறுஞ்சிளம்பொழிலிற்
புக்கமணிநீர்க்கயத்திரைதேர்குருகுவிண்மீன்பூத்தனவாற்
செக்கரெனுஞ்செந்தீயினிடைப்பொரிந்துதெறித்தபொரிபோல. 54

தூயசோதிப்பகலவன்போய்மேலைப்புணரிதோய்ந்திடலு
மாயைநாமங்கொண்டிருந்தமணிமென்கலாபமயிலைவா
ணுயகோம்பிகண்டுசினந்துடலஞ்சிவப்புற்றடங்கல்போன்
மேயமாலைப்பொழுதிலிருஞ்செக்கர்தோன்றிவீந்ததால். 55

காலையரும்பிப்பகலெல்லாம்போதாயிருந்தகாமமலர்
மாலைமலர்ந்துபொருமலொருமாயைநாமமணிவல்லி
மூலையிருந்துபுறம்போந்துவிரிவெண்ணிலாமென்முற்றத்திற்
பீலிமஞ்ஞையெனவீழ்ந்துமதநோய்மிகவாய்பிதற்றுமால். 56

---

(51) இப்பாட்டில் ‘போனகாரியம் காயோ பழமோ” என்று இருளையர் கேட்டதாகக் கூறிய பழமொழியால் அவாவிலக்கண மமைந் திருத்தல் காண்க.

(52) கங்குல்-இரவு.

(53) புணரி-சமுத்திரம். இப்பாடலில், கதிரவன் உதயமும் அஸ்தமனமும் கூறியது யாவற்றினும் வியப்பு.

(54) தொக்க-நெருங்கிய. துஞ்சுதல்-தூங்குதல். குருகு-நாரைகள். செக்கர்-செவ்வானம்.

(55) பகலவன்-சூரியன். பகலைச்செய்கிறவன்; காரணப்பெயர். தோய்தல்-முழுகுதல். கலாபம்-மேகலை.

(56) பீலிமஞ்ஞை-கலாபத்தையுடைய மயில்.

தாய்வாயடைந்துமிகுந்தலையைமோதிமோதிச்சலித்தலறக்
காய்வாய்நிலவேயுடன்பிறந்தாளிருந்துவாழுங்கடிமனையை
நீவானெழுந்துவந்தழிப்பாயென்றலந்தோநிலையின்றித்
தேய்வாய்நின்னோடியைபில்லாவென்னையென்னசெய்யாயே. 57

தக்கன்மகத்திலொருஞான்றுதாளிற்படுநீதலையேறி
மிக்கமுனிவர்மந்திரநீரிறைப்பவின்னுமீண்டிலாய்
நக்கன்பவளவாய்ப்பட்டுக்களத்தேயிறங்குநஞ்சுநினை
யொக்குமென்பதறியாமையன்றேவொளிர்வெண்மதியமே. 58

அங்கமதினஞ்சிருத்தினைனங்கமல்லாவவிர்சடைமேற்
றங்கநினைவைத்திட்டதுநின்கொடுமைகருதித்தானன்றே
பொங்குமமுதகலையென்னநின்னைப்புகறல்வெண்டிங்கா
ளிங்குமனிதர்காராட்டைவெள்ளாடென்பதொக்குமால். 59

உருப்பமிகுவன்றழல்சிவப்புற்றுலகர்காணவொளிதரவு
நெருப்புவெண்மையென்பதுநன்னரியாயர்நின்னைக்குறித்தன்றே
பொருப்புநறுஞ்சந்தனச்சேறுபுலர்ந்துபொரியப்பூவணையும்
விருப்பமலருங்கொளுந்தவழல்வீசியெழுந்தவெண்டிங்காள். 60

இன்றேருலகிலெனக்கொன்றுபிறர்க்கொன்றாகியிருக்கின்றாய்
நன்றேவுனக்குமதியமேஞாயிறேபோல்வாழாமன்
முன்றேகையர்களியாவரையுமொப்பக்காணுமுயற்சியா
லன்றேதேய்ந்துபோகின்றாயந்தோவதனையறியாயோ. 61

கொல்லாநோன்புமுனிமலையிற்றோன்றியென்னைக்கொல்கின்றாய்
பொல்லாமந்தமாருதமேயென்னோகருணைபூண்டிலாய்
சொல்லாய்திருப்பாற்கடலினிடைத்தோன்றுங்கடுவிற்றன்குணமே
யல்லாலமுதகுணமுண்டோநின்னைவெறுப்பதறிவன்றே. 62

உயிர்த்தபொழுதேநின்குரல்கேளாமுன்னோடிற்றீன்றதாய்
நயத்தின்வளர்த்ததாய்குரல்கேட்டலுமேநடுங்கத்துரந்ததாற்
பயத்தமலர்ப்பூங்காவகத்திலிருந்துபல்காற்கூவினுற்
செயிர்த்துநின்னைக்குயிலேநான்வெறுத்தல்செப்பவேண்டுமோ. 63

(58) ஞான்று-நாள். நக்கன்-பரமசிவன்.

(61) ஞாயிறு-சூரியன்.

(62) முனிமலை-பொதியமலை. இதில் அகத்தியர் வசிக்கின்றார் என்று பல புராணங்கள் கூறுகின்றன வாகையால் முனிமலை என்றார். மந்தமாருதம்-தென்றற்காற்று. கடு-விஷம்.

(63) உயிர்த்த-பெற்றெடுத்த.

கன்னற்சிலையாயென்மனத்தைக்கலக்குங்காளைகவின்கண்டு
முன்னிற்பதற்குநாணியோவிங்கேகின்றாமுனிகின்றாய்
தன்னிற்பெரியரில்லையெனுமவனைச்சமரிற்றுக்காம
னன்னர்த்தளிரின்மெலியாரையடர்த்தாயாண்மைநன்றரோ. 64

என்றுபுலம்பிமயன்முதிர்ந்துமாயையிரங்கியிருந்தயர
மன்றன்மலர்பெய்மெல்லணைப்பூம்பள்ளியறையின்மதமானி
சென்றுநம்பியல்லமனைமுன்றந்திருத்தித்தேரையூண்
வென்றிமடங்கற்கிடுதல்போலவளைவிடுத்தாளவ்வறையுள். 65

வேறு

வேனினண்பகலின்வெய்யபாலையுணீர்வேட்டவனந்நிலத்துறுநீர்
தானெதிர்கண்டுபருகவோடுதல்போற்றண்மலரணைமிசையமர்ந்த
ஞானநல்விளக்கைவிழியுறக்கண்டுநகையொடுதிருமுகமலர்ந்து
பானலங்கண்ணிபுணர்முலைவிம்மப்பரிந்துமேல்விழுந்துபுல்லினளால்

நாடியவாடிநிழலெனவணைமேனண்ணுறத்தோன்றியவிறையை
யோடினள்விழுந்துதழுவுறத்தழுவவுறுமையாலணைமிசைவிழுந்தே
யாடியினிழலைப்பற்றநீட்டியகையாடியிற்றாக்கநின்றழுது
வாடுறுமழலைப்பேதையேபோலவருந்தினண்மதர்விழிமாயை. 67

சொல்லருமழகன்றிருவுருவிழியிற்றோன்றலான்மீளவுமெழுந்து [ய்
புல்லினண்மலர்மென்கைகளால்வெளியைப்புல்லல்போற்சுவைத்தனள்வெறுவா
வல்லியிவ்வாறுவெளிமயக்குற்றுவள்ளறன்கைப்படாமையினு
லல்லமனலனீதுருவெளியென்னவயிர்த்தனளுண்மையையன்றே.68

(64) கன்னல்-கரும்பு. கவின்-அழகு. சமர்-யுத்தம்.

(65) மடங்கல்-சிங்கம். (மடிந்துள்ள பிடரி மயிரையுடையதாகையால் சிங்கத்திற்குக் காரணப்பெயராயிற்று.)

(66) நண்பகல்-உச்சிவேளை. (இதை இலக்கணநூலார் சிறுபொழுதில் ஒன்றாகக்கூறுவர்.) அவையாவன-மாலை, யாமம், வைகறை, ஏற்படுகாலை, நண்பகல் என்றும், இவையன்றி ஏற்பாடுவிலக்கி ஐம்பொழுதாய்க் கூறுவாருமுளர். பத்துநாழிகை கொண்டநேரம் - அஃது காலை, உச்சி, மாலை, யாமம், அத்தசாமம், வைகறை. பாலை-நீர்நிழலில்லாத பூமி. இதுவும் இலக்கணத்தில் தலைவனுக்கும் தலைவிக்கும் உண்டாகிய பிரிவைப்பற்றிக் கூறுவது. இந்நிலத்தை ஐவகையான நிலத்தில் ஒன்றென்பர். அவையாவன-குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல்.

(68) திருவுரு-அழகிய வடிவம். சுவைத்தனள்-அனுபவித்தனள்.

அருந்தவநெடுநாண்முயன்றுதான் பெற்றவமுதைவாய்வைத்திடுமள
கரந்தவறுதல்போலல்லமதேவன்கட்புலத்துற்றுமென்றோளிற்[விற்
பொருந்துறவெளிபோல்வராமையாற்றீயிற்புழுவெனப்பதைபதைத்தரிவை
வருந்தினள்காமமல்லமனன்றிவடிவுளார்யார்கடந்திடுவார். 69

கன்னிகையென்றுமிறைமகளென்றுங்கருதிடாதவாவிளைத்திட்டு
மென்னிணைமுலைகண்மார்புறத்தழுவியிதழ்சுவைத்தணைமிசைப்புணர்வுற்
றின்னலின்பக்கடலிடைமூழ்கவிவன்றனாற்பெற்றிலேனென்று
தன்னகநைந்துவெய்துயிர்ப்பெறிந்தாடவத்தரையலைத்தவம்மடந்தை. 70

பொழிந்திழிமழையால்வளிநனைந்திடுமேற்புகைந்தெழுமெரியில்வான்வேமேன்
முழுங்குவெண்டிரைப்போராழியக்கலயமுனிவனையழுத்துமேனஞ்ச
மெழுந்தரன்றன்னைவருத்துமேன்மயக்கமெய்துவனல்லமதேவ
னொழிந்தவர்தம்மையொழிவறமயக்குமொருத்தியுமவன்றனைமயக்கும். 71

விண்ணினைக்குத்திக்கையிளைப்பவர்போல்வேணெடுங்கண்ணியங்கிருந்த
வண்ணலைத்தழுவித்தழுவிமெய்வருந்தியவசமுற்றணைமிசையுறங்கி
யெண்ணுறுநினைவாலவன்புணர்ந்ததுபோலின்கனவொன்றுகண்டெழுந்தாள்
கண்ணகனிலத்திருள்குடிப்பவனுங்கருங்கடன்முகட்டினிலெழுந்தான். 72

காலையின்மாலைவார்குழன்மாதர்க்கண்டுரைசெய்வளல்லமன்றன்
கோலமென்சொல்வேன்விழியெதிர்தோன்றிக்குறுகிலென்கைப்படானதனாற்
சாலவுநைந்துதுயின்றனன்கனவிற்றடமுலைகுழைந்திடப்புல்லி
மேலுநல்லருள்செய்துன்னைநானென்றும்விடுகிலேனென்றனனென்றாள். 73

அருந்தவமழிக்குமழகுடையணங்கிற்ககப்படாவிறலினன்யாரோ
புரந்தரனயன்மால்சுரர்முனிவரர்கிம்புருடர்வித்தியாதரரென்னப்
பரந்தவர்தம்முளலனிவனொருவன்பார்த்திடிற்பராபரனென்று
திருந்திழைமகளிர்மனத்துளேவியந்துதெரிவையோடுரைத்தன்மேயினரால்.74

ஆசைநின்னுளத்தின்மிகவளர்ப்பதற்காயல்லமனிவ்வகைநடித்தான்
பேசுறுகனவின்பயனுனக்குரைப்பிற்பின்புனைமெய்யுறவணைவன்
வாசமென்குழலாயென்றவண்மனத்தின்வருத்தமற்றிடவறிந்துரைத்தார்
காசணிமருங்குன்மடந்தையர்மாயைகவலைதீர்ந்துள்ளுளேகளித்தாள்

(70) அகம்-மனம்.

(71) கலயமுனி-கும்பமுனி. (அகத்தியன்.)

(72) முகடு-உச்சி.

(73) கோலம்-அழகு.

(74) விறல்-திறம். புரந்தரன் - தேவேந்திரன். (காத்தலில் வல்லவன்) பராபரன்-பரமசிவன்; அறிவிற்கு எட்டாதவன்.

(75) வாசம்-வாசனை.

இன்னணமாயைமாதிடைநிகழ்ந்தவியல்பினை மோகினிசிலர்போய்ப்
பன்னுறவறிந்துமானமீக்கூரப்பருவரற்கடலிடைப்படிந்து [கூ
தன்னொருமகள்வாழ்மாளிகையெய்தித்தனயையைப்பாங்கிமாரொடு
யென்னிதுசெய்தாயையகோபேதாயென்றுநைந்தின்னனபுகன்றாள். 76

மானமுமுயிருமொருங்குநில்லாதவழியுயிர்தன்னையேவிடுத்துத்
தானுறுபொருளாய்மானமேகொளுமுன்றந்தைதன்செவிப்படிலென்
பானுவுமதியுமியங்குறுமளவும்பழியிதுவழிவழிவராதோ [னும்
யானுனைவருந்தியீன்றதுமிதற்கோவென்செய்தாய்பாவியென்றிசைப்பாள். 77

குரவர்தாமியைந்துகொடுத்திலராயிற்குமரவேளனையவரேனு
மருவராநிற்பர்தந்தைதாய்தங்களாணையினெழுகுகன்னியர்தா
முருவிலாரெனினுங்குரவருண்மகிழ்வுற்றுதவுறினனையவர்தம்மைப்
பரவுவான்கடவுளாகவேநினைந்துபண்பொடும்பயிலுவரன்றே. 78

மணம்புரிவதன்முன்குரவராணையினுமணவினைமுற்றியபின்ன
ரிணங்குறவருள்செய்கொழுநனாணையினுமிருப்பர்தம்வயமிலரென்று
மணங்கனையவர்தாமென்பதையறிந்துமடாதவிச்செயலினைச்செய்தாய்
பிணங்குவாரிலையென்றிருந்தனைபோலும்பேதைநீயென்றுதாய்முனிந்தாள்.79

தான்செயுந்தவறுந்தாய்செயுமுனிவுந்தன்மனந்தனைநனிவருத்த
நான்செய்வதென்னென்றிருநிலநோக்கிநாணிநீர்விழியுகவிருந்தா [ன்
டேன்செய்மென்மொழியாண் மோகினிகண்டு சினந்தவிர்ந்தகங்கரைந்துன்மே
மான்செயும்விழியாய்பிழையிலையென்றாண்மனங்கரைவன்னைபோலுண்டோ.()

மங்கைமீர்நீயிர்சூழ்ந்தனரிருந்தும்வளைதருவேலியில்பயிர்போ [ழ
லெங்கடம்மடந்தைநிறையழிந்தொழியவென் செய்தீர்பாவிகாளென்
னங்குறுமடவார்சொல்வரெம்பிராட்டியருளொடுகேண்மதிமதனு [ர்.
லுங்குலமடந்தையுயிர்விடாதிருந்ததுன் றவமென்றுநைந்துரைத்தா

பாங்கியர்பகரச்சினஞ்சிறிதவிந்துபாங்கியர்குழுவினுட்சிறப்புற்
றோங்கியசகளைதன்முகநோக்கியுரைப்பண்மோகினியெனுமரசி
பூங்கணைமதவேளனையவல்லமனைப்புறத்துநின்றகற்றிடாதெங்க
ளீர்ங்கதிர்முகமெல்லியன்முனம்விடுத்தாயென்கொலோவெனவவளுரைப்பாள்

(76) பன்னுற-சொல்ல.

(77) பானு-சூரியன்.

(79) அணங்கு-தெய்வமகள். பிணங்குதல்-கோபித்தல்.

(81) நைந்து-மனம்வருந்தி. மதி-முன்னிலை அசை.

(82) ஈர்ங்கதிர்-சீதகிரணத்தையுடைய மதி.

மானிடப்பிறவியரிததிலரசர்மக்களாகுதலரிததனி
ஊனுறுப்பமைதலரிததிலரிதாலுணர்வொடுபோகங்கணுகர்த
ருனெனப்பெரியர்கூறலாலன்னாய்தவம்பலமுயன்றுநீபெற்ற
மீனெனப்பிறழுங்கண்ணியைவெகுண்டுவெறுப்பதுதகாதெனவுரைத்தாள். 83

மோகினிச்களைபுகன்மொழிகேட்டுமுகமலர்ந்தென்றவப்பயனும்
பாகெனுமொழியாடவறிலள்யாழோர்பயின்மணமரசர்மேற்றென்ப
ராகலிவிவளுக்கல்லமன்றனேயருமணத்தலைவனங்கவன்பாற்
போகம்வேண்டியவாகொள்கெனப்புகன்றுபுகன்றனள்பின்னுமோர்மாற்றம். 84

உலகெலாமறியவதுவைசெய்காறுமுலகமன்னவனறியாமற்
றிலகவாணுதலாளொழுக்கநீர்மறைமின்றேமொழியீரிவடமை
நலமெலாநுமதேயாதலானுமக்குநான்சொல்வதென்னெனுமகளுக்
கலகிலாவுவகைசெய்துபோயினடன்னகத்தினுண்முனிவுறவந்தாள். 85

என்பிழைபொறுமலன்னையோடென்பாலிருந்தவரேசொலினதனா
லன்புடையன்னைமுனியுமோவென்னவறைந்தனண்மாயைகேட்டறைவாள்
பொன்புரைசகளைநங்குருவுனக்குப்புராரியேதலைவனென்றிருப்பப்
பின்பிதுநீசெய்தனையெனினின்னைப்பிழைசொல்வார்மேற்பிழையுண்டோ. 86

மானனையாய்நந்தாயறிந்தமையான்மறைந்ததுநொய்துபட்டன்றிக்
கோணிதையறிவனெனினெளிதாமோகோமளவல்லிநீகேண்மோ
போனதுபோகவினியவன்றன்னைப்புறத்தினில்விடுவதேயறிவு
தானெனவுரைத்தாண்மாயைகேட்டயர்ந்துதாங்கருந்துயரமோடிருந்தாள். 87

அல்லமனறிந்துநந்திருமடந்தைக்கடுத்ததென்புகலெனச்சகளை
வல்லிநின்மாயைவலையிடைப்பட்டமறையெலாமிறைமனைநிறைந்த
தொல்லைநல்வினையாலறிந்திலன்வேந்தனொருவனும்யாமுய்யவேண்டிச்
சொல்லுவதொன்றுண்டையநீபுறத்தோர்சூழலிலிருத்தனன்றென்றாள். 88

மாயையையகன்றானடக்கக்காலெழுமோவாயிடைமாற்றமொன்றுண்டோ
போயொருவிடயமுணமனம்வருமோபொருந்துறும்பகலிரவுளவோ

(84) பாகெனுமொழியாள்-பாகையொத்த சொல்லினையுடைய மாயை.

(85) வதுவை-கலியாணம்.

(86) பொன்புரை-இலக்குமியைப்போன்ற. புராரி-பரமசிவன்; திரிபுர சங்காரம் செய்தவன் என்பதால் வந்த காரணப்பெயர்.

(88) புறத்தோர்சூழல்-வெளியிலோரிடத்தில் ("புறத்துறைவஞ்சி" என்று கம்பராமாயணத்தில் சுந்தரகாண்டம் கடறாவுபடலத்தில் வந்துள்ளதையறிக.)

(89) இப்பாட்டில் வந்துள்ள "மாயை" என்றது கதாநாயகியைக் குறிக்காமல் பிரகிருதியைக் குறித்தது.

காயமுமுயிருங்கலந்துவாழ்வுறுமோகண்டனமெனவெனையொருவர்
நீயறிவுறவிங்குரைப்பவருளரோநேரிழாயென்றனனண்ணல். 89

கருத்தினையறியாதவன்மொழிதனக்குக்காட்டியபொருளையேகொண்டு
விரைத்துணர்மலர்மென்குழலினுள்புணரும்விதியுளதென்னிலெங்கொடியைத்
தரித்தெவனொருநீயிருப்பினுமுனக்குத்தருமிதிலையம்வேண்டாவென்
றுரைத்தனள்கருணையென்றுசெய்குவனென்றுழன்றவளண்ணலைநோக்கி. 90

சகளையிவ்வாறுமொழிதரநங்காய்சாலவுநன்றுநன்றென்று
நகைமதிதவழுஞ்செஞ்சடைமதுகைநாயகன்றிருமுனஞ்சென்று
முகிழ்முலைநடிக்கும்பொழுதுதன்செயல்செய்முயற்சியினின்றனன்றனக்குத்
தகுமெனவளர்பேரறிவினுற்றனனைத்தானலாதறிதரப்படாதான். 91

ஐந்தாவது

## பிரபுதேவர்வந்தகதி முற்றிற்று.

---

கதி 5 - க்கு திருவிருத்தம் - 307.

---

(91) நகைமதி-வெள்ளிய சந்திரன்.

ஆறாவது

# விமலைகதி

வேறு

அமலையேவவகணிலத்தெய்துபு
சமலமாயைதனக்கருண்மூர்த்தியா
நிமலனல்லமனீதியையன்பினால்
விமலைகூறியவண்ணம்விளம்புவாம். 1

மதுகைநாதனைநாடொறுமாயைதா
னதிகவந்தனையாற்றிநமல்லம
னுதவுமான்மனத்தோங்கவிருந்தன
டிதிகளெண்ணிலசெல்லநிலத்தினே. 2

ஆயகாலையிலம்பிகைஞாலமேன்
மாயைபோய்நெடுநாளினும்வந்திலள்
போயிராதவட்கொண்டிவண்போதென
வேயினானல்விமலையையென்பவே. 3

கறையில்சோதிக்கயிலையினின்றுநம்
மிறைவியேவவிறைஞ்சிவருமுலைப்
பொறையினால்விழுந்தாளெனப்பூமிசை
மறுவிலாமதிபோல்பவள்வந்தனள். 4

வந்துபொன்னெயில்வட்டவனவசை
நந்துபொன்மணிமாடநணுகியே
சந்தமாயைதனதெதிர்நின்றனள்
கந்தமென்மலர்க்கற்பகவல்லிபோல். 5

---

(1) ஏவ-அனுப்ப. விமலை-ரஜோகுண வடிவத்தை யுடையவள்; ரஜோ குணமாவது-மனவூக்கம், ஞானம், வீரம், தவம், தருமம், தானம், கல்வி, கேள்வியென்று சொல்லப்படும் எட்டுமென்பர். சமலம்-மலம்.

(2) மதுகைநாதன்-மதுகேசுவரன்.

(4) கறை-களங்கம். வருமுலை-வளர்ந்துவருகின்ற முலை. பொறை-பாரம்.

(5) கந்தம்-வாசனை.

நின்றபோதெதிர்கண்டுநிலவுல
கன்றுபோலுமிவ்வாயிழைவாழிட
மென்றுமாமையெழுந்துதொழுதணை
யொன்றுமேவியிருப்பவுதவினள். 6

அருகிருந்தவனைய'ரிருவரு
மிருகரங்களுமேந்துமணியென
வுருவமைந்திவனெத்தனரென்றுசூழ்
புரமடந்தையர்புந்திவியந்தனர். 7

மாயைவந்தமடந்தையைநோக்கியே
நீயிருந்தவிதங்குன்பெயர்யாதுநீ
மேயதன்மையென்னென்றுவினவலுந்
தேயுநுண்ணிடைச்செப்புதன்மேயினள். 8

கயிலையென்னிடங்கற்பகவல்லியென்
பெயரியம்பின்விமலைபெருங்குல
சயிலமங்கைநின்றன்புடையேவினள்
வியனிலந்தனில்வந்துனைமேவினேன். 9

என்னமன்மகளெம்பெருமாட்டிதான்
மன்னும்வெந்துயர்மக்கட்பிறப்பினேன்
றன்னையுன்னிநின்றன்னைவிடுத்ததென்
பன்னுகென்னப்பகர்தரன்மேயினள். 10

வேறு

அல்லமன்வலிநிலையறிந்துவாவென
நல்லுமைநினைவிடநன்றென்றெங்கைநீ
வல்லமைபேசியிம்மண்ணில்வந்தபின்
சொல்லியநின்பெருஞ்சூண்மறந்தனை. 11

(6) அணை-ஆசனம்.

(7) புந்திவியந்தனர்-புத்தியில் அதிசயித்தார்கள்.

(9) நின்றன்புடை-உன்னிடத்தில். சயிலம்-மலை.

(11) நின்பெருஞ்சூள்-உனது பெரிய சபதத்தை.

நின்னையுமறிந்திலைநீயென்றாலிவ
னுன்னுறுமனமொழியுறாதவல்லமன்
றன்னைநீயறிவுறுந்தன்மையுண்டுகொல்
கன்னிமாதுமைதமகலையையல்லையோ. 12

ஓடுறமருந்தயின்றுறங்கல்போலுரை
யாடியசூண்மறந்தயர்ந்திருத்தலா
னாடிநின்றனைத்தாற்கென்னைநல்லுமை
யேடவிழ்மலர்க்குழாலேவினாளென்றாள். 13

கதிரெழுபகலெனக்கண்டிடாதுதண்
மதியெழுமிரவெனமனந்தெளிந்துதன்
றிதியொடுநினைவுமோர்சிறிதறிந்தனள்
விதியுணரிறைமகள்விமலைசொல்லினள். 14

மூலகாரணனெனச்சிலர்மொழிந்திடு
மாலுமோர்மானிடப்பிறப்பில்வந்துதன்
சீலமோர்ந்திலனெனிற்சிறியபேதைநான்
ஞாலமேன்மயங்குதனவிறல்வேண்டுமோ. 15

அல்லமனியல்பெலாமறியப்பூந்துணர்
வல்லிநின்குமுதவாய்மலர்ந்துகூறெனச்
சொல்லிநின்றிணையடிதொழுதமாதொடு
வில்லுறழ்நறுநுதல்விமலைகூறுவாள். 16

கயிலையினுமையொடுகண்ணுதற்பிரான்
செயலுறுமல்லமன்செய்திகூறலு
மயலுறவிருந்துநானறிந்துளேனதை
மயிலியல்கேளெனவகுத்தன்மேயினள். 17

---

(12) உன்னுறுமனமொழியுறாதவல்லமன் - நினையாநின்ற மனம் வாக்கிற் கெட்டாத வல்லமன். தமகலை யல்லையோ-தமோகுணாம்ச மல்லவா என்று பொருள் கொள்ளுதல் சிறப்பு.

(13) ஏடு அவிழ்-இதழ்கள் விரிந்த. ஏடு-இதழ்.

(14) விதியுணரிறைமகள்-ஞாய நூல்களை யறிந்த அரசன் மகள்.

(15) மூலகாரணம்-ஆதிகாரணம். சீலம்-பூர்வநிலையை.

(16) உறழ்-போல, உவமவுருபு.

### வேறு

படியில்வள்ளிகாவையெனும்பதியிற்றனக்குநிகரில்லா
னொடிவில்கருணைநிராங்காரனென்னுமுண்மைப்பெயரினான்
மடிவில்கற்பினவன்றேவிமாசுதீர்ந்தசுஞ்ஞானி
கடிவின்மறையாகமவிதிகள்கண்ணுற்றறியவொழுகுவார். 18

மெய்ம்மைசிவமேயல்லாதவிரியுமுலகம்பொய்யென்பா
ரிம்மைமறுமைநிலையல்லவென்னநிகழ்ந்தகருத்தினோர்
செம்மைநெறியிற்புறமோடகந்திரியுங்கரணங்காமாதி
பொய்மைவினையிலவர்குருநூல்பொருளாத்துணிந்துவீடுவப்பார்.

இனையராகியிருக்குநாளில்வாழ்க்கையினின்றிடுதலாற்
றனையரின்மையானெஞ்சந்தளர்வான்போன்றுநிராங்கார
னினையுந்தியானமில்லாதநெஞ்சுஞானமில்லாத
வினையும்போலுமக்களிலாமிக்கவாழ்வென்றியம்பியே. 20

இந்தவுலகிற்குதவியாயியன்றதொழில்கள்பலசெய்யு
மைந்தன்வேண்டுமெனநிற்போன்மக்கட்பதடியாகுவா
னந்தவுலகிற்காநினைப்போனறங்கூர்மகனுமத்துவிதா
னந்தமுதவுமகவிருப்போன்ஞானியாகுமென்றெண்ணி. 21

உடம்பைப்பொறியைக்கரணத்தையுயிரைத்தானென்றுழலாம
லடங்கத்துறந்துதனையறிந்துபேதாபேதமென்னுமயல்
கடந்திட்டிருக்கும்பரமுத்திகாட்டும்புதல்வன்வேண்டுமென
விடும்பைப்பிறவிநோய்தணிப்பவெண்ணுமனத்தானெண்ணினான். ()

---

(18) ஒடிவில்கருணை-இடையறாதகிருபை. ஆகமம்-முதல்வனாற் கூறப்பட்ட நூல். வேதாங்கமாவது-சீக்கை, கற்பம், இலக்கணம், சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம் என்பனவாம்.

(19) திரிகரணம்-மனம், வாக்கு, காயம்.

(20) தியானம்-ஐம்புலனடக்கிச் சிவயோகஞ்செய்தல். அது அனுஷ்டானம், சிந்திப்பு, நினைவு என்றுங் கூறுவர்.

(21) பதடி-பதர்.

(22) இடும்பை-துன்பம். பொறி-ஐம்பொறி. அதாவது, மெய், வாய், கண், மூக்கு, செவிகளாம். பரமுத்தி-மேலான மோக்ஷம்.

இரண்டோடிரண்டுமூவிரண்டையிரண்டாறிரண்டுமீமிசையெண்
ணிரண்டோடிரண்டுகொண்டிருந்தவிதழ்ப்பங்கயங்கள்கடந்துபோ
யிருந்தகுளத்தின்மேலோராயிரந்தோட்டமலகமலமிசை
யிருந்தசோதிதனைக்கண்டெமெண்ணமுடிப்பேமெனவெழுந்து. 23

வேறுமொருவனுடனிருப்பும்வேண்டாதவத்திற்கென்பதொடு
மாறுய்மனையுங்கொழுநனும்போய்வனத்திற்கமலாசனத்திருந்து
தேறுர்புனல்போற்றெளிந்தமனந்திறந்துந்திறவாவிழியொடுதம்
பேறுமிட்டலிங்கத்திற்பிறழாதமையும்படிவைத்து. 24

தறிபோலுடலநேரிருந்துதயங்குமருங்கினிருநாடி
நெறிபோய்மீளும்வளியதனைநிறுவிநடுநாடியிற்செலுத்தி
யறிவோர்சிறிதுஞ்சலியாமலன்னப்பெயர்மந்திரமாறிக்
குறிபோயிருந்தவொருகுறியைக்குறித்துக்கொண்டங்கிருந்தனரால்.

வாயுநிற்பமனநின்றுமனந்தானிற்பப்பொறிநின்று
பாயபொறிகணிற்பவிடர்படுபுன்புலன்கணின்றனவா
லாயபுலன்கணின்றமையாலகிலந்தோன்றாதுள்ளத்தே
தூயபரமானந்தபரஞ்சோதிதோன்றக்கண்டிருந்தார். 26

ஒருங்குமனமோடினையசிவயோகசமாதிநவதிங்க
ளிரம்பவிருந்தகாலத்துநெற்றிமிசையிற்பரஞ்சோதி
திரண்டுகுழவியுருவாகிச்சென்றுபுறமுற்றிடவதனை
விரும்புமிருவர்தாமுமுடன்விழிகடிறந்துகண்டனரால். 27

வெம்மையொழிந்துநிலத்திழிந்துவிளங்குகதிரோபனிநீங்கி
யெம்மையாளவருமதியோவிடுமிந்தனங்கணுகராத
செம்மையொளிவான்போழலோதெரியாதென்னவொளிர்ந்ததவர்
தம்மையறியாவுவகையுளந்தழைப்பச்சோதிமதலையே. 28

---

(23) மீமிசை-மேல்.

(24) கமலாசனம்-பதுமாசனம். திறந்துந்திறவாவிழி-சமநோக்கம்.

(25) தறி - ஸ்தம்பம். தயங்கல் - பிரகாசித்தல். வளி - காற்று. நிறுவி-கும்பித்து. நடுநாடி-சுழிமுனை. குறி-வஸ்து.

(26) புலன்கள்-சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் முதலியன. அகிலம்-பிரபஞ்சம்.

(27) ஒருங்கு-குவிந்த. நவதிங்கள்-ஒன்பதுமாதம்.

(28) இந்தனம்-விறகு.

அலைந்துபிறப்பிலாங்காரவஞ்ஞானிகளாமானிடரு
மலிந்தசுரருமுனிவருமற்றையோரும்பெறுவரோ
தொலைந்தமாயைநிராங்காரசுஞ்ஞானிகள்போன்மலவிருளை
நலிந்துவளர்சச்சிதானந்தநந்தாவிளக்காமதலையையே. 29

பேரானந்தம்பிள்ளையாப்பெற்றவவர்க்குவிடயத்து
ளோரானந்தம்பெற்றுடனேயொழியுமுலகர்தம்மைநாம்
நேராவியம்பலாகுமோநிகர்தாந்தம்மிற்றுமென்று
வாராரிளமென்முகிழ்முலைநன்மடவாயுரைப்பதன்றியே. 30

பண்டுபாசந்தபுசிலரும்பரஞ்சோதியைத்தாந்தம்முளே
கண்டுவாழ்வுபெறுநராற்கண்ணிற்காட்டுமவரில்லைத்
தொண்டுபடுமிந்நிராங்காரசுஞ்ஞானிகடம்முட்கண்டு
கொண்டவொளியையுலகுய்யக்குழவியாக்கிக்காட்டினரால். 31

சங்குந்தெய்வதுந்துமியுந்தழங்கமலர்மாமழைபொழிந்த
வெங்குந்திசைகள்விளங்கினகன்றீன்றமலடுதறிதளிர்த்த
பங்கங்கலந்தபுனறெளிந்தபதகர்மனமுந்தெளிந்தவருள்
பொங்குந்துறவர்மனமகிழ்ந்தபுனிதன்மகவாய்த்தோன்றுநாள். 32

நையாமனத்துநிராங்காரன்ஞானத்திரளாம்பிள்ளைதனை
மெய்யாமுளக்கணன்றியுமிவ்விழியுங்காணப்பெற்றனமென்
றெய்யாவுவகைக்கடன்மூழ்கியேறுன்மார்போடுறத்தழுவிக்
கையாலெடுப்பவெங்குநிறைகனவான்கனவானொய்தாகி. 33

செவ்வாய்ஞானமயில்கொழுநன்செந்தாமரைத்தாள்வணங்குபுந
மிவ்வாய்மகனதியல்புநீயியம்பாயென்னவவன்றெரிந்து
சைவாகமுமாரணமுஞ்சாற்றற்கரியநம்மகவை
யெவ்வாறுரைப்பனியான்மடவாயென்றுவியந்துகூறுவான். 34

---

(29) நலிதல்-கெடுத்தல். நந்தா-கெடாத.

(30) வார்-நீண்ட.

(31) பாசந்தபு-பாசநீங்கிய.

(32) புனிதன்-பரமசிவன். பங்கம்-சேறு.

(33)*நைதல்-வாடுதல். நொய்து-அற்பம்.

(34) ஆரணம்-வேதம்.

நாம்பார்க்குழவியாகாமனம்பாற்குழவியாயினான்
நீம்பாற்கடலிற்றுயில்வோனுஞ்செந்தாமரைமேலுறைவோனுந்
தாம்பார்க்கரியவடிமுடியோன்றானேயையமிதற்கில்லைக்
காம்பாற்புரிந்ததனையதோட்கனிவாய்த்தடங்கணாயென்றான். 35

ஆன்றமயல்செய்கையோகத்தன்றித்தவயோகத்தினா
லீன்றபொழுதிற்றன்மகனையிருந்துசான்றோனெனக்கேட்டுத்
தோன்றுமுவகைக்கடற்படிந்தாள்சுஞ்ஞானித்தாய்பசும்பொன்மலை
போன்றுவளர்ந்துமருங்குன்மிடிபோக்கவறியாவிளமுலையாய். 36

வேறு

மத்தநெஞ்சகமோடுதம்மதியினொன்றையறைந்திது
மெய்த்துறும்பொருளென்றதைவேதமாகமமோதுமென்
றுத்திகொண்டுரைசெய்தெதிரொன்றைநிந்தைசெய்சமயர்தம்
பித்தையல்லெனுமல்லமாப்பிரபுவெனும்பெயரிட்டனர். 37

வினையினாலொருவன்றருமேனியாளனலாதொரு
மனிதனாகிநடித்திடும்வடிவனாதலிலல்லம
னினையுமாறுதவழ்ந்துபின்னின்றுமெல்லநடந்துபோய்
வனையுமாமணிமாளிகைமறுகினாடல்பயின்றனன். 38

வருகவெங்கடமாவியேவருககண்ணுகரமுதமே
வருகவெங்குலதீபமேவருககேடறுசெல்வமே
வருகபாசவினாசனேவருகஞானவினோதனே
வருகவென்றனையுளமகிழ்ந்திடவந்துமேல்விழுமல்லமன். 39

மாயையாலுளவாகியவடிவுநாமமழித்துள
தாயவோர்பிரமந்தனையறியுமாறறிவித்தல்போன்
மேயபேதையர்மணலமைவீடுதாள்கொடழித்தனன்
போயுலாவுவன்மானிடன்போலவேவிளையாடுவோன். 40

(35) காம்பு-மூங்கில். ஐயம்-சந்தேகம். தாம்-அசை.
(36) மிடி-வறுமை.
(37) மத்தம்-மயக்கம். பித்தை-மயக்கம். உத்தி-யுக்தி.
(38) வினைதல்-செய்தல்.
(39) பாசவினாசன்-பாசத்தைப்போக்குபவன்.
(40) அமை-செய்த.

நாணியக்கினியங்குறுஞாலமென்றறிவித்தல்போற்
ருனுருட்டுநெல்வீதியிற்றமணியச்சிறுதேரினை
யானடக்கருநெஞ்சகமிதனையொக்குறுமென்பது
போனமக்குயிராயினேன்புதியபம்பரமாடுமால். 41

ஆடியொன்றெதிர்கொண்டுதம்மானனந்தெரிவார்கள்போற்
கூடியொண்குருவெதிர்கொடுகொண்டுதன்பெருவிஞ்சைக
ணாடியொண்கலைகற்றல்போறடைகம்பலசெய்தனன்
பீடுறும்பழமறைகளும்பேசரும்புகழாளனே. 42

தந்தைதாயுளமின்புறத்தனதுபேரருளாலிள
மைந்தனாகியிருந்தொருவாலலீலைநடித்தரு
ளெந்தைதானுலகெங்கணுமெய்திமக்கடம்வல்வினை
சிந்துமாறுநினைந்திதுசெப்பன்மேயினனென்பவே. 43

உங்கள்பாவனையொருமையாலுருவமாமகனாகிநா
னிங்குமேவியிருந்தனனினிநடந்துலகெங்கணுந்
தங்குமாதவர்முதலியோர்தங்களெண்ணமுடிப்பனென்
றெங்கணாதனியம்பவவ்விருவரும்புகல்கின்றனர். 44

பிறப்பெனுங்கடலிற்படும்பீழையேமுறுபுணையனாய்
துறப்பின்வீடெனுமொண்கரைதுன்னுறுதமிழ்வேமெனு
மறப்பிலாவிருகுரவருமனமுளைந்துரைசெய்திடச்
சிறப்பஞானசிகாமணிதெளியுமாறுரையாடினன். 45

சற்றுநும்மையகன்றிடேன்றளரன்மின்மனமென்றுநான்
சொற்றதையமுமக்கெனிற்றுணியுமாகமவேதநூல்
கற்றுளோரைவினுய்கிராங்காரஞானிகடமையிவ
ணுற்றவல்லமனகல்வனேலுரைமினென்றுணர்மின்களே. 46

---

(42) நாடுதல்-ஆராய்தல்.

(43) வாலலீலை-பாலலீலை. (இதை வடமொழி நூலுடையார் "வபயோர பேத:") என்பதனால் மாறியதென்பர். வந்தேமாதரம்-பந்தேமாதரம் என்பது போற் கொள்க.

(44) பாவனை-நினைப்பு.

(45) பீழை-குற்றம். துன்று-நெருங்கிய. உளைந்து-நொந்து.

(46) சொற்றது-சொன்னது.

என்றுபொன்றுமிவ்வுடன்முதலியாவும்வேறெனநீக்குபு
நின்றதம்மில்வேறலனெனுநிலையைநின்றுதாதான்மிய
மொன்றுறும்பரிசுரைசெயூவுணரும்வண்ணமுணர்த்தினான்
பின்றலின்றியவல்லமாப்பிரபுவெனுங்குருராயனே. 47

தந்தைதாயிலனாகியதாணுவாகியசங்கரன்
மைந்தனாய்மகவில்லெனுமனவருத்தமகற்றவு
முந்துதேசிகனாகினன்முத்திநல்கவுமெய்தினோ
ரிந்தமாதவரலதிலையென்றுமக்கடுதித்தனர். 48

ஆதலாலெழிலல்லமனருளினாலுறுகின்றது
வாதமாறுநன்முத்திதான்மலைதருங்கொடியறிதியென்
றோதினாரனதுபொழுதுடனிருந்தனனென்றவண்
மேதைமாயையறிந்திடவிமலைகூறினளென்பவே. 49

எள்ளிலெண்ணெயெனப்படரிந்தனத்தெரியென்னவாய்
விள்ளுமென்மலர்மணமெனவிரவியெங்கணுநிற்பினும்
வள்ளலல்லமனன்பர்தம்மனமடைந்துவிளங்குவன்
றெள்ளுமின்சுவைவிம்முபாறிரண்முலைக்கணினொழுகல்போல். 50

ஆறாவது

விமலைகதி முற்றிற்று.

---

கதி 6 - க்கு திருவிருத்தம் - 357.

---

(47) பொன்றுதல்-இறத்தல்.

(48) தேசிகன்-குரு.

(49) வாதம்-சொற்போர். மேதை-பேரறிவு.

(50) எள்ளி-பரிகசித்து. படர்-மிகுந்த. விரவி-கலந்து. விம்மு-மிகுந்த.

ஏழாவது

# மாயைகோலாகலகதி

நல்லெழில்விமலையின்னணநவின்றிட
முல்லைவெண்ணகைவருமுயற்சியெண்ணியே
புல்லுவனவனையென்றெழுந்தபோதினி
லல்லமனகன்றமையறியக்கூறுவாம். 1

முகிழ்மதியணிபவன்முதல்விக்கோதிய
வகைபெறவிமலைதான்வகுப்பமாயைகேட்
டகநெகிழ்வுற்றுநாமல்லமப்பெருந்
தகைதனையடைவதெவ்வாறுசாற்றென்றாள். 2

மழுவலமுயரியவள்ளல்வந்தனை
யழகுறவியற்றினையாயினல்லமன்
விழியெதிர்தோன்றிநீமனத்துவேண்டிய
தொழிவறநல்குவனுனக்கென்றோதினாள். 3

முதல்விநீயுரைசெயுமுன்னமேயருண்
மதுகைநாயகன்றனைவழிபட்டேத்தினே
னதுதரும்பயனிலையறிந்துளேனெனப்
புதுமயன்மூழ்கினாள்புலர்ந்துகூறினாள். 4

வெருவறவிவளகவிழியிலாமையாற்
பரசிவபூசனைப்பயனிலென்றனை
ளரகரவென்றுகாதங்கைவைத்திடீஇ
துரைசெயும்விமலைதன்னுளங்கலங்கியே. 5

(1) புல்லுதல்-பிடித்தல்.

(2) முகிழ்மதியணிபவன்-பாலசந்திரனைச்சூடிய பரமசிவன். முதல்வி-பார்வதி. வகை-விரிவு.

(3) வலம்-வலதுபாகம்.

(4) பயனிலை-பிரயோசனமில்லை. மயல் - மயக்கம். புலர்ந்து - மனம் வாடி.

(5) வெருவற-அச்சமில்லாமல். காதங்கைவைத்து-காதை உள்ளங்கையால் மூடி.

பயனிலையருச்சனைபயின் றுமென்றனை
யயனரிமுதலியவமரர்க்காயினு
நயமொடுசதாசிவநாதன்பூசனை
முயலுதலன்றியோரெண்ணமுற்றுமோ. 6

வாசவனரியயன்வானநாட்டுளோர்
பாசமின்முனிவரர்பலருமண்ணிடைப்
பூசனைவிதிமுறைபுரிந்தவாலயங்
காசணியல்குலாய்காண்கிலாய்கொலோ. 7

மலைமகள்சூரரமகளிர்பாற்கட
லலைமகண்முனிவரில்லறக்கிழத்தியர்
கலைமகள்விழிநுதற்கடவுட்பூசையா
னிலைமைகளடைந்தமைநினைந்திலாய்கொலோ. 8

சித்தியுமாயுளுஞ்சிறப்புங்காமிய
புத்தியரடைவரப்புத்திநீக்கினோர்
முத்தியையடைவரெம்முதல்வன்பூசையாற்
சத்தியஞ்சத்தியந்தளர்மருங்குலாய். 9

பீடுறுமானிடப்பிறப்புவாய்த்துநல்
லேடவிழ்மலரினுவிறையைப்பூசியார்
பாடமைநாளெலாம்பாழ்க்கிறைப்பவர்
மூடரையெண்ணுங்கான்முந்திநிற்பரே. 10

காம்படுதோளிமுக்கண்ணன்றாண்மலர்
தேம்படுமலர்கொடுபூசைசெய்பவர்
பாம்பொடுபழகிலாப்பரமனென்றவர்
பூம்பதமனமகிழ்ந்துலகம்போற்றுமே. 11

---

(6) அருச்சனை-பூசை. அமரர்-தேவர்கள். வழி-ஆகமம். ஆலயம்-கோவில்.

(7) வாசவன்-தேவேந்திரன்.

(8) இல்லறக்கிழத்தியர்-மனைவியர். நிலைமை-பதம்.

(9) காமியபுத்தியர்-அற்பவிஷயங்களில் விருப்பமுடையவர்.

(10) பீடுறும்-பெருமைபொருந்திய என்பதாம். ஈண்டு கிடைத்தற் கருமையான என்னும் பொருளது.

(11) தேம்படு-வாசனை பொருந்திய. பூம்பதம்-பொலிவாகிய பாதம். உலகம்-உலகத்திலுள்ளவர்; இது ஆகுபெயர்.

நோய்ப்பிறப்பிலாதகண் ணுதலைப்பூசியா
வாய்ப்புறத்தலைக்கொருமதிபெறுநர
ஞய்ப்பிறப்புற்றதினறிஞரெள்ளுரு
நாய்ப்பிறப்பாற்றவுநன் றுநன்றரோ. 12

பொருவிலியாகமம்புகன்றமந்திரக்
கிரியைகள்வழுவறக்கிளக்குநல்லருட்
குருபரனருளினுற்கொண்டுசெய்குநர்
பரசிவபூசனைப்பயனைநண் ணுவார். 13

அண்ணலைம்முகங்களுமருளுமாகம
நண்ணியவிதிமுறைநன்குசெய்யினு
மெண்ணருமன்புளத்தில்லையேயெனிற்
பண்ணியபூசனைபயன்றராதரோ. 14

பூசைசெய்தன்னையும்பூசிக்கப்படு
மீசனதியல்பையுமிறைவன்பூசைசெய்
யாசறுபொருளையுமறிவறிந்துயர்
தேசிகனருளினுற்றெளியவேண்டுமால். 15

மந்திரதந்திரவழுக்கள்வந்தவோ
சிந்தனைபுறவிடயத்திற்சென்றதோ
பைந்தொடிபூசனைபயனிலென்றுநீ
நிந்தனைசெய்தடைதன்னிகழ்த்துவாயென்றாள். 16

என்றுநல்விமலைமாதியம்பப்பூசையால்
வென்றிகொளல்லமன்விழியிற்றோன்றிய
நன்றியையறிந்திலணழுவிநிற்றலால்
வன்றுயர்மனமுறமாயைகூறுவாள். 17

(12) நரன்-மனிதன்.

(13) பொருவிலி-ஒப்பில்லாதவன். கிரியை-பூசிக்கும் தொழில். நண்ணுதல்-அடைதல்.

(14) அன்பு-பக்தி.

(15) ஆசு-குற்றம்; அறு-நீங்கிய.

(16) வழு-குற்றம். புறவிடயம்-வெளிப்புலன்கள்.

(17) வன்றுயர்-மிகுந்ததுன்பம்.

## வேறு

ஒன்றையுமுணர்கிலேனுனெங்குருவுரைத்தவாற்று
வின்றளவிலிங்கபூசையியற்றியும்பயனென்றில்லை
யென்றனைள்பருவமுற்றோர்க்கிருமுறையுபதேசிப்ப
தன்றிவன்மணிதர்க்கோதினதுபயன்படுவதுண்டோ. 18

நெறிபலமுறையுரைத்துநினைந்திலளதனையங்தோ
மறுகுறுமனத்தளாகிமாயைமால்கொண்டிருந்தா
ளறிவிலர்க்கறிவிப்பார்தாமறிவிலாராவரென்று
வெறிமலர்வணர்வார்கூந்தல்விமலைதன்மனந்தளர்ந்து. 19

இவண்மனங்கவன்றிருந்ததிதனைநானறிவலென்று
குவிமுலைவிமலைசொல்வாள்கோற்றொடிமடந்தாய்நின்மே
லவிழ்மலரம்புபட்டதாயிருந்தன்றெனக்கு
நவிலுதிமறையேலன்னைநகமகளாணையென்றாள். 20

ஆணையைவெருவிமாயையம்பலத்தாடாநின்ற
தாணுவுமுளம்விரும்புந்தண்ணுமைத்தொழிலான்கண்கட்
கூணெனுமழகின்மிக்காளொருவன்வந்தனனன்னைக்
காணலுமெனைநான்காணேனென்றனள்கற்றோர்போல. 21

அல்லமனனையனுமமவன்றனக்கலதென்னெஞ்சக்
கல்லுருகுறுதுமுக்கட்கடவுளுக்கன்றிமேரு
வில்லுருவாவதுண்டோவிளங்கிழாய்நின்னைக்காணு
நல்வினையொன்றிருப்பநானுயிர்தரித்தேனென்றாள். 22

நீநவிலல்லமன்வேனெடுங்கண்வாணுதன்மடந்தாய்
நானவிலல்லமன்றனச்சுமுன்றனக்குத்தக்க
மானிடவடிவங்கொண்டுவந்தனன்போலுமன்னன்
ஞானநல்விழியினன்றிநயந்துதன்னுண்மைகாட்டான். 23

---

(18) பருவம்-பக்குவம்.

(19) வெறி-வாசனை. வணர்-தாழ்ந்த.

(20) கவன்றிருந்தது-கவலைகொண்டிருந்தது. நவிலுதி - சொல்லுவாய்; முன்னிலை ஏவல்வினைமுற்று. நகம்-மலை.

(21) வெருவி-பயந்து. தாணு-பரமசிவன். ஊண்-ஆகாரம்.

(22) இழை-ஆபரணம்.

(23) நச்சல்-விரும்பல்.

என்னநல்விமலைகூறவிலங்கிலைநெடுவேற்கண்ணி
தன்னிகரல்லமன்சச்சிதாநந்தசம்புவென்று
யன்னவனலனிவன்றான்மத்தளவல்லமன்காண்
முன்னொடுபின்மயங்கமொழிந்தனையணங்கேயென்றாள். 24

வேண்டியவடிவங்கொண்டுவேண்டியவாறுசெய்யு
மாண்டருளல்லமற்கிதாமென்றுமாகாதென்றுங்
கோண்டருநினதுநெஞ்சாற்குறித்திடப்படுவதுண்டோ
பூண்டிகழிளமென்கொங்கைப்பொற்றொடியென்றுசொன்னாள். 25

தருக்கநின்னுடனுரைத்தறகாதினியரங்கிலென்றன்
கருத்துறுமனையன்றன்னைக்காட்டுவல்கண்டுநீபின்
புரைத்தருளினையனென்னவுணர்ந்தறிவரியனென்று
தெரித்தவனுயினன்றன்றிறலினைக்காண்பலென்றாள். 26

கண்டுகொண்மணியின்றன்மைகாட்டுதற்கறிந்துளோரைக்
கொண்டுசெல்பவர்போல்வந்தகோதையையுடன்கொண்டேகிப்
பண்டுதன்பூசைக்கெய்தும்பரிசுபோன்மகளிர்சூழத்
தொண்டையங்கனிவாய்மாயைசுடர்மணிக்கோயில்புக்காள். 27

அருச்சனைமுன்புபோனன்றாற்றுபுமதுகைநாதன்
றிருச்சரணங்கள்போற்றிச்சேயரிநெடுங்கட்செவ்வாய்
விரைத்துணர்மலர்மென்கூந்தல்விமலைமாதோடும்வந்து
நிருத்தமண்டபம்புகுந்தாணிரைவளைத்தளிர்க்கைமாயை. 28

அல்லமரிவர்தாந்தாமென்றறிதரவறிதிராமற்
சொல்லுகவெனவடிக்குந்தோற்றம்போன்மத்தளத்தை
வல்லவனறைதலோடுமாயைநெஞ்சூசலாடச்
சில்லரிமணிச்சிலம்புசிலம்புறவாடுகின்றாள். 29

---

(24) இலங்கிலை-பிரகாசியாநின்ற விலைபோன்ற. சம்பு-சிவன். அணங்கு என்றது ஈண்டு விமலையை.

(25) கோண்டரு-மாறுபட்ட, கோணலாகிய.

(26) தருக்கம் - சொற்போர்; கற்றுவல்லவர்கள் சாத்திரத்தை உட்படுத்தி யுக்திவாதம் செய்தல்.

(27) தன்மை-குணம். குழாம் - கூட்டம். தொண்டையங்கனி-அழகிய கோவைப்பழம்.

(28) நிரை-வரிசை. ஆற்றுபு - செய்து. விரை-வாசனை. நிருத்தம்-நடனம்.

(29) அறிதர-அறியும்படி. வறிது-சும்மா. சில்லரி-சிலவாகிய பரலையுடைய.

முன்னுறநின்றஞானமூர்த்திமேல்விழியுமார்த்துப்
பின்னுறநின்றமூர்த்திமான்மிசைப்பெயருநெஞ்சு
மன்னுறவிருத்திநின்றுமாயைதானடித்தாள்கண்டோர்
தன்னயனமுமானெஞ்சுந்தன்மிசைவந்துவீழ. 30

அரத்தமதுறுபளிங்காயரிமதர்மழைக்கண்மாயை
கருத்துறுகாமந்தன்பாற்காணுறத்தோன்றிநின்றான்
வருத்துறுசெயல்கொண்மாயைமருவியகுணமடுத்துப்
பரத்தினிற்றோன்றுமென்றுபகர்வதுமுண்மையன்றே. 31

கூத்துக்குப்புகுந்தநம்பிகொட்டுக்குநாணுறாமற்
சீர்த்தப்புநடநவின்றுசிந்தைவேறாகிநின்றாள்
வார்த்தைக்குட்படாதஞானவாரியைவாயாற்சொல்ல
மூத்துக்குமதியைவென்றமுகத்தியர்குழாத்துணி. 32

கையொடுசெல்லாநின்றகடைக்கணான்மாயைகாட்ட
வையனைவிமலைகண்ணுற்றதிசயமுடையளாகி
வையகமதனின்மிக்கமணிதருளினையன்போல
மெய்யழகுடையான்றன்னைவேறுகண்டிலனென்றுள்ளி. 33

மாறருமலமனையிவ்வடிவுகொண்டவள்செய்பூசைப்
பேறருளுதற்குற்றானோபெருந்தவத்தாற்பிறந்த
வேறொருமகனோவென்றுவிமலையையத்தளாகித்
தேறிலணிற்பமாயஞ்செய்துநின்றனனெங்கோமான். 34

தமமில்வேலையினிற்சேய்மைத்தடத்தொருவனைக்கண்டன்னா
னமைவுறவருதல்போதலையமுற்றறியார்போல
நிமலனைவிகாரியென்றுநிகழ்நிருவிகாரியென்றும்
விமலையேமயங்குமென்னின்மாயையைவெறுப்பதென்னே. 35

---

(30) மூர்த்தி-அல்லமன். மன்னுற-நிலைபெற. மால்-மயக்கம்.

(31) அரி-இரேகை. மதர்-செருக்கு. மழை-குளிர்ச்சி. காமம்-விரகம். அரத்தம்-செந்நிறம். பளிங்கு-கண்ணாடி.

(32) சீர்-சதி. மூத்து-முதிர்ந்து.

(33) வையகம்-உலகம். உள்ளி-ஆலோசித்து.

(34) மால்-விருப்பம். பேறு-பலன். கோன்-தலைவன்.

(35) தமம்-இருள். சேய்மை-தூரம். விகாரி - விகாரத்தையுடையவன். நிகழ்-பிரகாசம். நிருவிகாரி-விகாரமில்லாத கடவுள்.

நீர்நிலைகோலாற்காணாநீர்மைபோலிங்குநின்றான்
சீர்நிலைமாயைதன்னாற்றெளிவுறவறிவலென்னா
வேர்நிலைவடிவமாயைக்கிணையனையலமனென்று
வார்நிலைமுலைமடந்தைவடிக்கணாற்காட்டினாளால். 36

கண்ணினாற்கேட்குஞ்சீர்சால்கங்கணத்திறைவன்முன்னர்
கண்ணினாற்குமரர்நெஞ்சக்கட்டவிழ்த்தாடுவாட்குக்
கண்ணினாற்கூறவந்தகைலைமாதறிந்தாளன்னாள்
கண்ணினாற்கண்டுஞானக்கண்ணினாற்காண்பான்றன்னை. 37

வல்லிதன்மனத்திற்காமமாய்ந்துவண்கைலைக்குன்றில்
சொல்லியசூணெஞ்சத்திற்றோன்றலுஞ்சுழன்றாடிப்போ
யல்லமன்மீதுவீழ்வாளாகமேல்வீழ்ந்துபற்றிப்
புல்லியநினைந்துசென்றாள்புல்லியநெறியினின்றாள். 38

கண்டனனவள்கருத்தைக்காரிகைமனத்திற்காம
மண்டலமுணரக்காட்டிவழிக்கொள்வலென்றுளத்திற்
கொண்டுகைதவறிவீழ்ந்தகுடமெனமத்தளந்தான்
விண்டுகவெறிந்துபோகட்டோடினன்விரைந்துவீரன். 39

இத்தனையாட்டமெல்லாமிவட்கிதனாலென்றெண்ணி
மத்தளமதனைவீசிப்போகல்போல்வள்ளல்போகப்
பித்தடைந்தனன்கொலென்றுபித்துறீஇமாதரெல்லாங்
கைத்தளிர்விரன்முடக்கிக்கவுளடிவைத்துநின்றார். 40

பறையடித்தின்றுகாறுமறைத்தவிப்பாவைசெய்கை
பறையுடைத்தொழிந்துகாளைபாரெலாமறியச்செய்தான்
கறையடிக்களிநல்யானைக்கருங்குழற்சீற்றத்துப்பி
னிறைமகட்குயிர்நிலாதென்றிகுளையர்மனமுளைந்தார். 41

---

(36) நீர்மை-தன்மை. சீர்-குணம். ஏர்-அழகிய. வார்நிலை-கச்சணிந்த.

(38) வல்லி என்றது ஈண்டு மாயையை. சூள்-சபதம்.

(39) மண்டலம்-உலகம்.

(40) பித்துறீஇ - மயக்கமடைந்து. கவுளடி-கபோலமூலம், கன்னத்து அடி அதாவது தாழ்வாயில் கைவைத்து நின்றார் என்பதாம்.

(41) பறை-தப்பட்டை. காளை-என்பது ஈண்டு அல்லமனை; உவமையாகுபெயர். களி-செருக்கு. சீற்றம்-கோபம். இறைமகள்-அரசன்மகள். இகுளை-தோழி.

சிலைமதனின்றுசெய்யுஞ்செருவினுக்கன்றிவெள்ளி
மலைதனிலியம்புமாற்றம்வழுவிற்றென்றுளமழிந்தாள்
கலவிசெய்தலைவனீங்கக்கைப்பொருட்கழுதிரங்கு
முலைவிலைமகளிர்போலமுத்தவாணகைப்பொற்கொம்பு. 42

மாலைவாய்மரையேபோலுமாயைவாண்முகத்தைக்கண்டு
வேலுலாங்கருங்கட்செவ்வாய்விமலைமாதவளுளத்திற்
சாலுமாரஞரறிந்துதடங்கணாய்தளரேனீநின்
சீலநாயகன்போந்தேத்துந்தேடிநாங்காண்போமென்றாள். 43

சிலைநுதல்விமலைசொல்லாற்றெளிந்துளமிறையைநோக்கிக்
கலைதொடருழைபோன்மாயைகாட்டினிற்றொடர்ந்துபோனுண்
மலர்தொடரளிகள்போலமாயையைத்தொடர்ந்துசென்றார்
கொலைபடுமயிலமர்த்துக்குழைபொருதடங்கணல்லார். 44

மெய்த்தவம்பயின்றுபெற்றுவேந்தர்க்குங்கொடாமன்முக்க
ணத்தனுக்கென்றுவாளாவரசன்வைத்திருந்தபாவை
மத்தளிகன்பின்போனுண்மகடனையாண்டோவாண்டு
பத்தின்மேல்வைத்திருத்தல்பாவமென்றிகழ்ந்தார்கண்டோர். 45

பாவமும்பழியுநல்கும்பல்வகைப்புகழறங்கள்
யாவையுமழிக்குமெய்துமின்பமுமதனுலெய்து
நோவுநன்மரபுஞ்செய்யுநோன்புநல்லொழுக்குமேன்மை
சாவுமெண்ணுறுமனிற்குந்தயங்குபுன்காமமென்பார். 46

வேறு

பஞ்சின்மேன்மிதிப்பினும்பதைபதைக்குமென்பதங்க
ளஞ்சுறுள்பரன்மிதிப்பதைநீருணவவாவாள்
விஞ்சுஞாயிறுமுதிர்கதிர்வெதுப்பினைவெருவாள்
நெஞ்சியோகிமேலிருத்தியந்நிரைவனைசென்றாள். 47

(42) சிலை-பாணம். செரு-சண்டை.
(43) சீலம்-ஒழுக்கம்.
(44) உழை-மான். அயில்-வேல். குழை-காதணி; ஈண்டு ஆகுபெயராய் காதை உணர்த்திற்று என்பாரும் உண்டு.
(45) பாவை-பெண், உவமையாகுபெயர். ஆண்டு-வருஷம்.
(46) மரபு-வம்மிசம்.
(47) பரல்-பருக்கைக்கல். விஞ்சு-மிகவும்.

காமவெந்தழலானுடல்வெந்துளங்கரிந்த
கோமடந்தையலாலலைமேல்வருகுளிர்தண்
பூமடந்தையப்பாலையிற்போமெனிற்புனலிற்
றாமிளங்கயல்சுடுமணல்வீழ்ந்தெனத்தளரும். 48

பானலங்கருங்கண்ணிபோகியகொடும்பாலை
யானைதன்புழைக்கைநிகர்துளியிடைவிடாமல்
வானநின்றுபெய்யினுந்தழற்பட்டவல்லிரும்பின்
மேனகந்தெறிதிவலைபோற்சுவறுறும்விரைந்து. 49

மாலருந்தியபோதுதன்வயிற்றிடையிராதிப்
பாலையன்றுடனுமிழ்ந்திலனாகின்மெய்பதைத்து
வேலையின்றலைவீழ்ந்ததனாலுமுண்வெண்ணெ
யாலும்வெந்தழறணிந்துயிருய்குவனலனே. 50

நாயினாவினீர்சிறுமுயற்குருளைகணக்குந்
தீயபாலையிற்றனைமறந்தவசத்திற்சென்ற
மாயைமாதுபின்றொடர்ந்துசென்மலர்முகமாதர்
வாயினீரறீஇக்கண்கணீர்சுரந்தனவந்து. 51

கானனீரெனச்சிறிதிடங்கடிதுசென்றிளைப்பார்
மானனார்சிலர்வாய்க்கடைநாவினால்வருடித்
தானையோர்கரமுகத்தெதிரசைத்துமெய்தளர்வார்
வேனிலாகொடிதென்றுதம்விதியினைவெறுப்பார். 52

மாதரிவ்வணந்தொடர்ந்துபின்வரவெழின்மாயை
பாததாமரைவருந்தினபாலையுணடந்தவ்
வாதிநாயகன்றனைமறித்துதவிசெய்தறன்மெல்
லோதியோடுறவாவமென்றுழைகண்முன்னோடும். 53

---

(48) கோமடந்தை-ராஜகுமாரத்தி. தாமிளங்கயல்-தாவாநின்ற இளமை பொருந்திய கெண்டைமீன்.

(49) பானல்-நீலோற்பலம். புழைக்கை-துதிக்கை. திவலை-நீர்த்துளி.

(50) மால்-நாராயணன். வேலை-சமுத்திரம்; ஈண்டு திருமகள் பிறந்த க்ஷீராப்தியைக் குறித்தது.

(51) குருளை-குட்டி.

(52) அனார்-ஒத்த; உவமவுருபு. வருடி-தடவி.

(53) மறித்து-தடுத்து. உழை-மான்.

கூந்தன்மேல்விரிமுகிறரக்கோபம்வாய்காட்ட
வேந்துகொங்கையின்வடமலையருவியையேய்ப்பக்
காந்தளங்கைகடரவருங்காரெனக்கலாபம்
வாய்ந்தமஞ்ஞைகண்மகிழவந்தனள்பெருவனத்தில். 54

சிங்கமுங்கரியும்பணிசெயத்தவஞ்செய்யூ
வங்குறுந்தவர்மாயைதன்முலையிடையாமா
தங்கமுஞ்சிறுசிங்கமுங்கண்டுளந்தளர்ந்து
பொங்குறுந்துயரோடெழுந்திரிந்துபோயினரால். 55

கொடியவாள்வரிவேங்கையைக்கண்டமான்குழாம்போ
னெடியவார்சடைமுனிவரர்கலங்குறுநிலையுந்
தொடியுலாவுமென்றேண்மடவார்வருதுயரு
முடியுமாறருள்செயநினைந்தனனருண்மூர்த்தி. 56

மாயைபோகவோர்கணத்தினிற்றுரப்பனீர்மனத்தி
னோயுறீரெனவொருமுனிபோனின்றுநுவன்று
தூயமாதவர்க்கருள்செய்துதொல்லைநல்லுருவாய்த்
தேயுநுண்மருங்கணங்கெதிர்தோன்றினன்சிரித்து. 57

பொங்குமாரழல்வெஞ்சுரம்புக்கபூவையர்க்குக்
கங்கையாறெதிர்ந்தாலெனக்கண்ணெதிர்தோன்று
மெங்கணுயகன்றிருவடித்தாமரையிணையைத்
தங்களாகுலந்தீர்ந்துமெய்குளிர்தரச்சார்ந்தார். 58

பெருகளற்றினிலழுந்தியங்கெழுபவன்பிடித்த
கரநெகிழ்த்துவிட்டகல்பவன்போலிளங்காளாய்
விரைமலர்க்கணைபட்டுளநையுமெல்லியலை
யருளறத்துறந்தனையென்கொலென்றனரவர்தாம். 59

(54) முகில்-மேகம். ஏய்ப்ப-ஒப்ப.

(55) கரி-யானை. இரிந்து-ஓடி.

(56) தொடி-வளை.

(57) துரப்பன் - ஓட்டுவேன். நோயுறீரென - வருத்தமுற வேண்டாமென்று. நுவன்று-சொல்லி.

(58) ஆகுலம்-வருத்தம்.

(59) அளறு-சேறு.

பற்றியாயிடைவிடுத்ததுநீயிரேபற்றி
யிற்றைநாளுமைவிடுத்திலேனிதனையிவ்வுலக
முற்றுமோதுறுந்தம்பிழைமொழிகுநருளரோ
குற்றநாடியேதிலரிடைகூறுநரல்லால். 60

என்னவோதலுமல்லமனேந்திழைமடவார்
மன்னன்மாமகண்மனத்தெழுகாமநோய்வளரு
முன்னநீமுனியாதிருந்தின்றுதான்முனிந்தா
யென்னையேறவிட்டேணியைவாங்கினையென்றார். 61

தொல்லைநின்றிருமேனிபோலுள்ளமுந்தூய்தாய்
நல்லையென்றுனைநம்பினேன்வஞ்சகநடிப்பு
வல்லையென்பதையறிந்திலேனானெனவன்சொற்
சொல்லிநின்றனண்மாயையெம்பிரானிதுசொல்லும். 62

வஞ்சநாடகநடிப்பதுமாயைதன்செயலோ
தஞ்சவல்லமன்றன்செயலோவெனத்தடங்கட்
பஞ்சின்மெல்லடியாய்கடவுளரையும்படிறி
னெஞ்சமாதவர்தமையுங்கேட்டறிதிநீயென்றான். 63

கள்ளன்மங்கையைக்களவுசெய்பொருளினைக்கண்டு
கொள்ளுநன்குறிபுகல்விப்பதொக்குமென்கூத்தைத்
தள்ளருஞ்சுரர்முனிவராற்சொல்விக்குந்தகைமை
வள்ளலென்றுபுன்னகைகொளீஇயுரைக்குமம்மாயை. 64

நெஞ்சம்யாதினாலெனையகன்றிடவரிநினைக்குங்
கஞ்சன்மாயையிலனெனக்கழறவாயுண்டோ
விஞ்சும்வாணிறையென்னையெம்மெய்யினால்விடுவான்
றஞ்சமாயையென்றிகழ்தரத்தக்கசொற்கற்றோய். 65

(60) உமை-உங்களை. ஏதிலர்-அயலார்.

(62) வன்-கொடுமை.

(63) கடவுளர்-தேவர். படிறு - அசத்தியம், உண்மைக்கு மாறானது. புகல்-சொல். கொளீஇ-கொண்டு.

(65) கஞ்சன்-பிரமதேவன். இப்பாடலில் மாயையைக் கடவாதவர்கள் யாவரென்னிலோ, பிரமன், விஷ்ணு, இந்திரன் முதலியவர். அவர்களை என் அவ்வாறு கூறவேண்டுவமெனின், திருமாலின் மார்பில் இலக்குமி இருத்தலானும், பிரமன் முகத்தில் சரஸ்வதி வசித்தலானும், இந்திரன் மெய்யில் பெண்குறியிருத்தலானு மென்க.

என்னையஞ்சிமாவமுங்குகாட்டிருக்குமாதவரென்
றன்னைவென்றிடவல்லரோவல்லரென்றன்னைப்
பின்னைவென்றிடவல்லரியார்பேசுதியென்று
மின்னைவென்றநுண்ணிடைசொலவல்லமன்விளம்பும். 66

என்றனுணையைக்கடப்பவரிலையிலையென்று
வென்றிகூறினையேலவர்நிற்கவேல்விழியாய்
நின்றவாருயிர்முயற்சியானிகழ்த்தியமாற்ற
மன்றிவாழ்மறையாகமத்தறிதியென்றறைந்தான். 67

நாலுவாக்குநீபார்ப்பினுநானவற்றினுக்கு
மூலகாரணமாகுவன்மொழிந்தவிம்மாற்ற
நூலெலாமுரைத்திடுமெனசசெருக்கொடுநுவன்றுண்
மாலெலாம்பிறப்பதற்கிடமாகியமாயை. 68

ஆட்டுகிற்பனிவ்வகிலமுமென்றனைநின்னை
யாட்டுகிற்பவராரெனவறிந்திலைபேதாய்
கேட்டுநின்னையோர்பொருளெனமூடரேகிளப்பார்
நாட்டுமென்னைநன்கறிந்துயர்ஞானிகணவில்வார். 69

ஆரையாரிருந்தாட்டுவரோவதையறியே
மாரவேள்செயுநோய்மறித்ததன்பினென்வாதம்
பாரெனுவியம்பினள்பசிக்கனமிடிற்பசிநோய்
தீருமாமருந்துதவுவனெனன்பவர்சீர்போல். 70

காமியாகிநீயருச்சனைகடைப்பிடித்தமையா
னுமவேனெடுங்கண்ணினுய்காமிபோனடித்தேன்
றீமைநெஞ்சினுற்குணினைந்தனைநினைத்திண்டேன்
போமினுருடனென்றனன்வன்சொலாற்புனிதன். 71

---

(66) மாதவர்-மிருகங்கள் சஞ்சரிக்குங் காட்டிலிருக்குமுனிவர்கள். மா-மிருகம். இது பலபொருள் ஒருசொல். மின்னை-மாயை.

(68) நாலுவாக்கு-பரை, பைசந்தி, மத்திமை, வைகரி என நான்காம். செருக்கு-கருவம்.

(69) கிளத்தல்-சொல்லுதல்.

(71) நடித்தல்-அபினயித்தல்.

## வேறு

மண்ணுலகிலிழிகுலமத்தளத்தொழிலோன்றனைவிரும்பிவறிதுமீண்டா
ளண்ணன்மகளெனும்பழியைமாளாமனிறுவிப்போயங்கைகொட்டி
விண்ணுலகநகைசெய்யச்சூண்முடியாதெவ்வாறுவிமலன்பங்கிற்
பெண்ணரசிதன்முகத்தில்விழிப்பலெனமாயையுளம்பீழையுற்றாள்.

அன்பினாலன்பர்பெறற்கெளியனுமெனைச்சூளொன்றறைந்துவந்து
வன்பினாற்பெறவேண்டிநின்றழிந்தாயிதுதகுமோமாயைமாதே
முன்பினுக்கடுவிதைத்துக்கரும்பாகவேண்டிமிகமுயன்றுநெஞ்சிற்
றுன்பராய்த்திரியுமவர்போலென்றான்மாயைதனைத்துறக்கவல்லான்.

கரைகுறுகவந்தகலங்கவிழ்ந்தநாய்கன்போலக்கலங்கிநின்ற
வரைபுரைமென்முலைமாயைதனைக்கண்டுவிமலையுளமறுகிமாழ்கி
யிரதமுறுகளிம்புமலிசெம்பினியனோக்குருவியல்புபோல [ள்.
வருள்புரிதியையவிவள்குணநோக்காதென்றுதொழுதஞ்சிச்சொன்னா

இலங்கிலைவேன்மருட்டுமதர்விழிவிமலாய்வறியவோடிரதந்தன்னா
னலங்கிளர்பொன்னுருவாயிலென்னாலிம்மாயையின்பநணுகுமென்று
புலங்களறிவரியபரமானந்தசிவயோகிபுகலமாயை [ள்.
கலங்கியளிபசும்புண்ணிற்செவ்வேல்பட்டெனவழுங்கிக்கழறுகின்றா

நனவொருபுன்கனவாகமயங்கவெனைப்புணர்தலினானும்வென்றி
யெனதெனநின்றுளஞ்செருக்கிமடமாயைகூறுதலுமெங்கள்கோமா
கனவினுகர்வுறுமுணவுகுறையுமோபசியதனாற்களைவதுண்டோ [ன்
நினைவில்வருகனவொன்றுகண்டிறுமாந்தனைபேதாய்நீதானென்றான்.

எவ்வண்ணமுரைவன்மைகொண்டுநீதள்ளினுநானின்றுபோகேன்
கைவண்ணமலர்ப்பகழிமதனனையாய்நினைத்தழுவிக்கட்டிக்கொண்டு
செவ்வண்ணனமர்கைலைக்கேகியென்சூண்முடிப்பலெனச்செருக்கிச்சொன்னா
மைவண்ணமலர்க்குழலாள்வான்றிரட்டிவிழுங்குவலென்மாற்றம்போல. [ள்

(72) நிறுவி-நிலைநிறுத்தி.

(73) கடு-கசப்பு. வன்பு-வலிமை.

(74) வரை-மலை. புரை-போலும். களிம்புமலி-களிம்புநிறைந்த. மாழ்கி-மயங்கி.

(75) நணுகும்-பெறும். அளிபசும்புண்-அளிந்த பச்சைப்புண். அழுங்கி-வருந்தி.

(76) நனவு-சாக்கிரம்.

முடிக்குமலர்க் குழன்மடவாள் சூண்முடிப்பலெனுமொழிக்கு முறுவல்செய்து, பிடிக்கவலையாயிலெனைப்பிடிநடையாய்பிடியென்று பிரான்மறைந்தான், மடக்கொடிதன்விழியினூற் காண்பதும்போய் மதிமயங்கி வறிதுநின்றாள், சுடர்த்தொடிமென் றேண்மடவாரின் றிழந்தோ மிவளையெனத்துயருழந்தார். 78

வெண்டிங்கணிலவுவாயிடைப்புகினுஞ்சகோரமெனுமென்புளன்றி
யுண்டிங்குவாழுமுயிருளதோநம்மல்லமனுமொருவன்றானும்
பண்டங்குமொழிமாயைகைப்படினுமவள்பிடிக்கப்படுவனோதான்
றொண்டன்பின்வழிநின்றுமனமாசுதீர்ந்தபெருந்தூயோர்க்கல்லால்.

மாயைதனைவாதித்துத்தள்ளுபுதன்னிலைநின்றுமாயாவாதி
யாயினனல்வீரசைவசித்தாந்தகுலதீபமாயினேனென்
றோயுமனநிறுவிபிறப்பெதிர்வுநிகழ்வெனுங்காலமுணருமாற்றற் [ர்.
றூயமுனிவரரெல்லாமல்லமனைத்தொழுதுதவந்தொடங்கிவாழ்ந்தா

ஏழாவது

மாயைகோலாகலகதி முற்றிற்று.

---

கதி 7 - க்கு திருவிருத்தம் - 437.

---

(78) முறுவல்-நகை. சுடர்-பிரகாசம்.

(79) சகோரம்-ஓர்வகைப்புள். அதையே தமிழர்கள் அன்றில் என்று கூறுவது; அது எப்போதும் ஆணும்பெண்ணும் ஒன்றாக விருக்கக்கூடியது. தொண்டு-அடிமை.

(80) ஓயுமனம்நிறுவி-தளர்ந்தசித்தத்தை நிறுத்தி.

எட்டாவது

# வசவண்ணர்வந்தகதி

அசைவிலல்லமற்காயுமைநற்கலை
வசவதேவன்வலியகணங்கடாங்
கசியுமன்பிற்கயிலையினின்றுதென்
றிசையில்வந்ததிறமுரைசெய்குவாம். 1

தீங்குகாணுஞ்சிறுவிலைநாட்கடன்
வாங்குமோர்பொருள்போக்கும்வறியர்போ
னீங்கஞானநெடுந்தகைமாயைநின்
றேங்குமாவியியக்கமுமின்றியே. 2

மத்தளங்கொடுவந்தவன்றன்னொடு
பொய்த்தநுண்ணிடைபோயினளென்னவே
சித்தநாணுந்துயரமுந்தின்றிடப்
பித்தர்போற்பின்றொடர்ந்தனர்பெற்றவர். 3

தக்கதந்தைதாய்சாயப்பழிசெயு
மக்களின்றிமலடர்தாமாதலு
மிக்கவன்பிணிமேவலுநல்லவென்
றுக்கநெஞ்சுடனோடினன்மன்னவன். 4

காய்பசிக்குக்கவன்றுதசைதின
வாய்பதைக்குமறவர்வலையிடைப்
போய்விழக்குழக்கன்றுபுகுந்தவண்
டாய்பதைப்பதுதன்னெதிர்காணுமோ. 5

(1) கசியுமன்பு-ஊறுகின்ற அன்பு.

(2) சிறுவிலைநாள்-பஞ்சகாலம்.

(4) சாய-தலைசாய்க்க. பிணி-நோய். இச்செய்யுளில் சாய்க்கவென்பது விகாரத்தால் சாயவென்றாயிற்று.

(5) காய்-சுடுகின்ற. கவன்று-கவலையுற்று. தசை-மாமிசம். மறவர்-வேடர்.

கண்டுவார்சிலைக்கானவர்பார்ப்பிணைக்
கொண்டுபோகக்குடம்பைகண்டேங்கியே
துண்டமாரிரைசோரப்பறவைகண்
மண்டுநோயின்மறுகுதல்காணுமோ. 6

அரின்மிதித்திட்டதர்படப்பூம்பணை
மாமுறித்துமழைமதக்கைம்முக
வுரலடிப்பிறையொண்மருப்பஞ்செவிக்
கரிநடப்பக்கலங்கியிரியுமோ. 7

பரற்கண்மென்பதம்வைத்துப்பதைக்குமோ
சுரத்துமேனிதுவண்டுவெதும்பிநீ
ரிரக்குமோமகளென்செயுமோவெனத்
தரிக்கருந்துயர்தாயடைந்தேகினாள். 8

பொன்னையன்னபுதல்விபொருட்டிவண்
மன்னர்மன்னன்மனத்தில்வளர்ந்தெழு
மின்னல்காணவுமூழொன்றிருந்ததென்
றுன்னிமாழ்கியவ்வூரர்பின்போயினார். 9

அயர்ந்துநிற்குமரிவையைக்கண்டுநான்
முயன்றுமெய்த்தவமுற்றும்பயின்றுனைப்
பயந்ததற்குப்பயனன்றுதவினை
நயந்தெமக்கெனத்தந்தைநவின்றனன். 10

என்னைநீங்கியிழிதொழில்செய்பவன்
றன்னைநாடித்தலைமையிழந்தெனோ
கன்னிநீகொடுங்காட்டில்வந்தாயென
வன்னையோவென்றரற்றியழுதனள். 11

---

(6) பார்ப்பு-பட்சிகளின் குஞ்சு. குடம்பை-கூண்டு. துண்டம்-மூக்கலகு. மண்டு-மிகுந்த. மறுகுதல்-கழலுதல்.

(7) கைமுகம்-துதிக்கையையுடையமுகம். அரில்-தூறுகள். அதர்-வழி. பணை-கிளை.

(8) சுரம்-பாலை. தரித்தல்-பொறுத்தல்.

(9) இன்னல்-துன்பம். ஊழ்-பழையகருமம்.

(10) அரிவை என்றது பெண், ஈண்டு மாயையைக் குறித்தது.

(11) தலைமை இழத்தல்-மகாராஜன் புத்திரி என்னும் பெருமையைத் தொலைத்தல்.

மகனுமல்லனவ்வல்லமன்மாயைநும்
மகளுமல்லள்வரைபுரைதோளினா
யிகலும்வாட்கணரசியுநீயுமிங்
ககலுமென்னாவிமலையறைகுவாள். 12

வினைப்பயன்கொளவேண்டுநரோரிடந்
தனைப்பொருந்துறச்சம்பந்தமாத்திரத்
தெனக்கினாரிவரென்றபிமானமொன்
றனைப்பொருந்தியழிவரறிவிலார். 13

தனையராகியுந்தந்தைதாயாகியு
முனையுறுதவுயிரிலையாதலா
வினையர்கேளிரினையராயலென
நினைவுறேன்மிளிர்நெட்டிலைவேலினாய். 14

வேனெடுங்கண்விமலையிவைசொலப்
பானலங்கண்பனிமதிவாண்முகப்
பூநறுங்குழற்பொற்றொடிமாயைமுன்
றானடைந்தமைதந்தைக்குணர்த்தியே. 15

காவியங்கட்கனியிதழ்மாதுமை
யேவவந்தவென்னெண்ணமுடித்திலன்
போவனங்கிப்புரிகுழலோடுநா
னீவிர்நோவன்மினென்னைநினைந்தெனா. 16

விரைந்தெழுந்துவிமலையணங்கொடு
வருந்துநெஞ்சகமாயையக்காட்டுளோர்
பிரிந்தழுங்குரல்பின்றொடர்ந்தேகவே
பொருந்தருங்கயிலைத்தடம்போயினாள். 17

அழுதுவாய்விட்டரற்றிலன்றன்னுடல்
புழுதியாடப்புரண்டிலன்மன்னவன்
பழுதிலாததன்பாவைகாணாமையா
லெழுதுமோவியமென்னநின்றானரோ. 18

---

(16) காவி-கருங்குவளை.

(18) ஓவியம்-சித்திரம்.

விழுவண்மீளவெழுவண்மெலிந்துநைந்
தழுவண்மேனியசைந்துநிலங்கையா
லுழுவள்வாய்கொண்டுயிர்ப்பளிறப்பலென்
றெழுவள்கைநெரித்தேங்குவளன்னையே. 19

பாடுமாதரும்பந்துங்கழங்குநின்
றாடுமாதருமாகுமரிவைய
ரோடுமேவியொருமகள்வாழ்ந்தவம்
மாடநாணினிக்கண்டுயிர்வாழ்வனோ. 20

துளிக்கும்வார்மதுச்சோலையும்வாவியும்
பளிக்குமாடமும்பாழ்படவென்மகள்
களிக்குமாணிருங்காட்டினுளெம்மைவிட்
டொளிக்குமாறொருசற்றுமுணர்ந்திலேன். 21

என்னைநீவிட்டிருப்பினும்பொற்றொடி
யுன்னைநான்விட்டுயிர்பிழையேனென
வன்னைவாய்விட்டரற்றினளாயிடை
மின்னனாருங்கதறினர்வேலைபோல். 22

வந்துவேந்தன்வழிமரபாரிய
னுந்தமாம்கனோன்மைநமக்குநான்
முந்துகூறிலனோதுயர்மூழ்கிநீர்
சிந்தைநோதறகாதெனச்செப்புவான். 23

அருந்தவம்பலவாற்றுமறிஞரும்
பொருந்தருங்கயிலைக்குமின்போனமை
தெரிந்துநெஞ்சந்தெளியவறிந்துநீர்
வருந்துந்தன்மைமடைமைமடைமையே. 24

சிலைநுதற்பசுந்தேமொழிமாதுமை
கலைநுமக்குக்கவின்மகளாகநீர்
தலைமைபெற்றதுசாலுமுமையினி
யுலகினிற்பிறரொப்பவரில்லையே. 25

---

(20) கழங்கு - அம்மானை. இப்பாடலில், மாயையைக் காக்கின்றவர் அவளினும் பெரியவர்களாயிருக்க வேண்டுமென்பது தெரியவே அரிவை என்று கூறினர். (21) வாவி - தடாகம். (23) மரபாரியன் - குலவழி முறையாய்க் குருவாகி வந்தவன். நோன்மை-பெருமை. (24) மடைமை-அறியாமை. (25) பசுந்தேமொழி-பசுமை பொருந்திய தேனைப்போல் மதுரமாகிய சொல்.

என்றுகூறக்குரவனிறைமகன்
மன்றல்வாழ்க்கைமனையொடுதுன்பொரீஇச்
சென்றுமாடத்திருநகரிற்புகாக்
குன்றமாமதிற்கோயிலினண்ணினான். 26

வேறு

கயிலையில்விமலையோடுங்கவிரிதழ்மாயைசென்று
வியனிலமதனிற்றன்னை விடுத்தனன்றென்னவானோர்
பயிலவைதன்னிற்புக்குப்பரனையுமிமயமீன்ற
மயிலியறனையும்வாழ்த்திவணங்கியங்கருகுநின்றாள். 27

பொலிவழிவதனங்கண்டபோதேயம்மாயைநெஞ்சின்
மெலிவினையறிந்துமன்னைவினவலுஞ்சூள்கொண்டேகி
மலர்தலையுலகிற்றான்முன்மயங்கியவாறனைத்து
நலியுநாணடவருந்திநவின்றனள்குறிப்பிற்றேன்ற. 28

நன்னகமகள்கேட்டுள்ளநாணுபுமுகங்கவிழ்ந்தாள்
பன்னகசயனனாதிபண்ணவர்நெருங்கவைக்கண்
முன்னைசெய்தீயமுப்புரமாளச்செய்தான்
புன்னகைபுரிந்தான்பங்கிற்புரிகுழல்செருக்குமாள. 29

அளியனென்றுனக்குநான்சொலல்லமனரியனேமற்
றெளியனேவுரைத்திநீயென்றிலங்கயிலெறிதலேபோல்
வெளியபுன்முறுவல்செய்யவிமலன்வெண்மதியங்கண்ட
நளினமென்மலர்போலென்றாய்நகைமுகமொடுங்கினளால். 30

போக்கருவலிபுகன்றுபோய்வருமாயைசொன்ன
வாக்கினில்வருந்துவேனைவள்ளனீநகைசெய்தெள்ளன்
மூக்கிலிமுகத்தின்முன்னர்முகுரங்காட்டுதல்போன்மென்ன
மீக்கிளரிமயமீன்றமெல்லியன்மெலிந்துசொன்னாள். 31

நடம்பயிலெந்தைமங்கைநாணினால்வருந்திநொளென்
றடைந்தருள்சொல்வன்ஞாலமலைக்குமம்மாயைசூளா
னெடுந்தகைமுன்னுஞ்சென்றநிலையேநன்றுடுகொல்வோன்
மடங்கன்முன்வெல்வேனென்றுவருதலேயாற்றலன்றே. 32

---

(26) குரவன்-ஆசாரியன். ஒரீஇ-ஒழித்து. குன்றம்-சிறுகுன்று.
(27) பயில்-நிறைந்த. இமயம் என்றது இமயமலை அரசனை.
(28) பொலிவு - பிரகாசம். வதனம்-முகம். மலர்தலையுலகம் - பரந்த விடத்தையுடைய பூலோகம். (29) நாணுபு-நாணி. பன்னகம்-பாம்பு. பண்ணவன்-தேவன். புரிகுழல்-கட்டப்பட்ட தலைமயிர்.
(30) அளியன்-அன்பன். இலங்கயில்-பிரகாசிக்கின்றவேல். வெளிய புன்முறுவல்-வெண்மையான புன்சிரிப்பு. நளினம்-தாமரை. நகைமுகம்-ஒளிபொருந்திய முகம். மற்று, ஆல்-அசைநிலை.
(31) வலி-சபதம். முகுரம்-முகம்பார்க்கும் கண்ணாடி.
(32) மடங்கல்-சிங்கம். ஆற்றல்-பெருமை.

அல்லமன்பெருமையெல்லாமனைவருமறிந்துகொள்ள
நல்லெழின் மலைமடந்தாய்நன்குணர்த்தினைநீயென்று
சொல்லுநரன்றிநின்னைநிந்தனைசொல்லவல்லா
ரில்லையென்றியம்பயாவுமீன்றவளியம்புகின்றாள். 33

பொறியிலியேன்செய்தீமைபொறுத்தருள்புரிந்துமெய்ம்மை
யறிவருள்குரவனுகுமல்லமன்றன்னைக்காணு
நெறியருள்புரிதியென்னநிரைவளைவணங்கிக்கூற
மறிமழுவமர்ந்திருக்குமலர்க்கைவானவனுரைப்பான். 34

மத்தமதுறுகுணத்துமாயையைவிடுத்தவாற்று
ணித்தியகுரவன்றன்னைநீயறிந்திலையணங்கே
சத்துவகலைமடந்தைதனையினிவிடுத்தியாயிற்
கைத்தலநெல்லிபோலக்காண்குவையவனையென்றான். 35

மிடியடவிறப்பலென்றுமேவுமோரிடத்திற்செம்பொன்
குடமொடுகண்டவன்போற்கொலைசெய்நாண்டுறந்துவந்து
துடியிடையுமையெம்மானைத்தொழுதுசத்துவவணங்கைப்
படிமிசையலமற்காண்பான்செல்கெனப்பணித்தாளன்றே. 36

அப்பொழுதருகுநின்றவருணந்திதேவனன்னே
யொப்பரும்பத்தியென்னுமஞ்சனமொன்றுண்டாயிற்
செப்பருஞானனந்தவல்லமதேவனென்னும்
வைப்பினையெளிதுகாணலாமெனமகிழ்ந்துசொன்னான். 37

அழிவருநிதியவைப்பையஞ்சனங்கொண்டுகாணும்
விழியுடையவன்போன்ஞானமெய்க்குரவனைத்தான்கண்டு
கழிமயலன்பர்காணக்காட்டுவோனிவனென்றெம்மை
வழிவழியடிமைகொள்ளும்வள்ளனந்தியைப்புகழ்ந்து. 38

சத்தியால்யான்பிணித்ததளைதனைத்தனதுதூய
பத்தியாலவிழ்க்கவல்லோன்பார்க்கினிந்நந்தியேதா
னித்திறல்விலங்குபூட்டுமிறைவனேவிடுவிப்பானே
மெய்த்தவாரருளினேன்யார்விளம்புகவென்றுசொல்வான். 39

---

(34) குரவன்-ஆசிரியன். மறி-மான். (36) மிடி-தரித்திரம். துடி-உடுக்கை. படி-பூமி. (37) அஞ்சனம்-மை. வைப்பு-நிக்ஷேபம்

(38) வழிவழி-பரம்பரை. கழிமயலன்பர்-மயக்கம் நீங்கிய சரணர்.

(39) தளை-பந்தம். இத்திறல்-இது இதினல் என்றசொல் ஏதுகை நோக்கி தகரவொற்று விரிந்துநின்றது.

அல்லமனென்னுஞானவாணையையகப்படுத்த
வல்லவொண்பார்வைநீயேயாதலான்மண்ணிற்போகி
யெல்லையிலன்பர்நெஞ்சத்தின்பருணந்தியென்று
சொல்லினனுயிரிற்றோன்றாத்துணையெனவிருக்கும்பெம்மான். 40

அந்திவண்ணத்தெங்கோமானருளினாலின்னகூறச்
சுந்தரிதனக்குமெட்டாத்தூயவன்றன்னைக்காண
நந்திவல்லவனேயென்றுநகைசெய்துகணங்கடம்முள்
வந்தொருசிலருரைப்பமங்கைபங்காளன்சொல்வான். 41

நந்தியென்றனையுணர்ந்தானவன்றனையுணர்ந்தேன்
சிந்தைசெய்தெம்மைநீவிர்தெளிவுறவறிகிலீரென்
றெந்தையெம்பெருமான்கூறவிகழ்ந்துரைசெய்தோரெல்லாம்
வெந்துயர்கொண்டுநின்றார்மீளவும்விமலன்சொல்வான். 42

மாசறுநந்திபத்திவார்த்தையாலறியீர்நீவிர்
காசினியதனிற்சென்றுகண்களாலமையக்கண்டு
பேசுதிர்பின்னரென்றுபெருந்தகைநந்திதன்னோ
டீசனெண்கணங்கடம்மையேவினனருளினானே. 43

கண்ணுதலருளாலேவுங்கணங்களுட்டலைமைபெற்றோர்
மண்ணுலகதனில்வேண்டும்வளம்பதிதோறும்வந்து
நண்ணினருலகர்கண்ணினரர்வடிவாகத்தோன்ற
வெண்ணுறினெழுநூற்றின்மேலெழுபதென்றுரைக்குமெண்ணார்.

நந்தியென்கின்றஞானஞாயிறுநிலத்துதிப்பின்
முந்துறுமமணரென்னுமுடுவல்லிருள்கெட்டோடுஞ்
சந்திரமௌலிசீர்வெண்டாமரைமலருமென்னா
விந்திரன்முதலாயுள்ளவிமையவர்மனமகிழ்ந்தார். 45

எட்டாவது

வசவண்ணர்வந்தகதி முற்றிற்று.

---

கதி 8 - க்கு திருவிருத்தம் - 482.

---

(41) அந்திவண்ணன் - சந்தியாகாலச் செவ்வானம்போன்ற நிறத்தை யுடையவன். (42) விமலன்-பரமசிவன். (43) மாசறு - குற்றமற்ற. காசினி-பூமி. ஏவினன் - ஏவி அனுப்பினன். (45) ஞாயிறு - சூரியன். சந்திர மௌலி-பிறையணிந்த சடையையுடைய பரமசிவன். இமையவர்-தேவர்.

ஒன்பதாவது

# அக்கமாதேவியுற்பத்திகதி

புரஞ்சுடுசிறுநகைப்புனிதன்பாலமர்
கருந்தடங்கண்ணிதன்கலையுநந்தியும்
அருங்கணநாதருமகனிலத்திடை
வருந்திறமறிந்தவாவகுத்துக்கூறுவாம். 1

பெடையொடுசுரும்பினம்பெரிதிரைந்திடக்
கடிதடமளவுவாய்க்காவினோடியே
மடையுடைமதுமழைமலர்பெய்சோலைசூழ்
உடுதடையெனுநகரொன்றுண்டாயிடை. 2

நன்மையென்பனவெலாமுடையனுன்மறைப்
புன்மையென்பனவெலாம்பொருந்துறுனெனுந்
தன்மைதன்பெயரினலறியத்தக்கவன்
நின்மலனெனவொருநிகரிலானுளன். 3

அவனெழின்மனையவளாடகத்தினைச்
சுவணமென்குதலெனச்சுமதியென்பவள்
தவநிலைதன்னினுந்தலைமைத்தென்னவே
யுவமையிலில்லறத்தொழுகுநீர்மையாள். 4

தூநிருமலனுகச்சுமதிதன்னிடைத்
தானொருமகளெனச்சார்ந்துதோன்றினள்
ஆனுயர்கொடியினோனங்கைதாங்குரு
மானுயர்சத்துவகலைமடந்தையே. 5

மதிபெறுகடலெனமகளையீன்றவர்
நதிபெறுசடைமுடிநம்பன்பாலுறு
கதிபெறுமதிநுதற்கரும்பைப்பெற்றுநற்
றுதிபெறுமலையெனமகிழ்ச்சிதுன்னினர். 6

(1) புரம் என்றது திரிபுரத்தை. கருந்தடங்கண்ணி என்றது பார்வதி தேவியை. (2) உடு-அகழி. (3) நிகரிலான்-ஒப்பற்றவன்.

(4) சுவர்ணம்+என்குதல்=சுவணமென்குதல்; சுவர்ணம்-பொன்.

(6) நதி பெறு சடை முடி நம்பன் என்றது சிவபெருமானை. மதிநுதற் கரும்பு என்றது பார்வதிதேவியாரை.

நெறிமுறைநிருமலனீறுசாத்தியே
யறிவருமஞ்செழுத்தறைந்துமெய்யுணர்
குறியினைத்தரித்தனன்குழவியாகிய
பொறிநிகர்வுறுமொருபுதல்விக்கென்பவே. 7

இந்துவார்சடையினானிடத்தளையெனுஞ்
சிந்தையான்மகளைமாதேவியென்றொரு
சந்தநாமங்கொடுதானழைத்தனன்
தந்தையாதற்குநற்றவம்புரிந்தவன். 8

அறிவருளாதரவடக்கம்வாய்மைமெய்த்
துறவுநல்லொழுக்கமேதூய்மையென்றிவை
யுறவொடுகுழவியாயுடன்வளர்ந்திட
மறுவறுசுமதிதன்மகள்வளர்ந்தனள். 9

வாடியமருங்குலம்மாயைதோன்றுநாள்
கோடியசிலைகொடுதவங்குலைப்பவே
யோடியமதனன்மாதேவியோங்குநாள்
வீடியசிலையனாய்வீழ்ந்துமாழ்கினான். 10

விழுந்தனகொடியதீவினைப்பரப்பெலாம்
எழுந்தனநல்லறம்யாவுந்திங்களங்
கொழுந்தெனநிருமலன்குமரியோங்குநாள்
முழங்கினசிவாகமமுற்றுமெங்குமே. 11

வேறு

ஈங்குமாதேவியின்னணமிருப்பவெம்பிரானேவியகணங்கள் [வாகித்
தாங்கள்வேண்டியவொண்பதிதோறு முன்செய்தவத்தர்பா னன்மக
தீங்கிலாச்சித்தராமையன்மாச்சிதேவனென்றிடுபெயர்முதலா
ஓங்குநாமங்கள்வேறுவேறுறக்கொண்டுற்றனர்நற்றவமுயன்று. 12

பயக்குறுமினியசங்கரபூசைபல்வகைநெறிப்படவியற்றிச் [க்க
செயற்கருஞ்செய்கைசெய்தவரிருந்தார்தென்றிசைகயிலைபோற்சிற
மயக்குறுமமணவல்லிருண்மெலியவயிணவமெனுமுடுமழுங்க
வியக்குறுசைவமலரநன்னந்திவெய்யவனுதித்தமைவிரிப்பாம். 13

---

(7) நிருமலன் என்றது சிவபெருமானை; மலம் இல்லாதவன் என்பது பொருள். அஞ்செழுத்து-பஞ்சாட்சரம். குறி-அடையாளம். பொறி-திருமகள், இலட்சுமிதேவி. நிகர்வு+உறு=நிகர்வுறு. (8) இந்து-சந்திரன். இடத்தளை-இடதுபாகத்து இருக்கும் பார்வதிதேவியை. (9) குழவி-குழந்தை. (10) மருங்குல்-இடுப்பு. கோடிய-வளைந்த. சிலை-வில்; ஈண்டு கரும்புவில்லைக் குறித்தது. (12) கணங்கள்-சிவகணங்கள்.

(13) உடு-நக்ஷத்திரம். வெய்யவன்-சூரியன்.

வாயின்மண்ணிட்டுக்கொண்டவன்றன்னைமதித்துநன்னுதலின்மண்ணிடாமற்
பாயும்வெண்டிரையிற்றுயில்பவன்றனக்குப்பரிதியொன்றளித்தருண்முக்க
ணாயகன்றனையேகருதிவெண்ணீற்றானன்னுதல்வீதியையணியுந்
தூயநன்மறையோர்தமக்கிடமாகுந்துரிசிலாவிங்குளாபுரியே. 14

கதிர்விளைசெந்நெற்காடுசூழ்கரும்புகரும்புசூழ்கதலியங்கதுசூழ்
புதுநறும்பாளைக்கமுகதுசூழ்முப்புடைப்பசுங்காயதெங்கதுசூ [ம
ழுதிர்கனித்தேமாந்தண்பொழில்பார்ப்பார்க்குயர்வுறுதுயர்மிடிபுகா
லதிர்முரசியம்பும்வீதியந்நகரிற்கணிகள்வைத்திடுபடைகாட்டும். 15

விருந்தினுக்கிடுவாரன்னமந்நகரின்வேதியர்மடந்தையரெல்லாம்
பொருந்துமன்னத்திற்கிடுவனவிருந்துபுனல்வயற்செங்கமலங்கள்
வருந்துநுண்ணிடைநன்மாதர்கைம்மலர்க்குவண்டினைக்கொடுப்பர்பேரின்பந்
தருந்தனிநகர்சூழ்தடங்கள்வண்டிற்குத்தாண்மலர்கொடுத்திடுமன்றே. 16

இந்நகர்வாழுமறையவர்செய்யும்யாகதூமம்படிந்தன்றோ [யோ
பொன்னகர்வாழ்நர்நிறைந்தவாயுளராய்ப்பொருந்துதலிந்நகர்மறை
ருன்னருமனுவானெருப்பினைவளர்த்திட்டொழுகுநீர்காட்டுறினன்றிப்
பின்னொருசெயலாற்கலியுகந்தன்னிற்பெருகுநீர்காணுறப்படுமோ.

இனையமாநகரினந்தணர்க்கெல்லாமிறைமைபூண்டுளனொருமறையோ
னினைவெலாமரன்றாளினுமுரையெல்லா நிருமலன்றுதியினுஞ்செய்யு
வினையெலாமவன்பூசனையினும்வைத்தோன்வேதமுமொழுக்கமும்வல்லான் [ம்
மனையுளானெனினுந்துறந்தவர்க்கொப்பான்மற்றவனுமமாதரசன். ()

திருந்தியவனையான்றேவிதன்னாமஞ்செப்பின்மாதாம்பிகையென்பா
ளருந்ததிமுதலாங்கற்புடையார்தமருநிலையூறின்றிமுற்ற
நிரந்தரமவளைக்கைகுவித்திறைஞ்சிநினைந்துபின்பாயலிற்படுப்பார்
கருந்தடங்கயற்கட்பூங்கொடியனையாள்கற்பினையாவரேபுகல்வார். 19

பூங்கொடியனமாதாம்பிகைபெருமைபுனைந்துரையன்றுபட்டாங்கே
யோங்கியவப்ரசிவனெனவேதமுரைத்திடுமருணந்திவந்தான்
றாங்குறவவடன்வயிற்றிடையதனாற்றக்கவர்தகவிலரென்ப
தாங்கவர்பயந்தபுதல்வனாற்றெளியவறிமினென்றறைகுவர்பெரியோர்

---

(14) பரிதிஎன்றது ஈண்டு சக்கராயுதத்தை. நுதல்-நெற்றி. துரிசு-குற்றம். (15) கதலி - வாழை. முப்புடைப்பசுங்காயதெங்கு - மூன்றுபக்கம் புடைத்தெழுந்துள்ள பசுமையான காயையுடைய தென்னைமரம். மிடி-வறுமை. (16) அன்னம்-சோறு; அன்னப்பக்ஷி; சிலேடைப்பொருள் தந்தது. வண்டு-சங்கு; தும்பி; சிலேடைப்பொருள் தந்தது. (17) மறையவர் என்றது வேதவாய்மை அந்தணரை. தூமம்-புகை. மனு-வேதமந்திரம்.

(18) இனையவன்-இப்படிப்பட்டவன். இறைமை-தலைமை.

ஐந்தொழிலொருவன்றிருவுளமகிழுமறுதொழிலாளன்மாதரசன் [ன்
பைந்தொடிகொழுநற்ஞெழுதெழுதொழிலாள்பரிந்துதீவளர்ப்பவண்மறையோ
செந்திருவனையாள்விருந்தினர்வயிற்றிற்றீயவிப்பவளிவர்பெருமை
நந்தெழின்மலரோன்சொன்மகளிருக்குநாவினும்புகன்றிடப்படாதே

இன்னமாதரசன்றேவிதன்வயிற்றினில்வுலகெலாஞ்செய்புண்ணியத்தான்
மன்னுமாரளிகள்விருந்துணக்காமர்வல்லியின்மலர்மலர்வதுபோ
லென்னையாளுடையநந்திவானவன்றனெய்திவந்துதித்தனனன்று
சென்னியாலமரர்தொழுதுபூமாரிசிந்தினர்துந்துமிமுழங்க. 22

எங்குருநந்திதோன்றுநாட்புதுமையென்சொல்வாங்கண்டுமுட்டென்னும்
வெங்குணவமணருளத்தெறிமழுவோன்வேடங்கண்டஞ்சலிசெய்ய
வங்கொருநேயம்பிறந்ததுதிருமாலடியவருளத்தினிலெங்கள்
சங்கரனிறைவனெனவொருஞானஞ்சார்ந்ததுதமையறியாமல். 23

கொலைகளவழுக்காறவாவொடுவெகுளிகொடுஞ்சொல்பொய்பயனிலகூற
னிலையழிஇயொருவன்செய்நன்றிமறத்தனிந்தனைவஞ்சனைபிறர்தஞ்
சிலைநுதன்மடவார்க்கருதலென்றினையதீமைகளியாவும்போயினவா
னலமலிதருமமூர்த்தியாகியநன்னந்திவானவன்புவிவருநாள். 24

தாடலைதந்திங்கெம்மையாணந்திதாயகட்டினுநின்றுதரைமே [வாய்க்
லேடவிழ்மலர்வாண் முகமதுதோன்ற வெழுந்தருளுதன்முனங்குரு
கூடலசங்கமேசன்றாய்க்கொளித்துக்குறுகிநன்னுதலினீறணிந்து
வீடருள்பரமசிற்கனலிங்கமெய்யுறத்தரித்தனனம்மா. 25

தரித்தபின்றனதுமேனிதோன்றுமற்றுயெதிர்நின்றிடபப்பேர்
திரித்துநல்வசவனென்றுபேரிட்டுச்சென்றனன்சிவன்றனைக்குருவா
யொருத்தர்தம்மிடத்திற்பாவனைசெய்கென்றுரைப்பவருரைகெடத்தானே
யருட்குருவடிவாய்வந்தருள்புரிந்தவாலமார்சூலபாணியனே. 26

---

(20) அன இது அன்ன என்ற உவமவுருபின் தொகுத்தல் விகாரம். பட்டாங்கு-மெய். 'தக்கார் தகவில ரென்ப தவரவர்-எச்சத்தாற் காணப்படும்' என்ற திருக்குறளைப் பின் இரண்டடியில் அடி ஒற்றிக்காண்க.

(21) சொன்மகள்-சரஸ்வதி. (22) காமார்-அழகு.

(23) வமணருளத்தெறிமழுவோன் என்றும்பாடம். அஞ்சலி-நமஸ்காரம்.

(24) அழுக்காறு-பொறாமை. சிறுநுதல்-வில்போன்ற வளைந்த நெற்றி.

(25) தாள்+தலை=தாடலை; இது இருசொல் ஒரு சந்தி. அகடு-வயிறு. நீறு-திருநீறு.

(26) களம்-கழுத்து. அமலம்-குற்றமில்லாதது. செறிந்தவர்-கூடியவர்.

பிறந்தமெய்ஞ்ஞானப்பிள்ளைநன்னுதலிற்பெருகொளிநீறுமொண்கள
சிறந்துளவமலலிங்கமுங்கண்டுசெறிந்தவரனைவரும்வியந்து [த்திற்
மறைந்தரன்குருவாய்வந்திவைபுனைந்துமகவினைவசவனென்றொருபே
ரறைந்தனனென்னவறிந்தனரமலனறிவுணின்றறிவிக்கவன்றே. 27

குறில்வழிலகரந்தனிநிலையாயுங்கூடியதகரமுன்னெழுத்தென்
றறிகுறிவடிவந்திரிதல்போனந்தியடல்விடைமெய்திரிந்துறினு
நறுமலர்விழியிற்கண்டவரெல்லாநந்தியேயென்றுளமகிழ்ந்தார் [பார்
பெறுதவமுயன்ற வன்னையும்பிதாவும் பெறுமுவகையினையாருரைப்

ஈன்றநாடொடங்கிச்செய்கடன்முற்றுமியற்றினன்மாதரசன்றான்
றோன்றமோர்குழவிப்பதங்கடந்தெங்கோன்சொல்குருமுன்னுறுங்காலை
யான்றமாமறைகண்முதலவாய்த்தான்முன்னறிந்துளகலையெலாமறிந்தான்
சான்றதாமதியமிரவிவந்திறுப்பத்தன்கதிர்தானடைகுதல்போல்.29

பரமனையிகழ்ந்துநெறியலாநெறிபோம்பரமதயானையையடக்க
வரமுறுகூர்மையங்குசமென்னவரனடியாரெனுமாவிற் [யாண
கொருமழவிளங்கன் றெனவருள்வசவனொழுகுநாள் வளங்கொள்கல்
புரமுறவமணகுழாத்தொடுமிக்கபுரவலன்விச்சலனிருந்தான். 30

படியில்கல்யாணபுரமெனுந்தூசுபரசிவபத்தியாய்விளர்ப்பக்
கொடியபுன்சமணமாசுவர்பிடித்தாங்குவலயத்திருந்திடுமந்நா
ளடியவர்செல்வமெனும்வசவேசனங்குடன்வந்தநாகாம்பை
யுடன்வரவந்தவ்விச்சலனகரினுற்றனனற்றவர்நெருங்க. 31

வந்தனன்வசவதேவனென்றுரைப்பமன்னவன்விச்சலனறிந்து
மந்திரியென்றுமறைந்தவுட்பகையைமலிபொடிமூடியதழலை
வெந்தழலென்னவறிந்திடாதெடுப்பமென்கைதீண்டுதலெனவெதிர்போ
யுய்ந்திடவரிதாய்த்தன்மதமழியவுடன்கொடுகோயிலுட்புகுந்தான்.

பொருந்துமத்தாணியிடைத்தவிசொன்றுபுறமதகோளரிக்குதவி
யிருந்திறற்சிங்கஞ்சுமந்தபூவணைமேலிருந்தனனரசனப்போதி
லருந்திறற்றுணைகாவலர்வேந்தரமைச்சர்வெண்கவரிகொண்மாதர்
நெருங்கினிற்கரியபேரவையிடத்துநிகழ்ந்தமையொன்றெடுத்துரைப்பாம். 33

---

(27) களம்-கழுத்து.

(28) 'குறில்வழி லளத்தவ் வணையி னாய்த-மாகவும் பெறூஉம் அல்வழி யானே' என்ற நன்னூற் சூத்திரம் ஈண்டு எடுத்தோதப்பெற்றது. அடல்-வலிமை. விடைமெய்-நந்திவடிவு.

(29) குழவிப்பதம்-பிள்ளைப்பருவம். ஆன்ற-சிறந்த. இரவி-சூரியன்.

(30) மழவிளங்கன்று-மிக இளைய கன்று. குழாம்-கூட்டம்.

(31) படி-பூமி. (32) பொடி மூடிய தழல்-நீறுபூத்த நெருப்பு.

(33) அத்தாணி-கொலுமண்டபம். தவிசு-ஆசனம், பீடம். கோளரி-சிங்கம்.

## வேறு

இந்திரனெதிர்நின்றாடுமேந்திழைகாதிற்செம்பொற்
சுந்தரவோலையொன்றுசோர்ந்தெனச்சுருண்முடங்க
லந்தரமுகட்டினின்றுமரசன்பேரவையிடத்து
வந்தெதிர்விழுந்ததொன்றுமாணிடர்மருண்டுநோக்க. 34

நின்றவரெடுத்துவந்துநெடுங்கையிற்கொடுப்பவாங்கி
வென்றிகொண்மடங்கலன்னான்விரித்ததையெழுத்துநோக்கித்
தன்றலையெழுத்தேயென்னத்தானுணர்ந்திலன்மயங்கி
வன்றிறலமணகாலன்மலர்க்கையிற்கொடுத்தானன்றே. 35

வாங்கியமுடங்கனோக்கிவசவநாயகனிவ்வோலை
தாங்குநின்றவிசின்கீழோர்தமனியவைப்புண்டென்ற
தோங்கியதூண்செய்தோளாயுனக்குநான்காட்டுவேனென்
றாங்கதையகழ்வித்தானவ்வரசர்கோனதிசயிப்ப. 36

அகழ்ந்திடநிதியவைப்பொன்றாடகமலையிலத்திற்
புகுந்திவண்வந்துமெல்லப்புறப்படல்போலத்தோன்ற
மகிழ்ந்தனனரசர்கோமான்வசவனைக்கண்டபோதே
நிகழ்ந்தவொண்பயனுணர்ந்துநெஞ்சகநனிவியந்தான். 37

பயிலுநல்வினையெமக்குப்பயந்தவிவ்வசவதேவன்
கயிலைநன்மலைக்கிரண்டாங்கடவுளேயென்றுசொல்லி
யியலுரைமடந்தைபொய்யாளென்பதைப்புதுக்கினானச்
செயலினைவிழியிற்கண்டோர்தெளிந்துநெஞ்சகமகிழ்ந்தார். 38

மந்திரிக்கிழமைநல்கிமரபுளியுரிமையாற்றி
மைந்தனைப்புரக்குந்தாய்போன்மற்றெனைப்புரத்தியென்று
சிந்தனைகளிப்பவின்சொற்செப்பியாயிடையிருப்ப
நந்தியைத்தொடர்புகொண்டானுந்தகத்தடக்கைவேந்தன். 39

---

(34) இந்திர னெதிர்நின் றாடுமேந்திழை என்றது அரம்பைமாதை. சுந்தரம்-அழகு. (35) நெடுங்கை என்றது அரசன்கையில் என்பதாம். மடங்கல்-சிங்கம், மடங்கிநோக்கும் பார்வையை உடையது என்னும் பொருளது. தன்றலை யெழுத்து என்றது பிரமலபியை. (36) தமனிய வைப்பு-பொற்புதையல். (37) அகழ்ந்திட-தோண்ட. ஆடகமலை-பொன்மலை. நனி-இது மிகுதிப்பொருள் காட்டும் உரிச்சொல். (38) இயலுரை மடந்தை என்றது அழகிய வாக்கின் கிழத்தியாகிய சரஸ்வதியை.

(39) கிழமை-உரிமை.

பெருந்தகைவசவதேவன்பெருமைக்குத்தக்கவாறே
யருங்கடிமணஞ்செய்வித்தானலங்கல்வேன்முருகனன்னான்
றிருந்தியவம்மணத்தின்சிறப்புநாம்விரிப்பதென்கொல்
புரந்தனையன்றுதொட்டுப்புகன்றுகல்யாணமென்றால். 40

இவ்வகைகல்யாணத்தினிருப்பநாகாம்பையென்னுந்
தவ்வைநம்வசவதேவன்றன்பிரசாதந்தன்னா
லெவ்வமின்முத்திமெய்யோடிருக்கையினளிக்கும்வீர
சைவநன்னெறிவளர்க்குந்தனயனையீன்றாளம்மா. 41

மைந்தனையீன்றுவந்துவசவநாமம்புனைந்தா
ணிந்தையில்கற்புநங்கைநிகழ்திருமுகங்களாறு
மந்தமிறலங்களாறாயறிவித்தற்குலகில்வந்த
கந்தனென்றுன்னவந்நாகாம்பைதன்மகன்வளர்ந்தான். 42

வீரமாகேசரென்னுமென்பயிர்வளர்க்கவந்த
மாரிபோனிகரில்சென்னவசவதேசிகனிருப்ப
நேரிலாவசவநாமநெடுந்தகைமகவொன்றீன்று
சீருலாஞ்சங்கமேசதேசிகன்பெயர்புனைந்தான். 43

மொழியினானினைவானோக்கான்முக்கணானடியர்வேண்டிற்
றொழிவிலாதுதவித்தாய்போலோம்பினன்புறமதத்தோர்
வழியெலாம்வழக்குமாறமலிபுகழ்ச்சைவமென்னும்
பழியிலாவழிநடப்பப்பண்ணினன்வசவதேவன். 44

அரனடியவர்க்குத்தேனுவாகியவசவன்சீர்த்தி
விரிநிலமுழுதும்போர்ப்பவெள்ளிவெற்பினையகன்று
தரைமிசைவந்திருந்ததவரெலாமுணர்ந்துசென்றார்
பொருவில்கல்யாணத்திற்குப்போதல்போற்கல்யாணத்தில். 45

பலரொடுவரினுமெள்ளும்படிதனிவரினுமிக்க
நலமொடுவரினுமேனிநலமறவரினுஞ்சீர்சான்
மலைமகள்கணவன்றொண்டர்வரவுகண்ணுறினெதிர்ந்து
நிலமிசைவணங்கியஞ்சிநின்றுநன்றாற்றுநந்தி. 46

---

(40) அலங்கல்-மாலை. அன்னான்-ஒத்தவன்.

(41) எவ்வம்-குற்றம். தனயன்-புத்திரன்.

(42) அந்தமில் தலங்கள் ஆறு என்றது பக்தஸ்தலம், மாஹேஸ்வரஸ்தலம், பிரசாதிஸ்தலம், பிராணலிங்கஸ்தலம், சரணஸ்தலம், ஐக்கியஸ்தலம் என்ற ஆறையும். (43) மாரி-மழை. (44) ஓம்பி-காப்பாற்றி. மலி-மிகுந்த.

(45) தேனு-தெய்வலோகப் பசுவாகிய காமதேனு. வெள்ளிவெற்பு-கைலைமலை.

(46) எள்ளும்படி-இகழும்படி. கண்ணுறின்-கண்டால்.

சாதியுங்குறியுநீத்துச்சரணரைச்சிவனேயென்று
பாதபங்கயமிறைஞ்சிப்பத்திசெய்குவனந்நந்தி
தீதறுசுவைத்தீங்கண்டாற்செய்தசெங்கரும்பும்வேம்பும்
பேதமொன்றுருமற்சாதிபெயர்விடுத்தறிதல்போல. 47

மாதர்கடமையகன்றமலிதுறவினரெண்ணில்லார்
கோதையருடனிருந்துங்கொடுமயலிலரெண்ணில்லார்
மேதைகொளருச்சனைக்குவேண்டுவமுழுதுங்கொண்டு
போதுகள்வழாமலீசன்பூசைசெய்பவரெண்ணில்லார். 48

விரதங்கள்வேறுவேறுமேவிநிற்பவரெண்ணில்லார்
பரதஞ்செய்மதராிக்கட்பரத்தையர்மனைகடோறுஞ்
சுரதஞ்செய்பவரெண்ணில்லார்தூயநன்னந்திநாம
வரதன்றனன்பின்வாழும்வழுவின்மாகேசரம்மா. 49

தீதுசெய்சமணர்முன்னர்ச்செயற்கருஞ்செய்கைகாட்டி
வாதுசெய்தவர்செருக்குமாய்வுசெய்திமயமீன்ற
சூதுசெய்முலைமடந்தைதுணைவனுர்தொண்டர்க்கெல்லாம்
யாதுசெய்குவனென்றேவலியற்றுவன்வசவதேவன். 50

உளந்தெளிசரணர்தம்மோடிம்முறையொழுகுநாளி
னளந்தறிவரியசோதியல்லமன்வரவுநோக்கி
வளங்கெழுதிருக்கல்யாணவளநகர்தனில்வானுக்கு
மிளம்பயிர்போலிருந்தானெம்மையாளுடையநந்தி. 51

ஒன்பதாவது

## அக்கமாதேவியுற்பத்திகதி முற்றிற்று.

கதி 9 - க்கு திருவிருத்தம் - 533.

---

(48) கோதையர்-பெண்கள், இது உவமையாகுபெயர். மயல்-காம மயக்கம். மேதை-மேன்மை. போது-இது பொழுது என்பதன் மரூஉ.

(49) அரிக்கண்-செவ்வரிபரந்த கண். (50) சூது என்றது சூதாடு கருவியை. சூதுசெய் முலைமடந்தை என்றது வல்லொத்த முலையை உமாதேவியை; வல்-சூதாடுகருவி.

(51) வளங்கெழு-வளப்பம் மிகுந்த. வான்-மழை.

பத்தாவது

# அக்கமாதேவிதுறவுகதி

தன்னைக்காணாவேள்கணைபாயத்தடுமாறு
மன்னைக்காலுஞ்சோறெனவிட்டருண்மாதேவி
மின்னைப்போலுமல்லமதேவன்விளையாடுங்
கொன்னைக்காணிற்றேடியடைந்தமைகூறுற்றாம். 1

கொங்கைப்பொறையைக்கொண்டுமருங்குற்கொடிவாட
வங்கைக்குடநெய்பெய்தழலென்னவழகெய்தி
நங்கைக்கிணைகண்டிலமுலகெங்கணுநாமென்ன
மங்கைப்பருவநண்ணினண்முற்றுணர்மாதேவி. 2

வாதித்தொன்றோடொன்றெழல்போன்முலைவந்துற்றும்
பேதைப்பெண்போற்காமமுளத்திற்பிறவாமற்
பாதிப்பெண்மேனியனெனுமின்பப்பதிதன்னைச்
சாதித்தெய்துஞ்சாதனமோடுதலைப்பட்டாள். 3

தன்னையறிந்திடையீடறமுக்கட்டலைவன்பாற்
பின்னமறும்படிமேவுபெரும்பருவப்பெண்ணைக்
கன்னனெடுஞ்சிலைமன்மதன்வேரிக்கணைபாயு
மன்னுமிளம்பருவத்தினளென்பர்மறைப்புற்றார். 4

வண்டுபடாதலர்சண்பகமேயெனமாறாகிப்
பண்டாரனோடமர்செய்மதன்வண்டுபடாமேனி
கண்டிடுமொண்சுடரேயெனுமாறுகவின்பொங்க
வொண்டவநின்மலன்மாதமர்நாள்களினோர்நாளில். 5

---

(1) வேள்கணை-மன்மதபாணம். கொன்னை-காலத்தை.

(2) பொறை-சுமை, பாரம். மருங்கல்-இடை.

(3) பேதை-இது பேதைப்பருவத்தைக்குறித்தது. ஒன்றுமுதல் எழு வயதுவரை உள்ள பருவம். பாதிப்பெண் மேனியன் என்றது சிவபெருமானை.

(4) முக்கட்டலைவன்-சிவபெருமான். பின்னம்-சிதைவு. கன்னல்-கரும்பு. வேரிக்கணை-மலரம்பு.

(5) வண்டு-சுரும்பு, குற்றம். கவின்-அழகு.

வீரங்குறைவின்மும்மதவேழமிசைகொண்டு
தாருந்தோளும்பொங்கமதிக்குடைதன்மேலா
மாரன்கரிமேல்வந்தனனென்னமணிப்பொற்றே
ரூருந்தெருவிற்கௌசிகமன்னனுலாவந்தான். 6

இயங்கடரங்கநெடுங்கடலென்னவெழுந்தார்ப்ப
வுயங்குமருங்குன்மடந்தையர்பாடியுடன்போத
வயங்களிவர்ந்திளமைந்தர்மருங்கினடுத்தேகப்
புயங்களலங்கலிலங்கவிசும்பிறைபோல்வந்தான். 7

மாணுநெடுங்கரிமீதுபுரந்தனில்வந்தானைக்
காணுமடந்தையரேதுமுணர்ந்திலர்காமத்தா
னாணுமிழந்தனர்தூசுமிழந்தனர்நன்றாகும்
பூணுமிழந்தனராவியிழந்திலர்போனார்கள். 8

நல்லமதந்தானொண்கவுளின்பானன்றுண்ணச்
செல்லுசுரும்பேவெங்கரியின்றாழ்செவியூடு
மெல்லநடந்தேபோவெனமெல்லவிளம்பென்று
சொல்லிமறங்கூர்வேலனகண்ணார்துயர்கின்றார். 9

கோதையர்மாலாலிவ்வகைநோவக்கொடிமாட
வீதியினூடுவருந்திறன்மன்னன்வினையில்லா
மாதவனாகுநின்மலனுக்கோர்மகளாகுங்
காதொடுகாதுங்கண்மடமாதைக்கண்டானே. 10

கண்டனனோவிலையோவெனுமுன்னங்கழைவாங்கிக்
கொண்டனன்வாளிசொரிந்தனனோடிக்கொடுமார
னுண்டிலையோவெனவாவிதளர்ந்தேயும்பன்மேல்
மண்டலமாளுமன்னனிருந்தான்வசமற்றே. 11

---

(6) வேழம்-யானை. மும்மதம் என்றது கன்னமதம், கபோலமதம், பீஜ மதம் என்னும் மூன்று மலங்களை. தாரும்-மாலையும். கரி-யானை.

(7) தரங்கம்-அலை. உயங்கும்-வாடும். வயம்-குதிரை. அலங்கல்-மாலை. விசும்பிறை-இந்திரன்.

(8) மீது-மேலே. புரம்-ஊர். மடந்தையர்-பெண்கள். தூசு-வஸ்திரம்.

(9) கவுள்-கன்னம். சுரும்பு-வண்டு. மறம்-வலிமை.

(10) மால்-மயக்கம்.

(11) கழை-கரும்பு; ஈண்டு கரும்புவில்லைக்குறித்தது. உம்பல்-யானை.

கொங்கைப்பாரத்தான்மலர்வாசங்கூடாம
லிங்கிப்பாரிற்போதுமலர்க்கணெழின்மாவோ
மங்கைக்கோலங்கொண்டுநிலத்தில்வருமின்றோ
வங்கைக்காந்தட்பொற்றொடியாரோவறியேனே. 12

வஞ்சிநடந்தேயென்னெதிர்வந்தேமயல்செய்தா
ணெஞ்சுதளர்ந்தேன்மாலில்விழுந்தேனிலைகாணே
னஞ்சலையென்றேயின்றணையாளேலனல்காணும்
பஞ்சுபடும்பாடங்கசனம்பாற்படுவேனே. 13

என்னநினைந்தேமன்னவன்வெந்தீயிழுதாகி
முன்னர்மருங்கேநின்றவொருத்தன்முகநோக்கி
பொன்னெனவந்தவ்வாய்தலினின்றுபுறப்பட்ட
கன்னியணங்கார்நீயறிகென்றான்காமுற்றே. 14

ஓடியறிந்தேயன்னவன்வந்தங்குரைசெய்ய
வாடுமருங்குன்மங்கையையின்னான்மகளென்று
நீடியவெந்துயர்மன்னனறிந்தென்னெறியாலுங்
கூடுவனிந்தவணங்கினையென்றுகுறித்தேகி. 15

கோயிலின்மேவியிருந்துயர்ஞானக்குறிகூறுந்
தூயவராகியவாரியர்தாமுஞ்சுடர்செம்பொற்
சேயிழையாரும்வலிந்துறிலின்புசெயாரென்று
வாயிலினாலணைவேனெனமன்னன்மனத்தெண்ணி. 16

வேறு

தூதுவல்லநன்முதுக்குறைமாதரைத்துணிந்து
நீதிவல்லவனிருமலன்மகடனைநீவிர்
தீதிலெம்மனைக்கிழத்தியாம்படியுரைசெய்து
போதுமின்களென்றேவினன்வியனிலம்புரப்பான். 17

(12) மா-இலட்சுமி. தொடி-வளையல்.

(13) வஞ்சி-பெண், இது உவமையாகுபெயர். அங்கசன்-மன்மதன். அனல்-நெருப்பு.

(14) இழுது-நெய். பொன்-இலட்சுமி. வாய்தல்-வாசற்படி.

(15) அணங்கு-அழகிய பெண்.

(16) சேயிழை-செம்மையாகிய கல் இழைத்த ஆபரணம். வாயில்-தூது.

(17) முதுக்குறைமாதர்-பேரறிவுடையபெண்கள். மனைக்கிழத்தி-மனைவி.

ஐயவன்னதேசெய்குவமெனப்புகன்றகத்திற்
பையவந்துநன்னிருமலன்றிருமுகம்பார்த்து
வையமன்னவன்கருத்தினைவகுத்தனர்மறுத்துத்
துய்யமங்கைமீரெமக்கடாதிதுவெனச்சொன்னான். 18

வேந்தன்மாமனைநும்மகளாயினவ்வேந்தன்
சார்ந்தவாழ்வெலாநுமவெனவறிகிலீர்தானே
போந்தவோர்திருமகள்வரவினைப்புறம்போக்கு
மாந்தர்யாருளரென்றுமங்கையர்சொலவகுப்பான். 19

இம்மைசேர்பயன்கருதியேதகாதவரிடத்திற்
கொம்மைவார்முலைமகட்கொடைநேர்ந்தவக்கொடியா
ரம்மையாழ்நிரையத்திடைவீழ்ந்தனரழுந்தித்
தம்மைநோக்குநரொருவருமின்றியேதளர்வார். 20

தமக்கடாததுசெய்துயிர்வாழ்வதுதன்னிற்
சுமைக்கடாதமெய்விடுத்தலேநன்றெனச்சொல்வ
ரெமக்கடாததுபுகன்றநிர்மங்கைமீரிச்சொ
னுமக்கடாதென்றியம்பலுமங்கையர்நுவல்வார். 21

உறையில்வாளொடுமாவழங்குறுவனத்தோடி
மறவனோர்பொருட்டுருகெனவிரத்தலைமானு
மிறைவன்வாழ்குடிதன்னிலொன்றுறுபொருளிரத்த
லறவனாகியநீயிதையறிந்திலையந்தோ. 22

என்றுமாதரார்கூறலுநிருமலனெங்கண்
மன்றல்வார்குழல்பேதையோவல்லனும்மனத்தைச்
சென்றுகூறுமினவண்மனமிசைந்துரைசெய்யி
னன்றுபோமினென்றியம்பினனவர்மனநயந்து. 23

---

(18) வையம்-பூமி. அடாது-பொருந்தாது.

(19) தானே போந்தவோர் திருமகள் வரவினைப் போக்கு மாந்தர் யாருளர் - இது தானே வந்த சீதேவியைக் காலாற் றள்ளுபவர் யார் என்ற பழமொழிப்பொருள். (20) கொம்மை-குவிந்த. நிரயம்-நரகம்.

(21) அடாதது-பொருந்தாதது. மெய்-தேகம், புகன்றநிர்-சொல்லினீர். நுவல்வார்-சொல்வார்.

(22) மறவன்-வேடன்; மானும்-ஒக்கும். இறைவன்-அரசன். அறவன்-தருமந்தெரிந்தவன். இந்தச்செய்யுள் 'வேலொடு நின்றா னிடுவென்றது போலுங்-கோலொடு நின்றா னிரவு' என்ற திருக்குறளின் பொருள் வைப்பு

(23) மன்றல்-வாசனை. நயந்து-விரும்பி.

மங்கைபாலடைந்தறைகுவர்மதன்வலிமாயக்
கொங்கைமாமுகிழ்ப்பூங்கொடிநீயருள்கூர்ந்தே
யெங்கள்கோமகனாருயிர்நிறுத்தினையென்னி
லங்கண்மாநிலத்துயிர்க்கெலாமன்னையாகுவையால். 24

என்னவோர்தலுந்திருமலனீன்றருளென்றாய்
மன்னனான்மனைதுறக்குமோர்சூழ்ச்சியைமதித்துப்
பொன்னனீரரசெனக்கொருசூளினைப்பொருந்திப்
பன்னுமாயினீர்பணித்ததுநன்றெனப்பகர்ந்தாள். 25

தூதுசென்றவர்பொற்கொடிசொல்லியசொல்லாற்
காதல்கொண்டனனென்றுளந்திரிந்துதாங்கருதி
மாதுநின்பெருங்கருணைசெய்வதற்கெங்கண்மன்னன்
யாதறைந்தனையதுசெயத்தக்கவனென்று. 26

உள்ளமார்வமோடேகியம்மடந்தையருரைப்ப
வள்ளலாகியமன்னவன்மனநனிமகிழ்ந்து
தெள்ளுமாரமுதனையவளிருந்துழிச்சென்றா
னெள்ளுகாமநோய்கொண்டவனென்செயவிசையான். 27

வல்லிகொங்கையைப்பொன்மலையென்னவேமதியா
னில்லுறுங்குடமாகவேயெண்ணினனுதலை
வில்லெனும்படிநினைத்தனன்வெண்பிறையென்னான்
சொல்லுவன்றனக்ககப்படுமடந்தையாய்த்துணிந்து. 28

அருள்செய்தென்னைநீயளித்திடுமதற்குநான்செய்வ
துரைசெய்நானதுசெய்வனென்றரசர்கோனுரைப்ப
வரைசெய்தோளினாயென்னைநீவலிந்துபுல்லாமைக்
கொருசொலுண்மைசொல்லென்றனளொருபுடையொதுங்கி. 29

(24) மதன்-மன்மதன். பூங்கொடி இது அன்மொழித்தொகை. பூங்கொடிபோன்ற பெண்ணே என்பது பொருள். கோமகன்-அரசன்.

(25) என்னால் என்றது மாதேவியை. பகர்தல்-சொல்லுதல். சூள்-சபதம். பன்னும்-செய்யும். பணிததது-சொல்லியது.

(26) பொற்கொடி என்றது மாதேவியை. அறைந்தனை-சொல்லினை.

(27) ஆர்வம்-ஆசை. உழி-இடம். எள்ளு-இகழத்தக்க. இசையான்-சம்மதியான்.

(28) வல்லி-பெண்; இது உவமையாகுபெயர். ஈண்டு மாதேவியைக் குறித்தது. நுதல்-நெற்றி. மடந்தை என்பது இது பருவப்பெயர்; அப்பருவத்தையுடைய பெண்ணுக்கானமையின் ஆகுபெயர்.

(29) வரைசெய் தோளினாய்-மலையை ஒத்த தோளை உடையவனே. புல்லாமை-தழுவாமை. புடை-பக்கம்.

நின்கருத்திசைவாலன்றிநின்னையான்வலியே
னென்பதற்கொருசூளுரைக்குவன்முகிலெழுந்த
மின்கொடிச்சிறுமருங்குலாய்கேளெனவெள்வேற்
புன்புகர்க்கருங்கடாக்களிற்றரசர்கோன்புகல்வான். 30

வேறு

வந்தநல்விருந்திருப்பமனையினுற்றருந்துவானும்
பந்தியினுணவுவேறுபண்ணுபாதகனுந்தாயுந்
தந்தையுமுணவுண்ணுதசமுக்கனுமுச்சிப்போதி
னொந்தவர்தமைநோக்காமனுகர்ந்திடுகொடியன்றானும். 31

நிந்தைசெய்யுணவினானுநிருமலன்பூசையின்றி
வந்துணவருந்துவானுமறுத்தவூனுகர்விப்பானுந்
தந்தநல்வினையாற்செல்வஞ்சார்ந்தவர்தம்மைக்கண்டு
சிந்தனைபொறாதழுங்கித்தீர்வினுண்மகிழ்வான்றானும். 32

கன்றுணவிடாமலான்பால்கறந்துகொள்பவனுஞ்செய்த
நன்றிகொல்பவனுங்கோடிநடுநிலைதவறுவானுங்
கொன்றுயிர்பதைப்பநோக்குங்கொடியனும்போர்க்களத்திற்
றன்றலைவனைவிடுத்துச்சாய்ந்துபோமடமையானும். 33

அடைக்கலமெனவந்தானையளித்திடாதகற்றுவானுங்
கொடுக்குதுமெனவுரைத்துக்கொடானுமொண்கொடைவிலக்கி
விடுக்குறுமவனும்பாவவினையிடத்துதவியாகி
நடக்குறுமவனுந்தேர்ந்துநட்டபின்வஞ்சிப்பானும். 34

குரவர்தம்முரைகடக்குங்கொடியனுந்துறந்துளார்தம்
வரவெதிர்கண்டெழாதமறவனுமறிந்தான்போன்று
கரவினிலருநூல்கற்குங்கயவனும்புதியராகி
யிரவினில்வந்தநல்லோர்க்கிடங்கொடாதகற்றுவானும். 35

---

(30) இசைவு-சம்மதம். சூள்-சபதம். முகில்-மேகம். புகர்-புள்ளி. கரும்-பெரிய.

(31) அருந்துவானும்-உண்பானும். நுகர்தல்-உண்ணல்.

(32) ஊண்-மாமிசம். தீர்வு-தொலைவு; நாசம்.

(33) ஆன்-பசு. இது ஆ என்பது னகரச்சாரியை பெற்று நின்றது. கோடி-கோணி. (34) தேர்ந்து-தெளிந்து.

(35) குரவர் என்றது தாய் தந்தை குரு தமையன் அரசன் முதலிய ஐங்குரவரை. மறவன் என்றது ஈண்டு பாபி என்னும் பொருளது. கயவன்-கீழோன்.

முன்புகழ்ந்துரைத்துப்பின்னர்முறுவல்செய்திகழ்வான்றானுந்
தன்பெருங்கிளைநல்கூர்ந்துதளர்வுறவாழ்கின்றானு
மன்புகொண்டொருவன்வைத்தவரும்பொருள்கவர்கின்றானுந்
துன்புறுந்தொழில்செய்வித்துச்சொல்பொருளிலையென்பானும். 36

கற்பழிமனைவியோடுகலந்திருப்பவனுமற்றோர்
பொற்புடைமனைவிதன்னைப்புணர்வதற்கெண்ணுவானுஞ்
சொற்பொருளுணர்த்தினைத்தொழவுளநாணுவானும்
விற்பனவலாதவிற்றுமெய்வளர்த்தழிகுவானும். 37

நலமலிவயலிலாற்றினந்தனத்தாலயத்திற்
சலமலமொழிப்போன்றானுந்தனிவழிவிலக்குவானும்
விலைமொழிபொய்த்துவிற்கும்வெய்யவாணிகனுந்தாழ்ந்த
குலமிலிதன்குற்றேவல்கூலிகொண்டியற்றுவானும். 38

உறவுசெய்தறிந்தசொல்லைவுவர்த்துழிக்கூறுவானும்
பிறர்பிழைதனையேநாடிப்பிறரொடுபேசுவானு
முறைவழுவுறுகொடுஞ்சொன்முனிவிடைமொழிகுவானு
மறிவழிமனைவிசொல்லின்வழிநிற்குமறிவிலானும். 39

கலந்தவர்தமைப்பிரித்துக்கலகங்கண்டிடவல்லானும்
புலந்தருநூலினில்லாப்பொருளினைக்கூறுவானு
நலந்தனையழுக்காறெய்திநகைத்திகழ்கிற்போன்றானு
மெலிந்தவரிடத்துமிக்கவெகுளியைப்பெருக்குவானும். 40

புண்ணியம்பிறர்பொருட்குப்புரிபவன்றானுமிந்த
மண்ணிடையின்பத்திற்காமறுமைசெய்தொழில்விடுக்குந்
தண்ணியவறிவிலானுந்தவத்தரையிகழ்கிற்பானும்
பண்ணியவினையிலென்றும்பாவமேபயில்கின்றானும். 41

(36) கிளை-பந்துவர்க்கம். நல்கூர்தல்-தரித்திரமடைதல்.

(37) சொற்பொருள்-வேதாந்தவுட்பொருள்.

(38) குலமிலிதன்குற்றேவல்-தாழ்ந்தவரிடத்து வேலைசெய்தல்.

(39) உவர்த்தல்-வெறுத்தல். முனிவு-கோபம்.

(40) கலந்தவர்-சிநேகிதர். அழுக்காறு-இதை அழுக்கு ஆறு என இரண்டுசொல்லாகக் கொள்ளாமல், அழுக்கறு என்னும் முதனிலை திரிந்து வந்த தொழிற்பெயராகவாயினும் பண்புப்பெயராகவாயினும் கொள்ள வேண்டு மென்பார் 'ஒருசொல்' என்றார். இதன்பொருள் பொறாமை என்பதாம். வெகுளி-கோபம்.

(41) வினை-காரியம், நல்வினை தீவினையென்றுமாம்.

ஆவனானுண்மைநீயாதறைந்தனையதுசெய்தன்றி
மேவுவேனாயினென்றுவேள்விரும்பமுகன்கூறக்
காவிநேர்விழிமாதேவிகருத்திசைந்தற்றேயாயிற்
போவம்வாவென்றுசொன்னாள்புரவலனுவகைபூத்தான். 42

கோயிலின்முன்னர்ச்சென்றான்கொற்றவன்சிவிகையேற்றி
யாயிழைமடந்தைநல்லாருகுசூழ்வுற்றுச்செல்லப்
போயினளரசர்கோமான்புக்குழிப்புக்காளொள்வேற்
சேயரிநெடுங்கட்செவ்வாய்த்திலகவாணுதன்மாதேவி. 43

மடந்தையைத்தனிக்கண்டங்கிமருவியவரக்கேபோல
வுடைந்துநெக்குருகியாற்றாவுள்ளமோடிளம்பூங்கொம்பே
கடந்திடற்கரியகாமக்கடல்கடந்தேறக்கொங்கைக்
குடந்தரத்திருவுளத்திற்கோடியென்றரசிறைஞ்ச. 44

காவலன்காமமிக்ககழிபடர்கிளவிகண்டு
பாவைபுன்முறுவல்செய்துபண்பெனுந்தொடரால்யாப்புண்
டோவல்செய்யாதுநிற்குமொருகளிறனையாயான்சொ
லேவல்செய்திட்டபின்னரென்னொடுபேசுகென்றாள். 45

ஏதுநான்செய்வதன்னதியற்றுவனறைதியென்ன
வோதினானரசனேதவொண்டொடியயன்மாறேடுஞ்
சோதிமாசிவலிங்கத்தைத்தூயையாய்க்கரபீடத்திற்
போதினாலருச்சித்தென்னைப்பொருந்துதிபின்னரென்றாள். 46

எல்லையில்காமம்பொங்கவிளமுலைஞெமுங்கத்தோளாற்
புல்லுவனென்றெழுந்தபுரவலன்றனைத்தடுத்துச்
சொல்லியதன்னமன்னாள்சுரத்துணீர்முகந்துவாயிற்
செல்லுமொண்கரத்தையோடிச்சென்றுபற்றுதலையொக்கும். 47

---

(42) உவகை-சந்தோஷம்.

(43) சிவிகை-பல்லக்கு. ஆயிழை-ஆராய்ந்தறிந்த கல் ஆபரணங்களை அணிந்தவளாகிய பெண்; இது-அன்மொழித்தொகை. அரி-ரேகை.

(44) அங்கி-அக்கினி. திருவுள்ளம்-மனம். கோடி-கொள்.

(45) காமம்மிக்க கழிபடர்கிளவி-ஆசைமிகுதியாற் படர்ந்த சொற்கள். யாப்புண்டு-கட்டுண்டு. களிறு-ஆண்யானை.

(46) அறைதி-சொல். கரபீடம்-கையாகியபீடம்.

(47) ஞெமுங்க-நெருங்க. சுரம்-பாலைநிலம்.

முகையிடைமுருகுண்டாயின்முளையிடைவிளைவுண்டாயின்
மகவிடைமதனவின்பம்வருவதுண்டாயிற்சைவப்
பகையொடுமருவிநின்றபார்த்திபன்றனதுளத்தி
னுகைவிடையமலன்போற்றுமொழுக்கமும்வந்துநண்ணும். 48

செப்புறுஞ்சூணினைந்துதீண்டிலனரசனின்று
முப்புரஞ்சீறுமுங்கண்முதல்வன்பூசனைதான்யாங்க
ளெப்பொழுதுஞ்செய்தக்கதன்றெனவினையிலாநின்
றப்புறுதோளும்யாங்கடொடுவதன்றெனப்புகன்றான். 49

மட்டவிழ்குழன்மடந்தைவாயுரைகையும்வாயுங்
கட்டியதெனவடங்கிக்காமமிந்தனமிறீப்போற்
கெட்டிடவறிதிருந்தான்கிளர்மணித்தூண்செய்தோளா
னெட்டிலையயில்வேற்கண்ணுணீத்தனள்போகவெண்ணி. 50

துறவெனுமரசுநெஞ்சத்தொன்னகர்கொளவவாவா
மிறைவனதாணையெல்லாமிரிதல்போற்பூண்கள்யாவு
மறுவையுமகற்றியோதியவிழ்த்துவார்மைக்குழம்பின்
மறைவுறுமணிப்பொற்பாவைபோலுடன்மறையவிட்டாள். 51

மருளடைந்தனள்கொலென்றுமருண்டுமன்னவனிருப்பத்
தெருளடைந்தங்கைகொண்டசிவலிங்கத்தொடுநினைந்த
பொருளடைந்தெனமகிழ்ச்சிபொங்கமன்னவனைநீங்கி
யருளடைந்தொழுகுகண்ணுளணிமறுகூடுசென்றாள். 52

அன்னையும்பிதாவுங்கேளாவருமகட்கடுத்ததென்னென்
றுன்னிவந்தழுங்கநீவிரும்மகளென்றுமாழ்கி
யின்னல்கொண்டிரங்கன்மின்போமென்னைநானறியத்தேடித்
தன்னிருங்கருணைசெய்யுஞ்சற்குரவனைச்சார்கிற்பேன். 53

என்றவளவரைநோக்காதேதிலர்போலகன்று
சென்றனணிருமலப்பேர்ச்செல்வனுஞ்சுமதிதானு
நன்றிவணினைந்ததென்றுநம்முடைமரபிற்கெல்லா
நின்றிடும்புகழென்றெண்ணிநிறுவினர்தங்களுமம். 54

---

(48) பார்த்திபன்-அரசன்.
(50) மட்டு-வாசனை. (51) ஓதி-கூந்தல். இரிதல்-நீங்குதல்.
(52) மருள்-மயக்கம். தெருள்-ஞானம். சிவலிங்கம்-இஷ்டலிங்கம். மறுகு-வீதி.
(53) இன்னல்-துன்பம். குரவன்-ஆசாரியன்.
(54) ஏதிலர்-அயலார். மரபு-குலம்.

கண்டவரெல்லாநெஞ்சங்கரைந்துகக்கண்ணீர்மல்கத்
திண்டிறலரசன்பின்னர்ச்சிவிகையூர்ந்தலர்பூங்கோயி
லொண்டிருமகள்போற்சென்றவொண்டொடியிப்பேய்க்கோலங்
கொண்டிவண்போகாநின்றகொள்கையேதறியேமென்பார். 55

மங்கையையிவணங்கண்டேம்வயிறெரிதவழுநின்றே
மிங்கிவடன்னையீன்றாரென்படுவாரோவென்பார்
மங்கலவடிவங்கண்டுமகிழ்ந்தகண்ணிதுவுங்கண்டு
பொங்குறு துயரங்கூரப்புரிந்ததெப்பாவமென்பார். 56

இன்னணநகரமெல்லாமிரங்கமாதேவியம்மை
கன்னலுமமுதுந்தேனுங்கைப்பப்பேரின்பநல்குந்
தன்னிகர்குருகுகேசன்றன்னையேதேடிச்சென்றாண்
மென்னிழல்விருமபிமிக்கவெயில்சுடச்செல்வார்போல. 57

அடவிகடோறுமடைந்துமடுக்கல்கடோறுமிவர்ந்துங்
கடிநகர்தோறும்புகுந்துங்காமனைவென்றவல்வி
மடிவறுமனத்திலன்புவளர்தரக்கருணையாலெங்
குடிமுழுதடிமைகொள்ளுங்குரவனைத்தேடுகின்றாள். 58

பத்தாவது

**அக்கமாதேவிதுறவுகதி முற்றிற்று.**

---

கதி 10 - க்கு திருவிருத்தம் - 591.

---

(58) அடுக்கல்-மலை.

பதினோராவது

# கொக்கிதேவர்கதி

அருள்செயுமல்லமனநிமிடப்பெயர்க்
குரவனைமெய்யொடுகலந்துகொண்டுதான்
பரவுறுமடியர்தம்பவந்துறந்துபோய்த்
திரிதருநிலையினைத்தெரிந்துசெப்புவாம். 1

சீர்நிலையல்லமதேவன்சூல்கொளுங்
கார்நினைமயிலெனக்கருதித்தன்னையே
பார்நிலமிசையமர்பத்தர்தம்மையா
ளோர்நினைவொடுநடந்துலாவுநாள்களுள். 2

ஒன்றொருநாளொருதிசையினோங்கருட்
குன்றனையானொருகோலங்கொண்டுதான்
சென்றனனவனெதிர்சிறந்துதோன்றிற்று
மன்றன்மென்மலரிளவனமொன்றாயிடை. 3

சிறுபொழுதைந்தினுந்திரிவிலாதபே
ரறுபொழுதினுமிதழவிழ்ந்துதேன்சொரி
நறுமலர்நிறையுமந்நந்தனத்தினைப்
பெறின்மகபதிவளம்பெறவுவந்திடார். 4

படிமிசைதவம்பலபயின்றுநொந்தவர்
வடதிசைக்கயிலையின்மருவவேண்டலிக்
கடிமலர்ப்பொழின்மணங்கலந்ததென்றல்வந்
துடன்மிசைதவழ்தரலொன்றுமுன்னியே. 5

---

(1) பவம்-பிறவி. திரிதரு-சஞ்சரிக்கின்ற.

(2) சூல்-கருப்பம். கார்-கார்காலமேகம்.

(4) சிறுபொழுதைந்தாவன:—மாலை, யாமம், வைகறை, விடியல், நண்பகல் என்பனவாம். அறுபொழுதாவது, மேலே சொல்லப்பட்ட ஐவகைப் பொழுதொடு எற்பாடு என்பதைச் சேர்த்து ஆறெனக்கொள்க. பெரும்பொழுது ஆறெனக் கோடலே இயைபு உடைத்து. பெரும்பொழுதாறாவன: கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், வேனில் என்னும் ஆறு பருவங்களாம். மகபதி-தேவேந்திரன்; இதுகாரணப்பெயர்.

(5) படிமிசை-இப்பூமியின்மேல்.

கண்ணிறைமலர்பலகண்டுகண்டுபோ
யுண்ணுறுநறுமதுகொளவுழன்றிடு
மெண்ணறுமளியினமிரையுந்தன்மையாற்
றண்ணுறுநந்தனம்வண்டின்சந்தையே. 6

நறுமலர்நிறையுமந்நந்தனத்தினைக்
குறைவறவளிப்பவன்கொக்கிதேவனென்
றறைதருபெயரினானனையனாயிடைத்
திறமுறுசெயலினைச்செய்துநின்றனன். 7

நின்றவன்றனையருணினைந்தநெஞ்சொடு
சென்றனனல்லமதேவன்கண்டிவன்
புன்றொழில்விடவரும்பொருளுணர்த்துவ
லென்றருகடைந்தையசரணமென்றனன். 8

தானெதிர்நிமலனைச்சரணெனத்தொழாத்
தேனலர்வனத்தனின்செயலியாதுநின்
மேனியின்பெயரெதுவிளம்புகென்றலு
ஞானநல்விளக்கனானவிறன்மேயினான். 9

பத்தர்தம்மனைதொறும்பத்திப்பிச்சைகொண்
டெத்திறவினையுமின்றிருப்பனல்லம
னுத்தமவென்பெயர்பெயருனக்கெனென்
றத்தனும்வினவத்தன்பெயரறைந்தவன். 10

அருங்குருலிங்கசங்கமத்திற்காகமெய்
வருந்துறுதொழிலறவறிதிருப்பவ
னருந்துறுபிணமெனவறையுமாற்றநீ
தெரிந்திலையோவெனச்செப்பன்மேயினான். 11

வேறு

எய்தற்கரியயாக்கைதனக்கெய்திற்றென்றாலதுகொண்டு
செய்தற்கரியவறங்கள்பலசெய்துதுயர்கூர்பிறவியினின்
றுய்தற்கொருமைபெறவெண்ணாதுழல்வோனுடம்புபொற்கலத்திற்
பெய்தற்குரியபால்கமரிற்பெய்ததொக்குமென்பரால். 12

(6) நறுமது-நல்லவாசனையுள்ள தேன். அளியினம்-வண்டுகளின் கூட்டம். (11) குரு-லிங்கம்-சங்கம் என்று மூன்றுபதமாகப் பிரித்து, குருவென்பதற்கு ஞானாசிரியன் என்றும், லிங்கம் என்பதற்குப் பரமான்மா வென்றும், சங்கம் என்பதற்கு அதைத்தெரிந்த சத்துக்களென்றறிக.

(12) யாக்கை-சரீரம். ஒருமைபெற-ஐக்கியம் அடைய.

மின்போலழியுமுடல்கொடுநல்வினைசெய்தழியாவுடம்பெய்தி
யின்போடமர்தலாயிருப்பயாக்கைவருந்துமென்றெண்ணி
யன்போடறஞ்செய்திளையாமலருந்திவாளாவிருக்குமவன் [ன்.
றன்போன்மருளரிலையென்றான்றண்பூம்பொழில்வைத்தளிக்கின்றா

உரைத்தமொழியையல்லமப்பேருடையான்கேட்டுக்கைகுலைத்துச்
சிரித்துவினைநல்லனசெய்துசிதையாவின்பம்பெறுவானேல்
வருத்தலுறுமும்மலங்களினோர்மலமாகியவாணவத்தாலும்
பொருத்தமுறுபேரின்பநாம்புணரலாமென்றியம்பியே. 14

தான்செய்வினையாலோருடம்பிற்சாருமின்பமென்றனையவ்
வூன்செயுடலமொழியவுடனொழியுமம்மெய்யழியாமல்
வான்செய்பதத்திலிருக்குமெனின்மாயைதந்ததன்றாருங்
கான்செய்மலர்நந்தனஞ்செய்துகருவைத்துடைப்பவெண்ணுவாய்.

இன்பநனிசெய்நல்வினையினிறப்பினிறப்பவுடம்பினிடைத்
துன்பமதுசெய்தீயவினைதோன்றுமத்தீவினைமாய்வின்
முன்புசெயுநல்வினைவருமிம்முறையாலிரண்டுமாறிவரு
மென்பவுலகிலொண்பகலுமிரவுமாறிவருதல்போல். 16

புறத்துக்கரும்பலசெய்துபொருப்பையகழ்ந்திட்டெலிபிடித்தாங்
கிறப்பச்சிறியவிண்ணின்பமெய்துமவனோநோவாமன்
மறுத்துச்செயல்களனைத்தினையும்வாளாவிருந்துபேரின்பம்
பெறத்தக்கவனோமருளன்யார்பேசுகென்றானெம்பெருமான். 17

பொறியிற்புறத்துமனஞ்செல்லிற்புலனேதோன்றியிடுமகத்திற்
செறியக்கரணம்பராநந்தசிவமேதோன்றுஞ்சிவந்தோன்ற
வறிவிற்பரந்தவிடயமயமாகுமுலகந்தோன்றாமற்
பிறவித்துயரக்கடல்கடந்துபேரின்பஞ்சார்குவரென்று. 18

கண்ணாற்காணக்காட்டியிவன்கருத்தைத்திருத்துவேமென்ன
வெண்ணாக்கருணைக்கடலனையானிவணீயகழ்தியென்றுரைப்ப
நண்ணாப்பெருமநன்றென்றுநவின்றநிலத்தையகழ்கின்றான்
பண்ணாற்சிறந்தபொறிவண்டுபாடுமலர்ப்பூம்பொழிலுடையான். 19

(14) மும்மலம்-ஆணவம், கன்மம், மாயை. பேரின்பம்-பெருமையாகிய இன்பம், வீடு. இதன் எதிர்மொழி சிற்றின்பம்.

(15) கரு-பிறப்பு.

(18) பொறி-மெய், வாய், கண், மூக்கு, செவி. புலன்-சுவை-ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்.

(19) பொறிவண்டு-புள்ளிகளையுடைய வண்டு.

தொடலுஞ்செம்பொற்சிகரமொன்றுதோன்றச்செய்யுட்பொருள்போலக்
கடிதினகழ்ந்துபுகுந்ததனுட்கண்டார்நிலத்தையகழ்ந்திட்டு
மிடியன்கண்டபொருள்போலவிடையம்புறத்துக்காணுமல்
வடிவஞ்சிறிதுமசையாமல்வசமற்றிருக்கும்யோகியையே. 20

கையிற்சிவலிங்கத்தின்மேற்கண்கள்வைத்திட்டெலும்பலரான்
மெய்யிற்றசையொன்றின்றியேமேவும்புனிதன்றனைநோக்கிச்
செய்யசெயலிலாதசெயற்சிவயோகியைக்கண்டனையோவென்
றையத்தடைந்தவவனறியவறிவித்துயரல்லமதேவன். 21

கடலின்விழுந்துதுயர்பவர்க்குக்கலமொன்றருகுவந்ததெனக்
கெடலில்பரமகுருவெனக்குக்கிடைத்ததாவாவற்புதமென்
றுடலம்விதிர்ப்பக்கண்கணீரொழுகவுருகித்தொழுதனுல்
விடலின்மரபிற்குருசீடவிதியைவிளக்கவுளங்கொண்டு. 22

காந்தங்கண்டவிரும்புபோற்கண்டபொழுதேயநிமிடன்ற
னேந்துஞ்செங்கைச்சிவலிங்கமெங்கள்பெருமானங்கைமலர்
போந்தங்கிருந்ததுபொழுதிற்புனிதன்சிவகலைதானுஞ்
சார்ந்தங்கிருந்தசிவலிங்கந்தன்னேடவன்பாற்சார்ந்ததால். 23

வந்துபரமசிவலிங்கமருவப்பெறுமல்லமன்றனையு
மந்தவிமலலிங்கமுடனடைந்தஞானக்குரவனையுங்
கந்தமலர்நல்வனமுடையான்கண்டுமகிழ்வுற்றிவர்பெருமை
சந்தமறைதேர்நான்முகனுஞ்சாற்றற்கரிதென்றறைகுவான். 24

நின்றுற்கண்டேன்சிவலிங்கநிஷ்டைஞானயோகிதனை
முன்ஞட்கருமமனைத்துமினிமுடித்தேன்ஞானநிலைநின்றே
னுன்றுற்செய்யப்படுமுதவிக்குதவிவேறுநெடுந்தகா
யென்றுற்செய்வதொன்றுளதோவெழிலிக்குதவியார்செய்வார். 25

ஐயநினையுநின்கரத்தினடைந்தசிவலிங்கத்தினையும்
பொய்யில்குரவன்றனையுமொருபொருளென்றறிந்தேனின்றென்று
செய்யகமலத்திருவடியிற்சென்றுதொழுதல்லமனும
மெய்யனெதிர்நின்றன்பினுல்விளம்பும்வனங்காவலனன்றே. 26

(20) மிடியன்-தரித்திரன். யோகி-யோகத்தைச்செய்தவன். இதன் எதிர்மொழி போகி.

(22) கலம்-கப்பல். குருசீடவிதி-குருசிஷ்யலக்ஷணம்.

(24) கந்தம்-வாசனை. சந்தமறை-உதாத்தம், அநுதாத்தம், ஸ்வரிதம், பிரசயம் என்கிற ஓசைகளையுடைய வேதம்.

(25) எழிலி-மேகம்,

என்னையறிவித்ததுபோலிவ்விஷ்டலிங்கமகம்புறமு
மன்னியிருக்குநெறியினைநின்மலர்த்தாள்பரவுமடியார்க்குப்
பண்ணியுணர்த்திச்சரமாகிப்பாரிற்சரிப்பாயெனத்தொழுதான்
தன்னினிலத்தினரரெல்லாந்தரும்பேரின்பம்பெறநினைந்தான். 27

கொக்கிதேவனிரந்தமொழிகொண்டுகிளரல்லமதேவன்
றக்கபெரியோர்தமக்கியல்புதாம்பெற்றுள்ளபேறெல்லா
மிக்கவுலகம்பெறுகவெனவேண்டிக்கோடலெனப்புகழ்ந்து
செக்கர்மலர்ப்பூங்கைகளாற்றீண்டித்தழுவியருள்செய்தான். 28

அங்கைச்சிவலிங்கத்தினிடையமைத்தநோக்குநெஞ்சகமுந்
தங்கச்சிவயோகத்தினையேசார்ந்தங்கிருந்தானோவியம்போன்
மங்கைக்கிடந்தந்தருளினோன்மலர்த்தாட்கிடுபூவனமாக்கிப்
பொங்கப்புரந்ததவத்தான்மெய்ப்பொருளாசிரியற்கண்ணுற்றான். 29

அடியர்வேண்டிற்றேபுரியுமல்லமப்பேரெம்பெருமா
னெடியவிழிகளருள்சுரப்பநிமலலிங்கங்கரத்தேந்திப்
படியிலரியதவஞ்செய்யும்பத்தருள்ளங்களிகூர
வடியவிளமாத்தழைப்பவருமந்தாநிலம்போற்சரிக்கின்றான். 30

பதினோராவது

கோக்கிதேவர்கதி முற்றிற்று.

---

கதி 11 - க்கு திருவிருத்தம் - 621.

---

(27) சாம்-சரிக்கும்பொருள்; சரித்தல்-சஞ்சரித்தல்.
(28) கிளர்-பிரகாசிக்கின்ற. கோடல்-கொள்ளுதல்.
(29) ஓவியம்-சித்திரம். மெய்ப்பொருள்-நிலையுள்ளபொருள்.
(30) நிமலம்-குற்றமில்லாதது.

### பன்னிரண்டாவது

# முத்தாயியம்மைகதி



கண்டிலேனசகண்ணனையென்றனார்
கொண்டுவாடுங்கொடியிடையாடுயர்
விண்டுபோகவிரைந்துவந்தல்லமன்
பண்டுகூறும்பரிசுவிளம்புவாம். 1

பொடியணிந்தெழில்பொங்குறுமல்லம
னடியர்தங்களகத்திற்றுயரினை
யுடையிழந்தவொருவன்கரமெனக்
கடிதடைந்துகளைந்தருள்செய்புநாள். 2

மறைத்திருந்தமலிசிவபத்தியைப்
புறத்தறிந்தபொழுதேயுடம்பினை
வெறுத்தகன்றுவெளியுருவாயினா
னறுத்தபந்தவசகணனென்பவே. 3

அறைந்ததூயவனங்கவுபாதிபோய்
நிறைந்தநீர்மைநினைந்திலள்போயுயி
ரிறந்துபோயினனென்னத்தளர்ந்துடன்
பிறந்தமாதுபெரிதுளமாழ்கியே. 4

புலம்பிநைந்திருக்கின்றவப்போதினி
லிலிங்கமுங்கரமுந்திகழ்வெய்துற
நலங்கொளல்லமனண்ணினனண்ணலுங்
கலங்கிநின்றவக்காரிகைகண்டனள். 5

கண்டபோதசகண்ணனைக்காண்கிலாள்
கொண்டபீழைகுறையவழுதடிப்
புண்டரீகப்புதுமலர்வீழ்ந்துகண்
மண்டுநீருகவாய்விட்டரற்றினாள். 6

---

(3) வெளியுறுவாதல்-சிதாகாச உருவமடைதல்.
(4) அங்கவுபாதி-தேகத்தாலுண்டானபாவம்.
(6) பீழை-துன்பம். புண்டரீகம்-வெண்டாமரை. மண்டு-நெருங்கி.

பாவியேன்முகம்பார்க்கவொண்ணுதென
வாவியாமசகண்ணனகன்றுசெய்
நோவெலாமிவனூக்கவருளினுன்
மேவினுயெனமீண்டும்வணங்கினுள். 7

வணங்குமாதின்மலர்முகநோக்கியே
யணங்கனுய்நல்லசகணன்றன்மையை
யுணர்ந்திடாமலுளைதலுணர்வுளார்க்
கிணங்குறுதலெதன்றெந்தையியம்புவான். 8

அழிவிலானையழிந்தனனென்றுநீ
விழியினுன்மிகுவெள்ளம்பெருக்கினை
கழிவிலாதவாகாயங்கழிந்ததென்
ருெழிவிலாமலுளமெலிவார்கள்போல். 9

சச்சிதானந்தசங்கரனுகவே
யச்சநீங்குபுதன்னையறிந்தவன்
றுச்சமாந்துயர்தோன்மலியாக்கையை
யிச்சியானதையாரெனவெண்ணியே. 10

ஒண்டரைக்கணுழிவிலருளுருக்
கொண்டடுத்தகுருவருளாற்றனைக்
கண்டமெய்த்தவன்காயந்தனையன
முண்டகெட்டிலையொப்பவிடுப்பனுல். 11

படியில்வந்தபரமகுரவனுற்
றடையறும்படிதன்னையறிந்தவ
னுடல்விடும்பொழுதொன்றுருமண்மயக்
கடமுடைந்தவாகாயநிகர்ப்பனுல். 12

பந்தபாசமுழுதும்பரிந்திட
நந்துமோர்சிவஞானிநரர்வினை
சிந்துமாறுசெறிந்தவுடம்புதான்
வெந்ததூசின்விழியெதிர்தோன்றுமே. 13

(10) சச்சிதானந்தன்-சத்து சித்து ஆனந்தமாக விளங்குபவன்.

(11) கெட்டிலை-நீண்ட இலை.

(12) மண்மயக்கடம்-மண்ணுலாகியகுடம்.

(13) பந்தம் - கட்டு. பாசம் - அன்பாலுண்டானகயிறு. நரர் - மனிதர். தூசு-ஆடை.

யாவுமாகியிருக்குஞ்சிவத்தொடு
மேவுஞானவிழியுடையான்றனக்
கோவுமாறிலுறவுபகையெனும்
பாவமோவிலையென்றறிபாவையே. 14

யாக்கைதாமென்றிருந்தழிகின்றவ
ரூக்கிலாவறிவாகியுடம்பொடு
தாக்கிலாதவர்தம்மையுந்தாமென
நோக்குவாரவருண்மையைநோக்குறார். 15

கூத்தனுடைகக்கோலநடிப்பினைப்
பார்த்துவாய்மையென்றெண்ணிலர்பாருளா
ரேத்துஞானிதன்யாக்கைநடிப்பினை
யோர்த்துமாதவருண்மையென்றுன்னுறார். 16

அறிந்திடாமலசகணன்றன்மையை
யிறந்துளாரென்றிரங்கினையன்னைநீ
மறந்திடாயிம்மதியென்றணல்சொல
நிறைந்தஞானமுத்தாயிநிகழ்த்துவாள். 17

அரவின்காலரவன்றியறிபவர்
தரையினில்லையசகணன்றன்னைநீ
தெரியினன்றிச்சிறியளறிவலோ
பெருமயான்செய்பிழைபொறுப்பாயென்று. 18

வேறு

பங்கனிருந்தபதிக்கருள்செய்து
கங்கையடைந்தகணக்கெனவென்பா
லிங்குறவந்தனையெங்குடியுள்ளார்
தங்கடவந்தருதன்மையினென்று. 19

வந்தனைசெய்துவழுத்திமுனின்று
பந்தமகன்றபதம்பெறும்வண்ண
மெந்தையியம்பியெனக்கருள்செய்யென்
றந்தமடந்தையறைந்தனளன்றே. 20

தேசிகனல்லமதேவன்மகிழ்ந்து
பாசமகன்றுபரம்பொருள்காணு
நேசமடைந்தனைநின்னைநிகர்ப்பார்
காசினியின்மிசைகண்டிலமென்று. 21

(15) ஊக்கிலா-அழியாத. (16) கூத்தன்-ஆடுபவன். (20) பந்தம்-சம்பந்தம், கட்டு. (21) தேசிகன்-ஆரியன். காசினி-பூமி.

பிறப்பொருகோடிபிறந்துபிறந்து
புறக்கருமங்கள்புரிந்திடினும்பொய்
மறப்புறுமாணவவல்லிருளின்றிச்
சிறப்புறுமுத்திசெறிந்திடுவாரோ. 22

மசிப்பொடுதிப்புமறிக்குதுமென்று
கருத்தைவெளிக்கருமத்தின்விடுத்து
விரிக்குதனெய்யைவிடுத்தெரிகின்ற
நெருப்பையவிப்பநிகைப்பதையொக்கும். 23

மட்டறவோடுமனத்தைநிறுத்திக்
கட்டுதல்வீடுவிடுத்திடல்கட்டன்
றொட்டியபண்பினுரைத்தலமப்பேர்ச்
சிட்டனவட்கருள்செய்தனனன்றே. 24

தத்துவமுற்றுமயக்குவதள்ளி
மெய்த்ததனைப்பெறவேறுகொடுத்தான்
பொய்த்துறுகுப்பைகிளைத்தொளிபொங்கு
முத்தையளித்தெனமுத்தைதனக்கு. 25

வீடுவிரும்பிவெறுத்திலன்மெய்யைத்
தாடருமொண்குரவன்றனையெங்கு
நாடியுழன்றிலனுயவென்னைத்
தேடியடைந்தருள்செய்தனையென்று. 26

அல்லமனென்னுமருட்குரவன்றாள்
புல்லிவணங்குபொற்கொடியன்னாள்
செல்லலகன்றுசிதம்பரமெய்தி
யெல்லையிலின்பொடிருந்தனளம்மா. 27

பன்னிரண்டாவது

முத்தாயியம்மைகதி முற்றிற்று.

---

கதி 12 - க்கு திருவிருத்தம் - 648.

---

(24) மட்டறவோடுமனத்தை நிறுத்திக் கட்டுதல் வீடு விடுத்திடல் கட்டு-எல்லையைக்கடந்தோடுகின்ற மனத்தை நிறுத்திக் கட்டுதலே மோக்ஷம்; மனதை நிறுத்தாமல் விஷயங்களிற் செல்லவிடுதலே கட்டு.

(25) தத்துவம்-இப்பாடலில், முதலில்வரும், 'முத்தை' என்பதற்கு, நல்முத்து என்றும், இரண்டாவதுவரும் 'முத்தை' முத்தாயியம்மை எனப் பொருள் கொள்ளவேண்டும்.

பதின்மூன்றவது

# சித்தராமையர்கதி

வேறு

காமருசித்த
ராமனிடத்திற்
போமணல்சொற்ற
சீர்மையுரைப்பாம். 1

செல்லல்களைந்து
நல்லறிவின்பஞ்
சொல்லுவனென்று
மல்லமனென்பான். 2

கருமயோகமுங்
கிரியையாவையும்
மருவிராமன்வாழ்
புரியைமேவினான். 3

வாவியாலயங்
காவிராமனா
ரேவலாளர்செய்
தோவிலாமையை. 4

பார்த்தருளண்ணன்
மூத்தவிராமன்
வார்த்தையறிந்த
கூத்தினனென்றே. 5

பேரறிவினான்
சாரவிருந்த
வூரினுமில்லென்
றாவிகழ்ந்தே. 6

இல்லமகன்றிவ்
வல்லலடைந்தா
னல்லபசும்பொன்
வல்லியுவந்தான். 7

என்றுநினைந்து
நன்றுறவாவி
யொன்றகழ்வார்பாற்
சென்றிதுசொல்வான். 8

(1) காமரு-அழகிய.

(2) நல்லறிவு-முத்தியை அடைவிக்கக்கூடிய பேரறிவு; நிச்சயஞானம்.

(3) கர்மயோகம்-இது இரண்டுவகைப்படும். ஒன்று விகிதகர்மமென்றும், மற்றொன்று நிஷித்தகர்மமென்றும் சொல்லுவர். புருஷனுடைய பிரவிருத்தியின்பொருட்டு எக்கருமங்களை வேதம் விதிக்கிறதோ அவை விகிதகர்மமாம். எக்கருமங்களை வேதம் நிஷேதிக்கிறதோ அவை நிஷித்தகருமமாம். வேதத்தால் விதிக்கப்படாமலும் அல்லது நிஷேதிக்கப்படாமலும் விருப்புவெறுப்பில்லாது செய்யப்படும் ஸ்வபாவீகமான நடை சௌசம் முதலிய கர்மங்கள் உதாசீனகர்மமாகையால், அஃது ஈங்கு கூறப்படவில்லை. ஏனெனில், வேதமுறைப்படி செய்யுங்கர்மமே கர்மமாமென்பது நியமமாகவிருத்தலின், கட்குடித்தல் சூதாடல் முதலிய கர்மங்கள் நரகத்திற்கேதுவா யிருத்தலால் அவை யொருபோதுஞ் செய்யத்தக்கனவல்ல; இவை நிஷித்தகன்மமாம். ஆகையால், இங்கு கூறிய கர்மயோகம் பலனை விரும்பிச் செய்யாத நிஷ்டையாம்.

வேறு

ஒட்டராமனுளத்தினி
விட்டம்யாதுகொலித்தொழின்
முட்டிலாமன்முயன்றனன்
கொட்டிவீழுமிருத்தல்போல். 9

விழற்கிறைப்பவிடுத்தல்போற்
றொழிற்குளெய்த்துறுதொழினுமை
யிழைக்கவிட்டதெனென்றிட
ரொழிக்கலுற்றவனோதினன். 10

சாந்தனோதியதாழ்மொழி
காய்ந்தவேலிருகாதினும்
போந்தபோன்றுபுகுந்தன
மாந்தராகுலமன்னினர். 11

அறமழித்தனையன்றியு
நெறியறக்குருநிந்தனை
பெறவுரைத்தனைபித்தவென்
றறவுறுத்தனரொட்டலர். 12

ஒட்டனென்றனையும்பருஞ்
சிட்டனென்றுகொள்சித்தனைத்
துட்டவென்றுசுளித்தனர்
வெட்டிருந்தடமேவினோர். 13

வேறு

மெய்த்தடமகழ்பவர்வினையையன்றியே
சித்தர்தஞ்செயலொருசிறிதுமின்மையான்
மத்தர்நுங்குரவனைமண்ணினும்மினு
முத்தமவொட்டனென்றுரைத்துமென்றனன். 14

---

(10) விழல்-வீண்.

(11) தாழ்மொழி-இழிவுச்சொல். ஆகுலம்-துன்பம்.

(12) உறுத்தல்-கோபித்தல்.

(13) உம்பர்-மேலுலகவாசிகள்; தேவர்கள். சிட்டன்-ஆசார வைராக்கி யங்களிற் றேர்ந்தவன். சுளித்தல்-முகத்தைக் கடுகடுத்துக்காட்டல்.

(14) சித்தர்-சித்தியடைந்தவர்.

நிகழ்ந்துலகிடைநிலைநிற்குநல்லற
முகந்துசெய்பவன்றனையும்பனையெனப்
புகழ்ந்தவர்புண்ணியர்பொறுமையானிழித்
திகழ்ந்தவர்நரகரென்றிசைப்பர்நல்லவர். 15

மறவினையுடையரைமாற்றித்தூயநல்
லறவினையுடையரையறிந்திட்டன்னரோ
டுறவினையடைந்திலையொப்பக்கண்டறத்
துறவினையுளேயெனவொட்டார்சொல்லினார். 16

ஓங்கிருவினைகளுமொப்பக்கண்டவர்
தாங்களென்றனையொருதமரிற்பேணுவ
ராங்கவையிரண்டையுமடைந்துபோயுழ
ஞீங்களென்றனையுணர்நெறியிலீரென்றான். 17

எனக்கறவினையுமிலென்றுகூறினு
யுனக்கொருகதியிலென்றுண்மைகூறியே
சினத்தனர்நிலனகழ்சிறியர்யாவருந்
தனக்கிணைதானெனுந்தம்பிரானையே. 18

முற்றியகல்வியின்மூடர்நீவிர்நுங்
கற்றறிமூடனுக்கறைமினன்னவ
னுற்றனனெனிலவனுணர்வுஞ்சொல்லினு
விற்றெனவுணர்வமென்றெந்தைகூறினான். 19

சேடனும்புகழ்வுறுஞ்சித்தராமனை
மூடனென்றுரைத்தவம்மொழிகயந்தொடத்
தோடருங்கொட்டினோர்சீற்றத்துப்பெனு
நீடுவெந்தழல்சொரிநெய்நிகர்த்ததால். 20

இறுக்கினராழுக்குடையெயிறுமென்றன
ருறுக்கினரதிர்த்தனருயிர்த்துமீசையை
முறுக்கினர்நகைத்தனர்முருட்டுக்கைகளாற்
பெறுக்கினர்சிலைகளைப்பெருஞ்சினத்தராய். 21

---

(17) ஓங்கிருவினைகளு மொப்பக்காண்டல் - நல்வினை தீவினை ஆகிய விரண்டையும் சமமாகத் தெரிந்து தெளிதல். இப்பாடலில் 'யானென தென் னுஞ் செறுக் கறுப்பான்-வானோர்க் குயர்ந்த வுலகம் புகும்' என்னும் திருவள் ளுவர் கூறிய வேதாந்தப் பொருள் அமைந்திருத்தல் காண்க.

(20) சேடன்-ஆதிசேஷனென்னும் சர்ப்பத்தலைவன்.

நங்குரவனையிகழ்நயமிலான்றனை
யிங்கொருசிலையினுலெறிந்துகொல்லுதல்
பொங்குறுமறமொடுபுகழுமாகுமென்
றெங்குரவணையவரெதிர்ந்துசூழ்ந்தனர். 22

கட்டுமினடிமினுங்கரத்திற்கொட்டினல்
வெட்டுமினிந்தைசொல்வாயின்வெண்பலைத்
தட்டுமினெறிமின்வன்றலைகுமைந்திடக்
குட்டுமினெனவுளங்கொதித்துக்கூடினர். 23

என்மனவிருளறவெழுந்தவல்லமன்
மின்மலிவுறுதிருமேனிமீதிடிச்
சொன்மலியொட்டலர்சூழ்ந்துகொண்டுவன்
கன்மழைசொரிந்தனர்கைசலிப்பவே. 24

சாக்கியனுரெறிதனிக்கலன்றிமெய்
நோக்கிலர்தாமொருநூறுகோடிகன்
மீக்கிளர்சோதிதன்மீதுவீசினுந்
தாக்குறுமோவவைதாக்குறுவரோ. 25

கொடியவரெறிந்தகல்குவியக்குன்றென
முடிமிசைநின்றனன்முத்தனல்லமன்
புடவியினுடணிழல்புதைப்பவந்நிழல்
கடிதினின்மீமிசைகாணுந்தன்மைபோல். 26

ஒறுப்பவனிழிந்தவனொருவன்செய்தநோய்
பொறுப்பவனடுவுளன்பொறுக்குநெஞ்சமு
மறப்பவனுயர்ந்தவனென்றுவாய்மையாற்
சிறப்பவரிம்முறைசெப்புவாரரோ. 27

தீங்கிணையெதிர்நின்றுசெய்தபோதினே
தாங்கிலன்முனிவினைமறந்துதாமரைத்
தேங்கமழ்மலரெனமுகஞ்சிறப்புறீஇ
யீங்குநின்றிடுமிவன்யாண்டுளான்கொலோ. 28

---

(23) கட்டுமின் பிடிமினும் என்றும் பாடமுமுண்டு.

(26) முத்தன்-முத்தியைக் கொடுப்பவன். புடவி-பூமி. மீமிசை-மேல், இது ஒருபொருட் பன்மொழி.

(27) வருத்தல்-வருத்தல். இப்பாடலால் ஒருவன் தீங்குசெய்தால் அவனைத் தண்டிப்பவன் அதமன் என்பதும், அந்தத தீங்கைப் பொறுத்துக் கொள்ளுவோன் மத்திமனென்பதும், அதனை மறந்துவிடுவோன் உத்தமனென்பதும் விளங்கிநிற்றல் காண்க.

மலர்மிசைவேதனேமலர்க்கண்மாயனே
பலர்புகழ்மழவிடைப்பாகனேவெனி
லலனிவன்பிழைசெயுமவரிடத்தினு
நலனுளனென்றுகண்டவர்நவின்றனர். 29

கல்லெறிபடாமையைக்கண்டவொட்டலர்
சொல்லுறினிவனொருசூழ்ச்சிமந்திரம்
வல்லவனிவன்றனைவலிந்துபற்றியே
கொல்லுவமெனவெதிர்குறுகினாரரோ. 30

குறுகலுமவன்பலகோலங்கொண்டன
னிறைபுனற்கடந்தொறுநிலவுதோன்றல்போன்
மறுகினர்நிலனகழ்மனிதர்பற்றுதற்
கறிகிலரிவனயனென்றனையன்றனையே. 31

மருண்டனர்சித்தராமப்பெருந்தகை
யிருந்தருளிடத்துமெய்யிளைப்பவோடியே
திருந்தியவடிமிசைச்சென்றுவீழ்ந்தெழுந்
தரந்தையோடனையவரறைதன்மேயினர். 32

யாந்தொழில்செயுமிடத்தேதுவின்றியே
போந்தனனொருமகன்புதியனின்புக
ழோர்ந்திலனுரைக்கொணாவிழிபுரைத்தனன்
மாய்ந்திலமுடனசைமருவியாங்களே. 33

என்றவரறைதலுமிராமன்சிந்தையிற்
புன்றொழிலகன்றுமெய்ப்போதம்பெற்றிட
வன்றருளல்லமனடிகள்காட்டுறு
மொன்றொருசீற்றம்வந்துதித்தெழுந்ததே. 34

யாவனென்றன்னையின்றிகழ்ந்துளானவ
னுவரிந்திடுவனெனவெழுந்தனன்
மேவுறுந்தவமதவெகுளிதானினி
யோவுறுந்தாத்ததன்றொருவரானுமே. 35

(30) சூழ்ச்சி-தந்திரம்.
(33) ஏது-காரணம்.
(34) போதம்-ஞானம்.

## வேறு

என்னைவைதவன்யாரவனெனமுனிந்தெரிபோன்
முன்னரெய்தினன்சித்தராமப்பெயர்முதல்வ
னன்னையன்னநம்மல்லமனவன்சினமறிந்து
சென்னியொண்கரமசைத்துவெண்ணகைசெய்துசெப்பும். 36

அகழ்கின்றார்தமைத்தாங்குறுமகனிலமென்ன
விகழ்கின்றார்தமைப்பொறுக்குமித்தன்மையெய்தலினு
னிகழ்கின்றாருண்மாதவமுடையோகிநீயென்று
புகழ்கின்றானெனவிகழ்ந்தனன்பின்னரும்புகல்வான். 37

சிறப்புப்பெற்றநல்யோகிதன்மனத்தெழுசினந்த
னறத்தைக்கொன்றிடுமுன்புபஞ்சியிற்புகுமழல்போ
லொறுக்கப்பட்டவன்பவம்பினையொழித்திடுமதனாற்
பொறுத்தற்கொப்பிலையென்றுநன்றறிந்தனைபோலும். 38

காலனின்முனம்பொறையுளனாகுவன்கடல்சே
ராலநல்லமுதாகுமென்றவன்றவம்புகழ்வான்
போலவைதனன்கொடியவனெனும்பொருடோன்றச்
சீலநல்குமோர்தொழில்செயுமல்லமதேவன். 39

பொறையுறும்படியல்லமன்சூழ்ச்சியிற்புகலக்
குறையுறுஞ்சினமிகுந்தனனெருப்பெனக்கொதித்தே
யறையுறுந்திரள்பக்தனச்சித்தராமைய
னிறையுறுந்திருவருளுடைப்பிரானொடுநிகழ்த்தும். 40

குறிப்பில்வைதனைவெளிப்படையிகழ்வினுங்கொடிதாய்
வெறுப்புமுன்செயாவென்னைநீயீண்டிகழ்ந்தமையாற்
பொறுப்பனல்லன்யானுதல்விழித்தீயிடைப்பொடிப்ப
வறுப்பனென்றனனிகழ்வினுக்காருளமறுகார். 41

தன்னைக்கொல்லினுந்தான்பிறிதொன்றினைக்கோறல்
பன்னிற்பாவமென்றறைகுவர்கற்றுணர்பழையோர்
நின்னைச்சொல்லியவறத்தினைநிந்தையென்றெண்ணி
யென்னைக்கொல்லுவனென்றநீயறவனேயென்று. 42

---

(37) அகழ்தல்-தோண்டல். இப்பாடலை 'அகழ்வாரைத் தாங்குநிலம்' என்னும் திருக்குறளுடன் ஒப்பிடுக. (39) காலன்-எமன். பொறை-பொறுத்தல். சீலம்-ஒழுக்கம். ஆலம்-விஷம். (42) தன்னைக் கொல்லினுந் தான்பிறிதொன்றினைக் கோறல் பன்னிற் பாவமென் றறைகுவர்' இப்பாடலின்கருத்தினை 'தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க - தான்பிறிது இன்னுயிர் நீக்கும் வினை' என்னும் திருக்குறளுடன் ஒப்பிடுக.

சாதனங்களுணீ றுமுந்தியதென்பர்சாற்று
மாதவங்களுளுயிர்செகாமையுமற்றுமதிப்பிற்
பாதகங்களிற்கொலைசிறந்தன்றெனப்பார்த்து
நீதெரிந்திலையரக்கனேயென்றனனிமலன். 43

செருக்கொழிந்திலையென்னெதிர்செவிசுடுதீச்சொ
லுரைத்துநின்றனேயுனைவிடுகிலனெனவுறுத்து
நெருப்பெனுந்திருநுதல்விழிதிறந்தனனினைத்து
மரிப்பினுந்தருவேனுயிரென்றிராமன்முன். 44

நெற்றித்தீவிழிக்காமனைநீற்றுவதன்றிப்
பற்றிக்காமமில்யோகியைப்படுத்திடவற்றோ
செற்றத்தானுதல்விழியழலல்லமதேவன்
வெற்றித்தாண்மலர்க்கீழ்ச்சென்றுபணிந்ததுவிரைந்து. 45

பணிந்துமீளுமவ்வழலொருவீரன்மேற்பாயத்
துணிந்துபோயவனாற்றல்கண்டுளவலிதொலைந்து
தணிந்துபேடிமேற்செல்லுமாறலைவனசரன்போ
லணைந்திராமன்வாழ்நகரினிற்பற்றியதன்றே. 46

கங்கைவார்சடைக்கறைமிடற்றிறைநகைக்கனல்போய்த்
துங்கமாமதில்சூழ்தருபுரத்தினைச்சுடல்போ
லெங்கணுயகன்மேல்விடுமிராமனன்னுதற்க
ணங்கிபோகியந்நகரினைச்சுட்டதையன்றே. 47

அணியெரிந்தனமென்றுகிலெரிந்தனவாரத்
துணியெரிந்தனகலவைகளெரிந்தனசுதையின்
பணியெரிந்தனமனைவளமெரிந்தனபகரு
மணியெரிந்தனவெரிந்தனகண்டவர்வயிறு. 48

---

(43) அரக்கன்-இராக்ஷஸன்.

(44) நெருப்பெனுந் திருநுதல்விழி - நெருப்பைக்காட்டிலும் வெப்பத்தைக் கொடுக்கும் அழகிய நெற்றியிலுள்ள அக்கினிக்கண். ஒப்புப்பொருளைக் கொடுக்கும் 'உம்' என்பது இங்கு உயர்வொப்பைக் கொண்டிருத்தல் காண்க.

(47) கறை-குற்றம்; இங்கு விஷம். மிடறு-கழுத்து.

(48) சுதை-வெண்மை.

சேயெடுப்பவர்விருத்தரையீர்ப்பவர்சேமம்
போயெடுப்பவர்புகவரிதாகிமண்புரண்டு
வாயடிப்பவர்மனையெரியவிப்பவர்மறுகிப்
பாயலைக்கடலெனவழுதிரங்கினர்பதைத்து. 49

உதித்தஞாயிறுபோன்றுசெம்மணியினமொளிரப்
பதித்தமாளிகைமீதுபற்றியவழற்கொழுந்தாற்
கதிர்த்தவாடகச்செங்கமலத்துவான்கங்கை
கொதித்ததாயிடைக்கொதிபொருதன்னங்கள்குழைய. 50

அன்னகாலையிலருட்கடலல்லமதேவன்
சொன்னலாபுரத்தவர்துயரனைத்தையுந்தொலைப்ப
வுன்னியோர்விழியழலினையிமைப்பினிலொழித்தான்
முன்னமாலமுண்டமரரைக்காத்தருண்முறைபோல். 51

எந்தையல்லமனருளிஞுனுதல்விழியெரியால்
வெந்தவந்நகர்பண்டையின்மும்மடிவிளக்கம்
வந்தபல்வளமொடுசிறந்ததுநகரர்மகிழ
வுந்துவெவ்வழலிடைவெந்தவாடகமொத்து. 52

ஒருத்தன்வந்தவாருக்கியபொற்பணியொன்றைத்
திருத்தவல்லவனழித்ததைச்சிறந்திடச்செயல்போற்
புரத்தைநன்றுறவல்லமன்புரிதலும்புரத்தோர்
கருத்தில்வந்தெழுந்தோங்கியதார்வமாகடலே. 53

ஒருகணூற்றல்போயொழிந்திடவலியறுமிராம
னிருகணுலுங்கண்டுளச்செருக்கென்படுதான்றின்றிப்
பெருகுநாணெனும்புனல்கொளப்பேரழல்விழுந்து
கருகுநாண்மலரெனமுகங்கரிந்திதுகருதும். 54

வேறு

என்றொருநுதல்விழித்தீயிவன்றனையிறைஞ்சலாலே
தன்னருளதனலென்னைத்தடுத்துவந்தாளவேண்டிப்
பொன்னவிர்சுணங்குபூத்தபுணர்முலைமடந்தைபாக
னிந்நிலவரைப்பிற்கோலமிதுகொடுவந்தானென்று. 55

---

(49) சேய்-குழந்தை. பாயலை-வீசுகின்ற அலை.

(50) ஞாயிறு-சூரியன். (51) அமரர்-அமுதத்தையுண்ட தேவர்கள்.

(54) ஒருகண்-ஒப்பற்ற கண்ணாகிய நெற்றிக்கண்ணைக் குறித்தது என்க. ஏனெனில்: இக்கண்ணே துஷ்டநிக்ரகம் செய்தற்கு எம்பெருமானுக்கு உதவியாக விருத்தலினென்க.

(55) சுணங்கு-தேமல். மடந்தைபாகன்-அர்த்தநாரீச்சுவரன்.

தீயனேனறிவிலாமற்செய்பிழைபொறுத்தாட்கோடி
பேயனானொருவன்செய்தபிழையினையவனையீன்ற
தாயலாற்பொறுப்பார்யாவர்தாணுவேயென்றிராமன்
போயெனாரமுதின்செந்தாட்போதினைப்பற்றிவீழ்ந்தான். 56

தன்னினமாமிராமன்சரண்புகிலவன்செய்தீமை
யுன்னுவனலனெனங்கோமானுடன்றுவந்திலங்கைகாக்கு
மன்னவன்கவின்கூர்வெள்ளிமலையெடுத்தலைத்துவந்து
பின்னவன்வணங்கிநிற்பப்பிழையுளங்கொண்டதுண்டோ. 57

செய்யதாண்மலரின்வீழ்ந்தசித்தனையருளானோக்கி
ஐயநீயெழுகநெஞ்சிலஞ்சலையென்றுகூறிக்
கையினாலெடுத்தணைத்துக்கல்வியுந்தவமுமாய்க்கும்
வெய்யதாம்வெகுளிதன்னைவிட்டிடென்றெந்தைசொல்வான். 58

வலியவனிடத்துமோத்தான்மாட்டினும்வெகுளிகாத்தல்
பொலிவுசெயறமதென்னப்பொருந்துறுதனையர்தம்பா
னலிவுறுவெகுளிசெல்லாததலானலியலாற்று
மெலியவனிடத்திற்காக்கும்வெகுளியேயறமதென்பர். 59

வைதவன்றன்னைநன்றுவாழ்த்தினனெனவுந்தீய
செய்தவன்றன்னைநல்லசெய்தவனெனவுங்கொள்வோன்
கைதவமகன்றமுத்திகண்டவனவ்வாறுன்னான்
பொய்தவனென்பதென்றுபுகன்றனர்புலவரன்றே. 60

பெரியவர்தம்மைக்காய்ந்தான்பிறங்கல்கல்லியகோலொப்பான்
புரிவனபுரியப்பட்டுப்புலம்புவனொத்தார்க்காய்ந்தா
னெரிநரகதனில்வீழ்வனிழிந்தவர்க்காய்ந்தானென்று
லொருவர்தம்மிடத்துஞ்சீற்றமுறுமையேநன்றுமாதோ. 61

யாவர்க்குமொப்பநன்றுமென்னினுஞ்சினமிலாமை
மூவர்க்குமரியசெய்யுமுனிவர்க்குஞ்சிறந்ததென்று
தேவர்க்குமரியவின்பஞ்சித்தராமப்பேரண்ணன்
மேவற்குவடிவங்கொண்டுமேவியவிமலன்சொன்னான். 62

---

• (56) தாணுவே-நிலையுள்ளபொருளே.

(62) சினம்-கோபம்.

அல்லமனறைந்தமாற்றமறிந்துநஞ்சித்தராமன்
சொல்லுவன்முத்தியெய்துந்துணையசாதனங்களெல்லா
மில்லையென்னிடத்திலேனுமென்னைநீவலிந்தாட்கொள்ள
நல்லவனாகச்செய்தநன்மையேநன்மையென்று. 63

கருத்தழிகடமிறங்குகவுட்கரிவலிந்துபற்றித்
திருத்துபுதன்காலேவுஞ்செயல்செயக்கொள்வதன்றி
யொருத்தல்வந்தறிந்துதானேயுறவுகொண்டிடுவதுண்டோ
தெரித்திடிலடியனேனின்றிருவடிக்கத்திறத்தேன். 64

அடன்மலிவீரன்வீரமவனெதிர்மலைந்துநின்றோன்
படமிசைகொண்டுகாணப்படுமதுபோலவுன்றன்
கடன்மலியருளினாற்றல்கண்டிடப்படுமிங்கென்றன்
கொடுமையின்மிகையாலென்றுகுடந்தம்பட்டழுங்கிக்கூறி. 65

என்குறைநினையாதெந்தாயினித்திருவுளமிரங்கி
நன்குறுமுத்திசேருநன்னெறிகாட்டுகென்று
தன்குறையிரந்துளைந்துதனைநிகர்சித்தராமன்
முன்கரையிறந்தவன்பான்முதல்வனைவணங்கினானல். 66

வணங்கியவவனைஞானவாரிதியருளானோக்கி
யிணங்கியபருவங்காணுமிவன்றனக்கின்பமுத்தி
யணைந்திடுநெறியீதென்னவறைவமென்றுளத்துட்கொண்டு
பிணங்குறுபிறவியென்னும்பிணிமருந்தனையான்சொல்வான். 67

பருவமுற்றிலர்க்குமுக்கட்பகவனாகமத்திலுண்மைப்
பெருமையைப்பொருளையெண்ணிப்பெருமிதத்துரைப்பிலன்னான்
குரவரிற்பதடியென்பகுறித்துநற்பருவநோக்கி
யருள்செயிற்குரவசிங்கமவனெனாவறைவனையன். 68

(64) கவுள்-கன்னம். ஒருத்தல்-யானை.
(65) படைமிசை என்றும் பாடம். அழுங்கி-இரங்கி.
(66) உளைந்து-வருந்தி.
(67) பிணி மருந்து-நோய்க்கு மருந்து.
(68) பகவன்-பரமசிவன்; இது பகவார் என்னும் வடமொழியின் விகாரம்; நிறைந்த ஞானம், சக்தி, பலம், ஐஸ்வர்யம், வீரியம், தேஜசு என்கிற ஆறு குணங்களுக்கும் 'பகம்' என்று பெயராதலால், பகவான் என்பதற்கு இந்த ஆறு குணங்களையுமுடையவன் என்று பொருள்.

உரைசெயிற்பரமஞானமொன்றுமேமுத்திக்கேது
சரிதைநற்கிரியையோகந்தாமொருமூன்றுஞான
மருவுதற்கேதுவென்றுமறைபுகன்றுரைக்குமிந்தக்
கருவினைப்பொருளென்றெண்ணிக்களிப்பவர்கயவரன்றே. 69

---

(69) பரமஞானம்-மேலானஞானம். சரிதை இதனை, சரியை எனவுங் கூறுவர். சரிதையாவது:—சிவாலயங்களில் அதிகாலையில் திருவலகிடல், திருமெழுக்கால் மெழுகல், திருவிளக்கிடல், சுத்தஞக நந்தனவனத்திற் சென்று தெரிந்து புஷ்பம் எடுத்தல், தேமாலைகட்டி ஈசன் திருமேனியிலணிதல், தேவார திருவாசகம் பாராயணஞ்செய்தல், வில்வம்வைத்துப் பயிராக்குதல், விபூதி ருத்திராக்ஷம் காஷாயம் இலிங்கம் பஞ்சாட்சரம் என்னும் முத்திரைகளில் ஏதேனும் ஒரு முத்திரை தரித்த அடியார்களைக் கண்டால் பரம்பொருளை வழிபடுதல்போன்று வந்தனை வழிபாடு செய்தல், சிவாலயம் சாவடி சத்திரம் ஆகிய இவைகளைப் புதிதாகப் புதுப்பித்தல், தினந்தோறுங் கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்தல், ஆலயங்களி லிங்கப் பிரதக்ஷணஞ்செய்தல், அடியளந்து நடத்தல், நூற்றெட்டு ஆயிரத்தெட்டென்னுந் தொகைப்படி பிரதக்ஷணஞ் செய்தல் முதலானவைகளாம். கிரியையாவது-சந்தனம் புஷ்பம் தூபம் தீபம் நைவேத்தியம் ஆகிய ஐந்தும், கோசலம் கோமயம் பால் தயிர் நெய் ஆகிய ஐந்தும், வாழைப்பழம் எலுமிச்சம்பழம் நாரத்தம்பழம் நெல்லிப்பருப்பு இளநீர் ஆகிய ஐந்தும், மற்றும் வேண்டுவனவாகிய பூஜாதிரவியங்களை யெல்லாம் சேர்த்து, ஆத்மசுத்தி பூசுத்தி திரவிய சுத்தி மந்திரசுத்தி இலிங்கசுத்தி ஆகிய பஞ்சசுத்தியும், சவுரபூஜையுஞ் செய்து, சிவத்தியானம்பண்ணிப் பஞ்சப்பிரம்ம ஷடங்கந்யாஸ பஞ்சாக்கர மந்திர உச்சாடனத்தால் ஆவாகன ஆஸ்தாபன சந்நிதாபன சந்நிரோதன சகளீகரண பரிமீகரண அவகுண்டன தேனு யோநி அமூர்த்தீகரண லிங்க முத்திராம்பரதரிஸ் என்று திக்குபந்தனுதி மந்திரக்கிரியா பாவனைகளைக் குறைவில்லாமற் செய்து, ஆதனமுத்திரையை மூலத்தினுலும் அஷ்டபுஷ்பத்தினுலும் அருச்சித்துப், பீடத்துவார குருபூசைகளும் ஈசானுதி முதலாவரணமும், அநந்தாதி இரண்டாமாவரணமும், நந்தியாதி மூன்றுவரணமும், இந்திராதி நான்காவரணமும்,வஜ்ராதி ஐந்தாமாவரணமும், அந்தந்தத் தேவதா பாவனையுஞ் செய்து, வில்வத்தினுல் நூற்றெட்டு ஆயிரத்தெட்டு என்னும் நாமங்களை உச்சரித்து அருச்சித்து ஆனந்தத்துடனே தோத்திரமும் இன்பமாக ஓமமும்செய்து, முறைப்படி செய்த பூஜையில் தனக்கொரு போகத்தையுங் குறியாமல் நிஷ்காமமாக சிவாற்பிதஞ் செய்து வருதலாம். யோகமாவது-கடவுளிடத்து ஒரேமனதாயிருத்தல். அஃதாவது: மனம் பாக்கி விஷயங்களிற் செல்லாது ஒன்றின்கண் நிற்றலாம். இவ்யோகாப்பியாசத்தைச் செய்யும்போது உசுவாச நிசுவாசங்களை அடக்கி, சுழுமுனு மார்க்கத்திலே பிராணவாயுவைச் சலன்முற நிறுத்தி, விஷயங்களின் வழி மனதைச் செல்லவொட்டாது மீட்டு, முக்கோணவடிவாய் மூலாதார முதலிய வாறுதாரங்களின் தன்மையை யறிந்து

*கருமமும்யோகந்தானுங்கரணத்தைப்புனிதமாக்கிப்*
*பொருமிடர்வாயிரேறும்புக்குழல்கறங்குபோலத்*
*தெருமராதுண்ணிறுத்துந்தெளிந்தவக்கரணந்தன்னு*
*ணிருமலனுகுமீசனித்தனென்றுணர்வுதிக்கும்.* 70

*நித்தியனிமலனென்னுநினைவுறினனித்தமாகிப்*
*பொய்த்தழியுடம்புடம்பைப்பொருந்தியபொருள்வெறுத்து*
*மெய்த்தருள்குரவன்றன்னைவிரும்பினன்சென்றுசார்ந்து*
*தத்துவமுதறிநின்றதனியறிவினையேகாணும்.* 71

*புலன்களையொழித்தபோதேபொறிகளும்பூதமைந்தும்*
*கலங்குறுகரணநான்குங்கலாதியுஞ்சுத்தமைந்தும்*
*விலங்குறுமடியில்வைத்தவெறுங்குடந்தள்ளின்மேன்மேன்*
*மலங்குறவொருங்கடுக்குமட்கலம்விழுதலேபோல்.* 72

---

(69-வது பாடலின் தொடர்ச்சி)

அவ்வாறு தாரங்களில் எழுந்தருளச்செய்த மூர்த்திகளைத் தியானித்து, படிப் படியே பிரமரந்திரத்திற் சென்று ஆண்டுள்ள நாகலிங்கப்பூவை மலரச்செய்து, அதன் கேசாக்கிரத்துள்ள சந்திரமண்டலத்தை மூலாக்கினியால் இளகப் பண்ணி, அவ்வழித்தாக வொழுகும் அமுதத்தை உடல்முற்றும் நிரப்பிக் கடவுளைத் தியானித்தலாம்.

(70) கரணம்-அகக்கரணம் புறக்கரணம் என இருவகைப்படும். அவை கள் ஞானேந்திரிய பஞ்சகம், கருமேந்திரிய பஞ்சகம், அந்தக்கரண சதுஷ்டயம் எனச் சொல்லப்பட்டனவாய் ஞானேந்திரிய பஞ்சகமும் கருமேந்திரிய பஞ்சகமும் புறக்கரணமாயு மிருக்கும். சுரோத்திரம் துவக்கு சக்ஷு சிங்ஙுவை ஆக்கிராணம் என்பவை ஞானேந்திரிய பஞ்சகம். வாக்கு பாணி பாதம் பாயுரு உபத்தம் என்பன கருமேந்திரிய பஞ்சகம். மனம் புத்தி சித்தம் அகங்காரமென்பன அந்தக்கரண சதுஷ்டயம். விஷயவறிவும் கிரியையும் உண்டாவதற்கு இவைகள் ஏதுவாக விருத்தல்பற்றிக் கரணங்கள் என்று பெயர்பெறும்.

(72) புலன்-சப்தம் ஸ்பரிசம் ரசம் ரூபம் கந்தம். பூதமைந்து - பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம். கலாதியாவது-நாதம் பிந்து கலை. அஃதாவது: வெண்கலமணி அடித்தபின்பு அதனின் றெழுங் கலீரென்னும் பொதுச் சத்தம் போன்ற தொடர்ச்சியாகிய சத்தநாதமும், அநுஸ்வாரத்திற்குப் பின்னருண்டாகும் தொனியும், மேற்குறித்த நாதத்தின் ஏகதேசங் கலை எனவுங் கூறுவர். மற்றும் பிந்துவைப் புத்தியாகவும், நாதத்தைத் தூலதேகப் பிராண வாயுக்களின் சப்தமென்றும், ஆன்மாவின் பிரதிபிம்பமே கலை எனவுங் கூறுதலுண்டு. சுத்தம் ஐந்து - கலப்பற்றது, குற்றமற்றது, சுயம், உண்மை, பொறிக்கறி.

இந்தியமோரொன்றாய்விட்டிடின்மற்றையொன் றுசாரு
முந்தியமனமழிப்பமுற்றும்போமணியபாம்பி
னைந்தலைகளினுளொன்றையரிந்திடின்மற்றொன்றாலஞ்
சிந்திடுமிடறரிந்தாற்றீர்ந்திடுமொருங்குமாதோ. 73

ஆதலான்மனமடங்கிலங்கலிங்கங்கடம்முட்
பேதமோவபேதமோவென்றழிவுறபித்துநீங்குந்
தீதிலாயென்றியம்பிச்சித்தராமற்குநாவா
லோதொணாவுணர்வினுண்மையுணர்த்தினன்குருகுகேசன். 74

மனிதருரகர்சித்தர்வானவர்கணங்கடம்முண்
முனிவருளென்போனின்றன்முழுதருள்பெற்றாரில்லை
யினியெனைநிகர்வார்யாவரென்றருட்குரவனார்தம்
பணிமலரடியில்வீழ்ந்துபணிந்தனன்சித்தராமன். 75

இப்பரிசருளினாலேயிராமனுக்குபதேசித்துச்
செப்பருமவன்குற்றேவல்செய்யியவுளமகிழ்ந்து
கைப்படுமமிர்தமன்னகருணைவாரிதியிருந்தான்
றுப்புரவமைந்துசீர்சால்சொன்னலாபுரத்துமாதோ. 76

பதின்மூன்றாவது

சித்தராமையர்கதி முற்றிற்று.

---

கதி 13 - க்கு திருவிருத்தம் - 724.

---

(73) இந்தியம்-மெய் வாய் கண் மூக்கு செவி.

(74) பேதம்-மாறுபாடு. அபேதம்-மாறுபாடில்லாதது. பித்து-பைத்தியம்.

(75) உரகர்-நாகலோகத்தவர். கணம்-கூட்டம்.

பதினொன்காவது

# வசவண்ணர்கதி

வேறு

சித்தராமனோடாரியனல்லமதேவன்
பத்தராகியபயிர்செய்கல்யாணமாம்பழனத்
துய்த்தநீரெனும்வசவனையுழவரிற்கண்டு
மெய்த்துமார்வமங்கடைந்தமையாமினிவிரிப்பாம். 1

அன்னமீனுடனிகழ்வறக்கொண்டமையாமற்
செந்நெலார்வயறீப்பசியாற்றுபுசிறந்த
சொன்னலாபுரந்தவஞ்செய்தசெதன்றுவான்றுதிப்ப
வென்னையாளுடையல்லமனிருந்தருளுளில். 2

சந்தமேவுகல்யாணமாநந்தனந்தன்னி
னந்திநாண்மலர்ப்புகழ்மணநயந்தசொல்வளியால்
வந்துகாதெனுநாசியிற்புகமிகமகிழ்ந்த
துந்துவார்திரைக்கருங்கடலுடுத்தபேருலகம். 3

முக்கணாயகன்புகழெனுமூரலுண்பதற்குத்
தக்கதீஞ்சுவைக்கறியெனச்சமைந்ததுவசவன்
மிக்கவான்புகழுவற்றினைமாதவர்விரவித்
துய்க்குநாவினிற்றுய்த்தனர்பவப்பசிதொலைய. 4

விலக்குமுற்பவச்சித்தராமற்குமுன்விளம்பு
மிலக்கணத்தினுக்கருணந்தியெனுமிலக்கியத்தைக்
கலக்கமற்றறிந்திடுவதற்குதாரணங்காட்ட
மலக்கமற்றநம்மல்லமன்றிருவுளம்வலித்தான். 5

---

(1) பழனம்-கழனி. உழவர்-பயிர்செய்வோர். ஆர்வம்-விருப்பம்.

(2) தீப்பசி-கொடிய பசி. வான்-தேவலோகத்துள்ளவர்; இது இடவாகு பெயராகி வானவரை யுணர்த்திற்று.

(3) சந்தம்-அழகு. நாண்மலர்-அன்று பூத்த மலர். வளி-காற்று. நாசி-மூக்கு.

(4) மூரல்-சோறு. பவப்பசி-பிறப்பாகிய கஷ்டம்.

அடியவர்க்கெளியானெனுமவனெமதகத்திற்
குடியிருக்குமவ்விராமனையுடன்கொடுகுறிலோர்
நெடிலடுத்தநன்னிரையெனவந்நகர்நீங்கிக்
கொடிமதிற்கலியாணமாநகர்வழிக்கொண்டான். 6

நறும்பழஞ்செறிதனியிடமொய்த்திடநண்ணு
மெறும்பொழுங்கெனவரனடியவர்திரளெழுந்து
மறந்தும்வெஞ்சமண்குண்டரையிணங்குருவசவ
னுறும்புரம்புகவிருவருங்கண்டுளமுவந்தார். 7

தம்பிரானருள்வசவனுக்கியவறச்சாலைக்
கும்பவாசநீர்முதலியவேண்டுவகொண்டு
வம்புலாமலர்வனத்தயர்வுயிர்த்துநல்வழிசேர்ந்
தெம்பிரானடியவர்திரளேகுதல்கண்டார். 8

பாண்டின்மாவளஞ்சிவிகையூர்ந்தேகுனர்பரிந்து
வேண்டுமாறுகொள்வேடத்தர்துறந்தவர்விரத
ரீண்டுமாறுகண்டுவந்துசென்றெழிலலங்கார
காண்டமாமெனுமங்கலபுரத்தினைக்கண்டார். 9

கண்டுசெல்லுமப்போதிலந்நகர்வளங்கருத்திற்
கொண்டவல்லமன்றிருவுளமிகக்களிகூர்ந்து
பண்டைநல்லிசைப்புலவர்சொல்விராமனைப்பார்த்து
மண்டுபல்வளங்காட்டுவன்றனித்தனிவகுத்து. 10

தனைவிரும்பிவந்தடைந்தவர்தம்மைமுன்வெறுத்த
தினகரன்கதிர்விரும்புறச்செய்தளித்திரள்க
ணனிவிருந்துணுங்கடிமலர்சுமந்துபொன்னகரார்
கனிவிரும்புதண்பொழினிகழ்வதையெதிர்காணாய். 11

---

(6) குறிலோர் நெடிலடுத்த நன்னிரை-குறிலும் நெடிலும் இணைந்து வந்த நிரையசையைப்போலவென்று செய்யுளிலக்கணத்தில் கூறியதுபோல இணைந்து நிரைந்து சென்றார்கள். (7) செறி-நெருங்கிய. குண்டர்-சமணர்.

(8) வம்பு-வாசனை. (9) அலங்காரகாண்டம்-அலங்காரங்களுக்கெல்லாம் இருப்பிடமாகிய கலியாணபுரமென்க.

(10) பண்டை நல்லிசைப்புலவர்-நக்கீரர், கபிலர், பரணர், மாணிக்கவாசகர், திருஞானசம்பந்தர், சுந்தரர், கம்பர் முதலியவர்களாம். மண்டு-நெருங்கிய.

(11) தினகரன் - தினத்தைச்செய்வோன்; இது சூரியனுக்குக் காரணப் பெயராயிற்று. பொன்னகர்-தேவலோகம்.

பூவினோடுசெங்தேன்மழையொழிவறப்பொழியுங்
காவினோடுவள்ளிதழவிழ்ந்தொழுகுதேங்கமல
வாவியோடுநல்லிசைபயிலஞ்சிறைவண்டு
பாவினோடுவண்குழலெனத்திரிதலைப்பாராய். 12

கடிமலர்ப்பசுந்தேன்றுளிபிலிற்றுபைங்காவைக்
குடியிருக்குமவ்வளவெனக்கொண்டுவெண்குருகு
மடியடுத்தவரெனவிருந்திளங்கயல்வரலு
நொடியினிற்கவர்தண்பணைமருதமுநோக்காய். 13

குதிரையங்கதிர்மணிக்குடநீர்குடிப்பதுபோ
லதிரிளங்கமஞ்சூல்வளைதவழ்வயலணிநெற்
கதிர்வளைந்துசெந்தாமரைவாயுறக்கவிழ்ந்து
நுதிபொருந்தியவழகையுமையனீநோக்காய். 14

இங்குத்தன்னுள்வாழ்பயிற்சியாலிறந்துயிர்போயு
மங்குப்பொன்னெயில்வட்டத்துளிருண்மனத்தமணர்
தங்கற்குன்னுமிப்பொன்னெயில்வட்டமுஞ்சடைமேற்
கங்கைப்பெண்ணமர்பரனடிக்கன்பநீகாணாய். 15

திறந்துமூடுநின்னுதலிமைவிழியெனச்சேர்ந்து
பிறங்குமாமணிக்கதவிருபுடையினும்பெற்றுச்
சிறந்தகோபுரவாய்தலுமலர்மிசைத்தெய்வம்
பறந்துநாடியமுடியிறைக்கன்பநீபாராய். 16

இலங்குநீறொனுங்கவசமிட்டக்கமென்றியம்பு
மலங்கல்வாகைவேய்ந்தஞ்செழுத்தத்திரமடுத்த
நலங்கொள்வீரராம்பத்தர்தமறுகமணவுளார்
கலங்குபாசறைபோன்றெதிர்நிகழ்வதுகாணாய். 17

---

(12) வள்ளிதழ்-வெண்மையான பூவிதழ்கள். வாவி-தடாகம்.

(13) பிலிற்றல்-துளித்தல். வெண்குரு-நாரை. பணை-நிலம்.

(14) சூல்வளை-கருப்பங்கொண்ட சங்கு. நுதி-முனை.

(15) இருள்மனம்-அஞ்ஞானத்தையுடைய மனது.

(16) மலர்மிசைதெய்வம்-பிரமன்.

(17) இலங்கு-பிரகாசிக்கின்ற. நீறு-விபூதி. அக்கம்-உருத்திராட்சம். அலங்கல்-மாலை. வாகை-வெற்றிபெற்றவர் சூடும் மாலை. ஐந்தெழுத்து-பஞ்சாக்கரம். பாசறை-அரசர்கள் உயுத்தகாலத்தில் இரவில் தங்குவதற்காக வமைக்கப்பட்டதொரு இடம்.

கட்டுவார்சடைக்கண்ணுதல்பூசனைக்கரும
மட்டுமாதவர்தீப்பசியாற்றுறுமறமுள்
ளிட்டுமேற்புறங்கண்டவர்கொடியனவென்னப்
பட்டுமாளிகைபற்பலநிகழ்வனபாராய். 18

பொறித்தவாழையின்கனியினைக்கடைத்தலைபொருந்தக்
குறித்திடாதுணவெனக்கறித்தலகுநோய்கொண்டு
நிறுத்துவாழையின்கனியுமச்செய்கையாய்நினைந்து
கறித்திடாதமர்செம்முகப்பசுங்கிளிகாணாய். 19

வள்ளனல்வசவன்புகழ்வாயினால்வழுத்தா
தெள்ளுநம்வல்லமண்குண்டர்தம்பிறப்பினுமிழிப்பில்
புள்ளுநல்லனவெனவிளம்பூவையோடிருந்து
கிள்ளையவ்வசவன்புகழ்சொல்வதுகேளாய். 20

என்றுகூறியவ்விராமனைமகிழ்வுசெய்தின்ப
மன்றல்வீதியில்வசவநாயகன்றிருமனைமுற்
குன்றுபோலுயர்கோபுரவாய்தலைக்குறுகச்
சென்றுமேவினனெம்மையாளல்லமதேவன். 21

தொடர்த்துளைக்கைவெண்மருப்புரற்காற்கருந்தோற்றோ
லுடுத்தமெய்ப்பான்கொலைகுறித்தெடாமழுவொப்ப
வடைத்தலைக்குறித்திடாதசெம்மணிக்கதவடுத்த
கடைத்தலைக்கண்மாதவர்குழாநெருங்குதல்கண்டார். 22

வேறு

அறுசுவையடிசிலுண்பானடைகுவாரடிசிலுண்டு
மறுகிடை வருவார்சான்றோர்வைகியவிடங்கணுடிக்
கறியொடுமருவுசோற்றுக்காவடிசுமந்துசெல்வார்
நறுமலர் சுமந்துதண்டநாதன்பூசனைக்குப்போவார். 23

செஞ்சரணிறைஞ்சிநல்குஞ்செழுந்துகில்கிழித்துக்கீழ்கொண்
டெஞ்சியமிகையென்றெண்ணியிட்டவணகன்றுபோவா
ரஞ்சுடர்மணிப்பசும்பொன்னணிதுகிலலங்கல்சாந்தம்
வஞ்சியர்தமக்களிப்பத்தருகெனவாங்கிச்செல்வார். 24

(19) பொறித்த வாழையின் கனி - கற்பிதமாகச் சித்தரித்துவைத்த வாழைக்கனி. நிறுத்த வாழைக்கனி-இயற்கையாய்ப் பழுத்த கனி.

(20) பூவை-நாகணவாய்ப் பறவை. கிள்ளை-கிளி.

(22) துளைக்கை-துதிக்கை. மருப்பு - தந்தம். அறுசுவை-தித்தித்தல், கூர்த்தல், துவர்த்தல், கார்த்தல், கைத்தல், புளித்தல் முதலியனவாம்.

நிந்தைசெய்தெமையெதிர்ந்தநெறியில்புன்சமணர்தங்கண்
மைந்தினையறியச்சொல்வம்வசவனுக்கென்றுசெல்வார்
நந்தியைவணங்கவேறுநகர்தொறுநின்றுபோந்து
சிந்துரம்வயமாவம்பொற்சிவிகைவிட்டிழிந்துசெல்வார். 25

சீர்கெழுவசவன்பாடத்திவவியாழ்கொண்டுசெல்வா
ராகிவின்மதனைவென்றோனடியவர்குழாநெருங்கு
மேர்கெழுமணிப்பசும்பொனிருங்கடைநோக்கிநின்று
ரோகையோடலமனுமத்தொருவனுமிராமன்றானும். 26

ஆயிடைநின்றோர்தம்மையப்பணப்பெயரின்மிக்க
தூயவனெதிர்கண்டோகைசொல்லுவலையற்கென்று
கோயிலுளமலபூசைகுழாத்தொடுசெய்யும்போதிற்
போயினன்வசவனோடுபுகழ்ந்திதுபுகலலுற்றான். 27

மாதவரிருவரையமழைமதர்நெடுங்கண்மங்கை
பாதியனுருவிரண்டுபடைத்துவந்தனனேயென்னச்
சோதியதாளக்கோவைத்தோரணவாய்தன்முன்னம்
வீதியினின்றுரென்றுவிளம்பினன்றவத்தின்மிக்கான். 28

என்றவனியம்பநந்தியெனும்பெயர்க்கருணைக்குன்றங்
கன்றினைநினைந்துநெஞ்சங்கரைந்துவந்தணையுந்தாய்க்கிங்
கொன்றொருதடையுமுண்டோவொல்லைநீதருதியென்னச்
சென்றவனமலனோடுசித்தராமனைவணங்கி. 29

பரசிவலிங்கபூசைபண்ணியபயனேயுங்கள்
வரவெனவுளமகிழ்ந்தான்வசவனீர்வருகவென்ன
வெருவொடுமுளமுளைந்துமெய்த்தவன்விளம்பவெங்கள்
குருபரன்முனிவான்போலக்குறுநகைகொண்டுகூறும். 30

அரசியலடைந்தார்தம்பாலையமேற்றருந்துகின்றோர்
வருசெயல்வரிசையன்றமறித்துநீபோதியென்னு
வுரைசெயவமலனப்பனுளம்வெரீஇக்கடிதுமீண்டு
வரைசெயும்வயிரத்திண்டோள்வசவநாயகற்குச்சொன்னான். 31

---

(25) மைந்து-வலிமை. சிந்துரம்-யானை. வயமா-வெற்றிதரும் குதிரை. சிவிகை-பல்லக்கு. (26) திவவு-தடவு. குழாம் - கூட்டம், ஓகை-மகிழ்ச்சி. (27) ஓகை-மகிழ்ச்சிதரும் காரியம். (28) மதர்-அழகிய. தாளக்கோவை-முத்து வடம். (29) ஒல்லை - சீக்கிரம். (30) குறுநகை-புன்சிரிப்பு. (31) ஐயம்-பிச்சை.

அல்லமன்புகன்றமாற்றமப்பணன்சென்றுநின்று
சொல்லலுந்துணுக்கென்றுள்ளஞ்சோற்றளர்ந்துடல்வியர்த்துப்
புல்லவந்தணையுந்தாய்முன்பொருதுதும்பறுத்திட்டோடு
நல்லிளங்கன்றுபோன்முன்னன்செலாதிருந்தேனென்று. 32

கரைந்துகுமனமுளைந்துகவலைகொண்டழுங்கநந்தி
பெருந்தகைமாச்சிதேவன்பெருங்கடற்பிறந்தசாவா
மருந்துதன்னெதிர்கிடைத்துமற்றதைவாரிக்கையா
லருந்துறவலசுவான்போலாயினைநீயுமென்றான். 33

பெருந்தகைமாச்சிதேவன்பேசுசொல்விளக்குத்தூண்டுந்
துரும்பெனவுதவச்செம்பொற்றூணெனுந்தோளான்மாழ்கி
யிருந்தவப்பிழையென்மேற்றேயென்றடியிறைஞ்சியொய்யென்
றருந்தவரொடுபுறப்பட்டல்லமனருகுவந்தான். 34

என்குணமறமேயாகியானதிற்றிரிதலில்லை
னின்குணமருளேயென்றானீயதினிற்றியெந்தாய்
புன்குணமகவின்றீமைபொறுத்தருள்செய்கையென்னுந்
தன்குணம்விடுத்தொழிக்குந்தாய்வியனுலகிலுண்டோ. 35

சூத்திரப்பாவையானசூத்திரிநீயருட்கண்
பார்த்தெனைக்குறையகற்றிப்பணிசெயக்கோடியென்று
வாய்த்தநற்குரவன்செந்தாமரையடிமிசைவிழுந்தா
னேத்திமெய்ப்பத்திநீத்தமெனப்படும்வசவதேவன். 36

நிலமகள்பொருதுதள்ளினிறுத்துனர்யாவரோதை
மலிகடல்புரளுமாயின்மறிப்பவருளரோவெங்க
டலைவநீமுனிவையாயிற்றடுப்பவருலகில்யாண்டு
மிலையிலையருள்செயெந்தாயெனச்சென்னவசவன்றாழ்ந்தான். 37

சொற்றிடுங்குதலைச்சொல்லிற்சொற்றிறந்தெரிதல்போலிச்
சிற்றிளங்குமரனன்புசெயவடியிடுமுனோக்கேல்
சற்றுநின்கடைக்கண்வைத்துத்தண்ணளிபுரிகவென்று
நற்றவமாச்சிதேவனங்குரவனைப்பணிந்தான். 38

---

(32) மாற்றம்-சொல். தும்பு - கயிறு. (33) உளைந்து-வருத்தப்பட்டு. அழுங்க-இரங்க, அழ. அலசுவான்-வருந்துவான். சாவாமருந்து-அமுதம். (34) மாழ்கி-சோம்பி. ஒய்-சீக்கிரம், இது விரைவுக்குறிப்புச்சொல். (35) மகவு-பிள்ளை. வியன்-பெரிய. (36) சூத்திரப்பாவை-கயிறுகட்டி ஆட்டும் பொம்மை. சூத்திரி-ஆட்டுகிறவன். (37) ஓதை-ஓசை, சப்தம். மறிப்பவர்-தடுப்பவர். (38) குரவன்-ஆசிரியன், குரு.

உரைமனமெய்யொருங்கியுன்பணிசெய்யவல்லோன்
றரைமிசையிவனலாதுதாரொருவரையுங்காணு
மருள்செயவேண்டுமென்னவல்லமனடிபணிந்தான்
கிரிமகள்கொழுநற்கன்பன்கின்னரப்பிரமனம்மா. 39

எமையெல்லாமடிமைவேண்டினிவன்பிழைபொறுத்தியென்று
வமையுலாம்பணைமென்றோட்சேயரிமதர்மழைக்கட்செவ்வா
யுமைமணாளனையுவந்தவொண்டவரெலாம்பணிந்தார்
சமையுளாருணருமெங்கடம்பிரான்சாற்றலுற்றான். 40

சொல்லியசொற்கள்கற்றீர்சொற்றவங்நெறியினிற்கு
நல்லியலில்லைநும்பானவிறருமாற்றமொன்று
புல்லியசெயலொன்றாகப்பொருந்துநர்தம்மிலார்க்கும்
பல்லியமொடுநடிக்கும்பாதரேபெரியராவார். 41

ஆதரவிலையேல்வேண்டுமறத்தினிற்பொருளோர்செம்பொற்
பூதரவளவளித்தும்பொருளழிவளவேயாகு
மாதரவுளதேனல்கும்பொருளணுவளவென்றாலும்
பூதரமெனவளர்ந்துபுண்ணியப்பொருளளிக்கும். 42

துறவறமனையறஞ்சீர்தூய்மைநற்கல்விநல்லோ
ருறவொடுமகங்கடானமொண்டவம்விரதம்பூசை
யறிவிவையனைத்துமில்லையாதரவில்லையாயிற்
பெறுவனமெய்வருத்தம்பெரும்பொருளழிவுமாதோ. 43

ஆதரவுடையான்செய்யுமல்லவுநல்லவாகு
மாதரவிலாதான்செய்யுநல்லவுமல்லவாகு
மாதரவதனுலாவிக்கருந்துணையின்பமுத்தி
யாதரவலாதுவேறொன்றளித்திடக்கண்டதுண்டோ. 44

ஆதலாலன்பினுஞ்சோல்லகமகிழ்வினைசெயாவென்
றோதினனடியர்தீமையொழித்தருடொழிலினின்றோன்
காதலால்வணங்கினோர்நின்கருணையாலன்றியாங்க
ளேதினனல்லராவேமென்றடிதொழுதுநின்றார். 45

---

(39) கிரிமகள்-பருவதராஜன் புதல்வியாகிய பார்வதி.

(40) அமை-மூங்கில். சமையுளார்-பொறுமை யுள்ளவர்கள்.

(41) இயல்-சுபாவம். பாதர்-கூத்தாடிகள்.

(42) பூதரம்-பொன்மலை. பூதரமென வளர்ந்து-பூமியைத் தாங்குகின்ற இமயமலைபோல வளர்ந்து.

காஞ்சிரங்கனி தின்றாங்குக்கடையனேன்பிழைபொறுத்தாய்
தீஞ்சுவையமிர்தமன்ன திவ்வியகறியிற்குற்ற
மாஞ்சுவையறைதல்போலிவ்வன்பனைச்சீறேலென்று
பூஞ்சரண்மிசைவணங்கிப்போற்றினன்சித்தராமன். 46

அடைக்கலமென்னையாளாயண்ணலேயென்றுநந்தி
கடிக்கமலங்கள்வென்றகான்மிசைமீண்டுந்தாழ்ந்தான்
விடுத்திடேலென்றுசென்னவசவனும்வீழ்ந்திறைஞ்சித்
தொடிக்கரந்தொழுதானன்பர்துதித்தனர்சூழ்ந்துகொண்டு. 47

அல்லமனெனுமெங்கோமானருட்கடைக்கண்வைத்தைய
சொல்லுவனெழுதியென்றுதுணைக்கையாலெடுத்தணைத்து
நல்லருள்புரிந்துதண்டநாயகன்றிருமடத்து
ளெல்லையிலடியர்சூழவினிதெழுந்தருளினனால். 48

பதினான்காவது

வசவண்ணர்கதி முற்றிற்று.

---

கதி 14 - க்கு திருவிருத்தம் - 772.

---

(46) காஞ்சிரங்கனி-எட்டிப்பழம். பூஞ்சரண்-அழகிய திருவடிகள்.

பதினைந்தாவது

# மருளசங்கரதேவர்கதி

வேறு

தாணுவினுயர்பிரசாதகுண்டத்திற்
காணருமருளசங்கரனைக்கண்டருட்
பூணணியல்லமன்போதநல்கிய
மாணுறுநெறியினைவகுத்துக்கூறுவாம். 1

மாதவரெண்ணிலர்மருங்குசூழ்தர
வாதுலரெதிர்பொருளாகவல்லம
நாதனையறிவறிநந்திகொண்டுத
னேதமின்மனையிடையெய்தன்மேயினன். 2

அவத்தைகள்பற்பலவகன்றுமெய்ப்பர
சிவத்தினையடைபவர்செய்கைபோற்கடை
தவப்பலகடந்துபோய்ச்சாதகுண்டத்தை
யுவப்புடனடைந்தனனுப்பிலல்லமன். 3

உயர்பிரசாதகுண்டத்தினுண்கரை
மயன்மலிபித்தரின்மருளசங்கரன்
பயிலுதல்கண்ணுறீஇப்பரமயோகிதன்
னியலினையுணர்ந்தனனெம்பிரானரோ. 4

கண்டருளமலனைக்கண்டுதானெதிர்
வெண்டிரையமுதினைமிடியன்மேவியே
யுண்டனனெனமகிழ்ந்தோடிவீழ்ந்தனன்
வண்டிருவடிமிசைமருளசங்கரன். 5

---

(1) தாணு - சிவன்; ஈண்டு சிவனடியார்களைக் குறித்தது. மாண்உறு நெறி-மாட்சிமைப்பட்ட ஞானோபதேச மார்க்கம்.

(2) மருங்கு-பக்கம். ஆதுலர் - தரித்திரர். அறிவறி - எல்லாவற்றையும் அறிகின்ற அறிவை யறிதல். ஏதம்-குற்றம்.

(3) அவத்தைகள்-ஜாக்கிரதை, சொப்பனம், சுழுத்தி, துரியம் முதலியனவும் ஜீவனுக்குண்டாகும். அஞ்ஞானம், ஆவரணம், விட்சேபம், பரோட்ச ஞானம், அபரோக்ஷஞானம், சோகநிவர்த்தி, நிரங்குசதிருப்தி என்பனவுமாம். இவை விரிப்பில் பெருகும்.

வணங்கியவறவனைவந்தெடுத்துமெய்
யணைந்தெழுமுவகையோடருள்செய்தல்லம
ணிணங்குறவருணிலையிராமற்பார்த்தவன்
குணங்களைவியந்திதுகூறன்மேயினான். 6

குண்டமேவுறுபிரசாதங்கொள்ளைகொண்
டுண்டுவாழ்மாதவனுண்மைத்தன்மையைத்
தண்டநாயகன்முதற்சரணர்யாவருங்
கண்டிலர்யாரினிக்காணவல்லவர். 7

சரிதையொண்கிரியைகாறடுக்கும்யோகிவை
புரிபவர்தம்மையப்புரியுஞ்செய்கையாற்
றெரிதரலாகுமோர்செயலுமின்றிவா
ழரியநன்ஞானியையறியலாகுமோ. 8

நலமுறுமோர்சிவஞானியில்லில்வாழ்
நிலையறமாகினுநீத்துநிற்குமோர்
தலையறமாகினுந்தரித்துஞாலமே
விலைமறைகாயெனவிருக்குமென்பவே. 9

வல்லனென்றிருப்பினுமிருக்கும்வன்மையோன்
றில்லனென்றிருப்பினுமிருக்குமெள்ளுறப்
புல்லனென்றிருப்பினுமிருக்கும்புண்ணிய
நல்லனென்றிருப்பினுமிருக்குஞானியே. 10

அறிவறிஞானியாலன்றிவன்பவ
மறிவுறுகருமியான்மாய்வுறுதுகா
ணெறிகதிரிரவிவந்தெழுந்திடாவிடிற்
செறியிருளகலுமோசித்தராமனே. 11

சங்கரமுனிநிலைதனைக்கண்டாய்கொலென்
றெங்குருபரன்சொலவிராமன்கைதொழு
திங்கிவன்மருளரிலிருந்ததன்மையென்
னங்கணவறைகெனவறைதன்மேயினான். 12

வேறு

தொழிலான்முயன்றுநுகர்வமெனிற்றயரொன்றுயிர்க்குவிளையுமென
வொழியாவமலசரமூர்த்தியுண்டமிச்சினுகர்வமெனிற்

---

(8) யோகு-தந்திரம். (13) மிச்சம்-சேஷம். நுகர்தல்-அநுபவித்தல்.
(13) "மிச்சநுகர்வமெனிற்" என்றும் பாடம்.

பழியா துமிலையகன் றுபோம்பவமுமென்னப்பிரசாதக்
குழியான தனையகலாமற்கொண்டிங்கிருந்தான் குணமிக்கான். 13

பந்தமகன் றசிவபத்தர்பாதம்விளக்கும்புனற்குழியில்
வந்துபிறந் துமூழ்கிய தில்லைகும்புழுவின்பெரும்பேறு
முந்துகங்கைமுதலவாமுற்றும்படிக் துதீவினைகள்
சிந்துமந்தணுளருமேசேராரென்றுமறைசாற்றும். 14

தாய்க்குவமுவின்மகளிர்க்குத்தந்தைதனக்குப்பசுவிற்குச்
சேய்க்குமறையோர் தமக்கிடர்செய்தீர்வில்கொடியபாதகமும்
போக்குமிமைப்பிற்கரணத்தைப்புனிதமாக்கிச்சிவமாக
வாக்குமரன் றன்பிரசாதமாயினதற்குநிகருண்டோ. 15

பசிக்குமருந்துமாய்வீடுபயக்கும்வண்மைசேர்ந்துபவ
மொசிக்குமரன் றன்பிரசாதவூதியந்தா னுணர்ந்திங்கு
வசிக்குந்தகைமைசங்கரற்கேவருவதன் றிப்பசிக்குணவு
புசிக்குமனிதர் தமக்கென்றும்பொருந்தாதென்றனெம்பிரான். 16

நின்னையறிவன்சங்கரனேநீயேயவனையறிகுவாய்
பின்னையுலகில்யாரறிவார்பேசிற்பாம்பேபாம்பின்கா
றன்னையறியுமெனவமலன்றாட்டாமரையின்கீழ்ப்பணிந்தா
னென்னையடிமையாவுடையவிராமனென் னுமிணையில்லான். 17

அம்பொன் வைப்பின்மீதிருந்துமறியா தல்லற்படுவான்போ
னம்பன்மருளசங்கரனைநானேவறியா திருந்தழிந்தே
னிம்பர்மருவிநிரஞ்சனநீயெனக்குக்காட்டித்தந்தனையென்
றும்பர்பரவுமல்லமனையுவந்துபணிந்தானருணந்தி. 18

இணங்குமிக்ககாமிதனக்கின்பமூடல்சரலிங்கம்
பிணங்கன்முத்திகாமிக்குப்பேரின்பென்பதுணர்த்தற்குக் [வின்
குணங்கண்மிக்காய்நினைச்சினந்தாங் குறையொன்றுளதோ நினக்கா
பணங்கொணிலத்திற்பரமசிவபத்திக்குவானீயென்றக்கால். 19

---

(14) பந்தம்-தளை; அவையாவன: மேலே கூறிய அவஸ்தைகளில் அஞ்ஞானம், ஆவரணம், விட்சேபம் என்கிற மூன்று பந்தநிலைகள். சிந்தும்-ஒழித்த.

(16) ஊதியம்-இலாபம்.

(18) இம்பர்-இவ்வுலகு; இதன் எதிர்மொழி உம்பர்.

(19) ஊடல்-பிணக்கு. பணம்-பாம்பின்படம்.

இங்குமருளசங்கரன்போலெண்ணிலார்நின்மனைவாய்தற்
கங்குல்பகலுமகலாமற்காப்பரென்னினின்முன்றில்
பங்கவினையின்வலிகடந்தபலருந்தாஞ்செய்தவப்பயனாற்
றங்குகயிலைமலையன்றோதண்டநாதவென்றமலன். 20

வெம்மையெதன்கணிகழ்ந்திடினும்வெந்தீக்குணமென்பதுபோல
மும்மையுலகின்யாண்டேனுமுளைக்கிற்பத்தியதைநினதென்
றிம்மையுலகமியம்புமெனிலெங்கள்வசவநின்பெருமை
கொம்மையிளமென்முலைமடந்தைகூறனன்றியாரறிவார். 21

பத்திக்கடலேகுணக்குன்றேபாசப்பகையேயெம்முறவே
முத்திக்கரசேசிவானந்தமுதலேஞானமணிவிளக்கே
சித்திப்பொருளேயருணந்தித்தேவேநின்னைத்தொழுமடியார்
புத்திக்கமுதேயாவர்நினைப்போல்வாரவரையறியேமால். 22

என்றுகூறவெமையுடையானெனக்குப்புகன்றநலமெல்லாஞ்
சென்றநாளிலிலைநினதுசெந்தாமரைத்தாடொழப்பெற்ற
வின்றுதொடங்கியுளவாமென்றெந்தைநந்திவணங்கியெழ
நின்றவமலசிவசரணர்நெஞ்சமுவகைபூத்தனரால். 23

அருளான்மருளசங்கரனுக்கமரர்தாமுமறிவரிய
பொருளாகியபேரின்பவநுபூதிவிளக்கமருள்செய்தா
னுரையானினைவாலருணோக்காலுலகருணர்வைப்பிணித்தமல
விருளானதனையறமாற்றவெழுந்தஞானசூரியனே. 24

பதினைந்தாவது

மருளசங்கரதேவர்கதி முற்றிற்று.

---

கதி 15 - க்கு திருவிருத்தம்-796.

---

(20) முன்றில்-வாயல்; இது இலக்கணப்போலி. இச்சொல் இல்முன் என்று நிற்பது இலக்கணமுறை.

(24) அநுபூதி விளக்கம்-நிலையின் விளக்கம்.

பதினாறாவது

# இட்டலிங்ககதி



வேறு

*சிட்டனல்லமதேவனருளுறீஇ*
*நட்டநண்பொடுநந்தியுணர்வுற*
*இட்டலிங்கத்தியல்புபுகன்றமை*
*கட்டுவல்வினைக்கட்டறவோதுவாம்.* 1

*சங்கரற்குத்தனைநிகரின்பவீ*
*டங்களித்தருளல்லமனந்திதன்*
*மங்கலத்திருமாளிகைகட்செவிக்*
*கங்கணற்கினியாரொடுகண்டனன்.* 2

*மண்டுபேரொளிமாடத்துநாப்பணத்*
*தண்டநாதன்றவிசொன்றமைத்திட*
*அண்டநாயகனல்லமனையிடைக்*
*கண்டநோக்கங்களிப்பவிருந்தனன்.* 3

*ஆதனத்திலமர்ந்தருளல்லமன்*
*பாதமன்பொடுபன்மலர்தூயிது*
*மாதவத்தின்வலியெனத்தாழ்ந்தெழு*
*காதன்மிக்குக்கசிந்துளநந்திதான்.* 4

*அடியனேன்சிவபத்தியறிந்தமை*
*படியிலூமன்கனவெனப்பட்டது*
*முடியுமாறுமொழிந்தருளென்றுபொற்*
*றொடியுலாங்கைதொழுதுவிளம்பினன்.* 5

*கேட்டவாரியன்கேடில்சிவநெறிக்*
*கூட்டமேவுறுகொள்கையினாய்நினைக்*
*காட்டுவாருளரோசெங்கதிர்க்கிரு*
*ளோட்டுசோதியுமுண்டுகொலோவென்றான்.* 6

---

(1) கட்டற-பந்தம் அற்றொழிய.

(2) கட்செவி-பாம்பு; இது காரணப்பெயர். கண்ணையே செவியாகப் பெற்றிருப்பதால், இங்கு கட்செவிக்கங்கணர் என்பது பரமசிவமூர்த்தியைக் குறித்ததென்க. (3) நாப்பண்-மத்தி. தவிசு-ஆதனம்.

(5) படியில்-பூமியில். (6) செங்கதிர்-சூரியன்.

வள்ளலின்றெனைவந்துபுகழ்ந்தனன்
றெள்ளுதண்புனற்றேக்குமுளைத்தலைக்
கிள்ளிநின்றெறிகின்றவர்போலெனு
வுள்ளுடைந்திட்டுரைக்கும்வசவனே. 7

வேறு

இகழ்ந்தெனதூளச்செருக்கினையகற்றிலாய்
புகழ்ந்தனைவிழைபுளிக்கறியிட்டாறுநோய்
மிகுந்தெழவளர்த்தல்போலெனவிளம்புபு
தகுங்கழலிறைஞ்சினன்றண்டநாயகன். 8

அருளினனினதடியருச்சிக்கும்படி
தெருளிலாவெனக்குரைசெய்தியென்றலு
மருளறுமெனுமொருமதிநுற்கீந்தருள்
பொருளினியனைபுகறன்மேயினன். 9

புன்மாநெறிபுழுப்புள்விலங்கெனும்
பன்மையதுயர்செயும்பவங்கடப்பியே
வன்மைகொணிலமிசைமக்களாகுத
னன்மைகொளுயிர்க்கலாலரிதுநந்தியே. 10

நரர்வடிவாயினுநன்மையாற்றுறு
மரபினிலுலகினில்வருதறப்புத
லரிதுநல்லறம்புரிவழியடுப்பினு
மருவுதலரிதறம்வளர்க்குமங்கமே. 11

அறத்துறப்பெய்தினுமன்பினலறஞ்
சிறப்புறச்செய்தலிங்கரிதுசெய்யினும்
புறச்சமயங்களைப்போக்கியாகம
நெறிச்சமயங்களையரிதுநேர்தலே. 12

ஆகமம்புகனெறியடைவுறுயினுஞ்
சோகமில்சைவநற்றுறையைநன்றெனச்
சேர்குதலரிததுசேர்வுறுயினு
மேகலிங்கயிக்யருகுதலன்றெண்மையே. 13

---

(8) செருக்கு-அகங்காரம். (9) தெருள்-ஞானம். (11) மருவுதல்-பொருந்தல். (12) புறச்சமயங்கள்-உலகாயதம், புத்தம், சமணம், மீமாஞ்சை, பாஞ்சராத்திரம், பாட்டாசாரியம். ஆகமநெறிச்சமயங்கள்-சைவம், வைணவம், சாத்தம், கௌரம், காணபத்தியம், கௌமாரம். (13) ஆகமம்-வேதம்.

புண்ணியமுதிர்வினாற்பொருந்தியங்கையிற்
கண்ணுறநிகழ்வுறுசிவலிங்கத்தினை
யெண்ணியமனமுடனென்றும்வந்தனை
பண்ணியமுயல்பவன்பத்தனென்பவே. 14

ஆவுறுபிணிகெடவாவின்பால்கறந்
தாவினையூட்டல்போலாணவங்கெட
வாவியுளமலனையங்கைதந்துபின்
னாவியுளமைவுறவாக்குமாரியன். 15

கருங்கொடியிருவிழிக்கண்ணுமோர்மணி
திரிந்திடுசெயலெனத்திரிதலின்றியே
பொருந்துறுமகமொடுபுறமுந்தீர்வற
விருந்திலகுறுமருளிட்டலிங்கமே. 16

குறிபலபலமுறைகொண்டுபல்வகைப்
பொறிதொறுமருவியொண்புலனுகர்ந்துமாய்க்
தறிவருநிலையவாதாரமேவியு
நிறைவுறுமங்கையினிகழுமிட்டமே. 17

அடைந்துளவுருச்சுவையமைதியென்பன
வுடம்பொருமூன்றினுமுற்றடைந்திடுந்
தொடர்ந்துளவினைவலிதொலைத்தியானெனு
மிடும்பையிலின்பருளிட்டலிங்கமே. 18

---

(15) ஆவுறுபிணி-பசுவிற்குப் பொருந்திய நோய்.

(18) உடம்புமூன்று-தூலம் சூட்சுமம் காரணம் என்பன. அவைகளை இங்கு கூறியதின் பொருளென்னையோவெனின், சரீரத்திரயங்களின் வேறு ஆன்மாவென்பதை விளக்குவதற்கென்க. என் அங்ஙனமெனில்; தோல் இரத்தம் மாமிசம் நரம்பு எலும்பு கொழுப்பு என்னும் இவைகளால் ஆக்கப்பட்டது ஸ்தூலசரீரமென்றும் அது சொப்பனாவஸ்தையில் விளங்குகிறதில்லை. ஆனால் ஆன்மா விளங்குகின்றது. அந்தக்கரணம் ஞானேந்திரியம் கன்மேந்திரியம் பிராணாதிவாயுக்கள் கன்மேந்திரியங்கள் இவைகளின் சேர்க்கையே சூக்கும சரீரமென்றும், அது சுழுத்தியவஸ்தையில் விளங்குவதன்று. ஆனால் சுகஸ்வரூபமான வான்மா சுயம்பிரகாச வடிவத்தால் விளங்குகின்றது. சுழுத்தியில் சுகஞானமில்லாதிருக்கின் விழித்தபிறகு நான் சுகமாயுறங்கினேன் என்னும் நினைவு உண்டாதல் கூடாது; உண்டாதலின் சுழுத்தியில் சுகத்தின் ஞானமிருக்கிறது. அந்தச்சுகம் சுழுத்தியில் விஷயத்தினா லுண்டானதன்று. ஆனால் அஃது ஆன்மவடிவமேயாம். அவ்வான்மா ஸ்வயம்பிரகாசமா யிருத்தலால்

என்றறிவறவறிந்திட்டலிங்கமா
மொன்ருருபொருளிலேயுறவிழித்தவன்
பொன்றுறுசகமெனப்புணர்ந்தமாயையை
வென்றவனவனெனுவிளம்பும்வேதமே. 19

பொருவில்சற்பத்தியாந்தாரம்பூண்டொரு
வரவயிராகமாம்வத்திரம்புனைந்
தொருவலி லுணர்வெனுஞ்செச்சையொன்றுறப்
பரமனையிருத்துவோன்பத்தனகுவான். 20

ஒன்றிஞென்றுள்ளுறவுடம்புமூன்றையு
மன்றநல்வத்திரமடியதாக்கியே
யென்றுமங்கமைவுறவிட்டம்வைப்பனே
லன்றவன்சிவமயமாகுமென்பவே. 21

அருளெனும்புனலினையாட்டிச்சாந்தமாம்
வரைநறுஞ்சந்தொடுமருவவிந்திய
விரைமலர்புனைந்தறிவினையருத்துறிற்
பரமனையவன்சிவபத்தனகுவான். 22

ஆசறுமனத்தெழுமன்பையன்றியே
பூசனையுவக்கிலென்புராரிசென்னிமேல்
வீசுறுதிரையினுமிக்கதோசொலா
யூசல்செய்மனமுடையொருவனுட்டுநீர். 23

பூப்புனைகையுமெம்புனிதன்றன்புகழ்
பாப்புனைநாவுமேபடைத்துளான்றனைச்
சேப்புனைகொடியுடைத்தேவனேயென
நாப்புனைபுகழொடுநாகரேத்துவார். 24

(18-வது பாடலின் தொடர்ச்சி)

சுகஸ்வரூபமான ஆன்மா சுயம்பிரகாச சொரூபத்தால் விளங்குகின்றது. ஆனந்தமயமான காரணதேகம் நிர்விகற்ப சமாதியில் விளங்குகின்றதின்று. ஆனல் ஆன்மா மறைப்பின்றி விளங்குகின்றது. இவ்வாறு சரீரநிலைமை மாறுபடுகின்றது. ஆனல் ஓர் அவத்தைவிட்டு மற்றோர் அவத்தையில் விளங்குகின்றதில்லை. சகல அவத்தைகளிலும் ஆன்மா உள்ளீடாகவிருந்து விளங்குதலால் வியாபகமாம். இவ்வேகத்தால் மூன்று சரீரங்களுக்கும் விலக்ஷணமானஆன்மா வேறுவிருக்கிறதென்று விளங்கும். இடும்பை-துன்பம்.

(22) புனல்-தண்ணீர். வரை-மலை. விரை-வாசனை. (23) ஆசு-குற்றம். புராரி-பரமசிவன். (24) பாப்பு-பாம்பு. சே-எருது.

பூசனைசெயாதகைபுராந்தகன்புகழ்
பேசுதலிலாதவாய்பெற்றுழன்றிடு
நீசராமவர்தமினெடுவனத்திடைக்
கூசுதலிலாதபுன்குரங்குநன்றரோ. 25

குடிப்பனவிழுங்குவகூரெயிற்றினாற்
கடிப்பனநக்குவவனைத்துங்கைம்மல
ரடுத்துளசிவன்றனக்கர்ப்பித்துண்பவன்
விடுத்தவன்மேல்வரும்வினைகள்யாவுமே. 26

தானுறுமுடன்மனந்தனமென்றுள்ளவை
யீனமில்குருசிவசரங்கட்கீந்துதான்
யானெனதென்குதலின்றிவைகுவோன்
மேனிகழ்சிவமொடுவேறலானரோ. 27

குருசிவசரங்கொளக்கொடுத்தமெய்மனம்
பொருளிவைநமவெனப்புந்திசெய்துகொ
ளொருவனில்வழிமறித்தொறுத்துக்கொள்வன
சரணிநல்லன்மெய்தவறிலாமையால். 28

விடுவனகாமம்வெவ்வெகுளிமாலிவை
தொடுவனகுருசிவசரங்கடொல்பவங்
கடுவெனவெருவியகருத்துளார்க்கிவ
ணடுவனவெனப்புலனட்டவாற்றலாய். 29

அங்கையினமர்தருமானைவிட்டொரு
வெங்கடவுளர்தமைவிழைந்துபோற்றுவார்
கங்கையையகன்றுவர்க்கழியின்மூழ்குநர்
தங்களின்வேறலர்தருமமூர்த்தியே. 30

மோகமில்குருசரமுனியின்முன்னுள
தாகியசெயிர்முழுதகன்றுவண்டுறை
போகியமடியெனப்புனிதனுகுமேற்
பாகியன்மொழியுமைபாகற்கன்பனும். 31

(25) புராந்தகன்-பரமசிவன்.
(29) கடு-விஷம். காமம்-ஆசை.

விள்ளருநற்சிவவேடத்தோர்பொருள்
கொள்ளைகொள்கிற்பினுங்குறைகள்கூறினும்
பிள்ளையையறப்பினும்பிழைகள்செய்யினு
மெள்ளுதலிலனெனிலீசற்கன்பனும். 32

சங்கமந்தனக்கொருசாதிபுன்னினு
னங்கையினமர்தருமரற்குமுன்னினுன்
சங்கரனொடுசரந்தம்மில்வேறெனு
மங்கவனறிவருமளற்றழுங்குவான். 33

தலைமைகொள்குருசிவசரங்கட்காகவே
யுலையிடுமரிசியன்றேனுங்கன்மத்தெறி
யலையமுதாந்தமக்காகவாக்குறிற்
கொலைசெயுநஞ்சினுங்கொடியதாகுமால். 34

தனுவுளவளவுமோர்தகுநற்செய்கையு
மனமுளவளவும்பாவனையுஞானமுண்
டெனவுளவளவுஞேயமுமியைந்தவன்
பிணையுளவளவுநோய்பிறர்க்ககற்றுமே. 35

ஈசனையிருத்துறுமிதயத்தோர்பொருள்
ஆசையையிருத்துதலந்தஞ்ஞர்தாம்
வாசமுற்றிடுமொருமனையிற்புன்செய
னீசரையிருத்துதனிகர்க்குமென்பரால். 36

சினமுதலியமயறீரமாற்றுபு
வினைதபுவாய்மையாமெழுக்கையன்பெனும்
புனலொடுவிரவியேபூசினல்லது
மனமெனுமனையிடைவராதிலிங்கமே. 37

காலமுங்கருமமுங்கடந்தகாரணன்
பாலுறும்பரிசறப்பார்மடந்தையர்
கோலமும்பொருளையுங்குறித்துநச்சுநர்
சீலமும்விரதமுந்தீயவென்பரால். 38

---

(33) அளறு-நரகம்.

(35) தனு-தேகம்.

(37) தபு-கெட.

(38) நச்சுநர்-விரும்புவோர்.

வெங்கொலைகளவுபொய்வெகுளியாசையென்
றிங்கிவையொடுமறீ இயிருக்கின்றார்தமக்
கங்கையினெல்லிபோலவிர்சடைப்பிரான்
செங்கையிலிருப்பினுஞ்சேயன்சேயனே. 39

பத்தரைப்புகழ்வுறப்பணியவுண்டவர்
வைத்தனகொளவுடன்மருவப்பெற்றவர்
சித்தியுங்கடவுளர்சிறப்பும்வேறொரு
முத்தியும்பொருளெனமுன்னுரார்களால். 40

இன்னணநன்னெறியாவுமாயிடைத்
துன்னுயசிவகணந்துணிந்துகொள்ளவே
மன்னவனெனுமருள்வசவநாயகன்
றன்றொடுபுகன்றனன்றலைவனல்லமன். 41

பாடினன்பரவினன்பணிந்தசொல்லுரை
யாடினன்பன்முறையல்லமன்றிருத்
தாடலைபுனைந்தனன்றண்டநாயகன்
மூடியவுவகையின்மூழ்கினனரோ. 42

திருந்தவிவ்வகையுபதேசித்தெண்ணிலா
வருந்தவர்குழாத்தொடுமருணந்திப்பெயர்ப்
பெருந்தகைமகிழ்வுறப்பிரிவிலாரிய
னிருந்தனன்மலிகலியாணத்தென்பவே. 43

பதினாறவது

இட்டலிங்ககதி முற்றிற்று.

---

கதி 16-க்கு திருவிருத்தம் - 839.

---

(40) முன்னுதல்-நினைத்தல்.

(42) தாள்-திருவடிகள்.

(43) குழாம்-கூட்டம். மலிகலியாணத்து - எல்லாச் செல்வங்களும் நிறைந்த கலியாணபுரத்தில்.

பதினேழாவது

# கதலிவனகதி

வேறு

வரையிற்புண்ணியவனத்தினில்வளங்கெழுநதியின்
கரையிற்பன்னெடுநாளருட்குரவனைக்காண்டான்
றிரிதற்குற்றலாய்வந்துமாதேவிகல்யாண
புரியிற்கண்டுவந்தேகியமுறையினிப்புகல்வாம். 1

காட்டினும்பெருங்குன்றினுந்தேடினள்காணாள்
வாட்டுறும்பிறப்பெனும்பிணிமாய்வுறவீட்டிற்
கூட்டுநன்மருந்திருப்பதையறிஞராற்கூறக்
கேட்டுவந்துமாதேவியந்நகரினைக்கிடைத்தாள். 2

தலையில்வெண்கலையொன்றுறவெற்றரைசமைந்து
பலிகொளும்படிமனைதொறுமுலகெலாம்பழிச்ச
வலமரும்பரற்கினியவள்வெற்றரையாய்க்கட்
புலன்விருந்துறுங்கடிநகர்வீதியுட்புகுந்தாள். 3

நாற்குணங்களுண்முதற்குணமாகியநாணைத்
தீர்க்குமிம்மடமுடையவள்யார்கொலோதெரியேம்
பார்க்கினின்னவள்பித்துடையாளெனப்பலரு
நோக்கும்வண்ணம்வந்துற்றனளுலகியனோக்காள். 4

உலகுளார்தமைப்பேதையென்றுணர்ந்தனளோதா
னுலகுளார்தனைப்பேதையென்றுணர்குவரென்றோ
வுலகுளார்தமைநாணிலணீங்கியவுடையா
ளுலகுளார்தொழுந்தண்டநாயகன்மடத்துற்றாள். 5

தண்டநாயகனொடுபலர்நெருங்குறத்தவிசி
னண்டநாயகனல்லமன்வீற்றிருந்தருளக்
கண்டுபோயருகிறைஞ்சினளாண்டமர்கணங்கள்
பண்டுதாமறியாவியப்படைந்தனர்பார்த்து. 6

நெஞ்சமாரமலரக்கெனநெக்குநெக்குருகச்
செஞ்சொல்வாய்தடுமாறவாள்விழிபுனல்சிந்தக்
கஞ்சநாண்மலர்க்கைதொழுதநங்கனேய்காணு
ளஞ்சினேன்பவப்பிணியினியருள்செயென்றழுதாள். 7

(3) பழிச்ச-தோத்திரஞ்செய்ய, வேண்ட.

வீடுவப்பவராணெனப்பெண்ணெனவேரு
வேடலர்க்குழலுமைகலேயேயிவளிவள்போ
னுடுறிற்பருவம்பெறுமவரிலேஞானங்
கூடுதற்குரியாளெனவல்லமன்குறித்தான். 8

தானலாதொருபொருளிலேச்சகமெனவென்னு
ஞானமேவலாற்காமவின்பந்தனேநண்ணு
டானலாதரவாற்றனேத்தழுவியின்புறுந
ரேனேமாந்தருளரோலோவென்றனரிருந்தார். 9

இன்றுகாமனேவென்றவளினேயளாயிமைழயோ
டொன்றுமேனியனுகியகண்ணுதலொருவன்
வென்றுளானெனவுலகினிலெடுத்தசொன்மெய்ம்மை
யன்றுபோலுமென்றியம்பினர்சிலரவணமர்ந்தோர். 10

உடலமானமற்றிவளெனவனேத்தையுமொருங்கு
விடவலார்க்கலாவிளமையுஞ்செல்வமும்விரும்பி
நடலேவாழ்வினில்வெறுப்புறுப்புல்லியநரர்க்குத்
தொடருமாவினேதொலேயுமோவெனச்சிலர்சொன்னர். 11

சென்றுதேடிநாந்தத்துவமருள்செயுஞ்சீட
ரன்றிஞானதேசிகனுளரேவெனவாய்ந்திட்
டின்றுமேவுமாதேவிபோலிலேயெனவெம்மா
னின்றஞானமூலந்தனேயுணர்த்துவானினேந்தான். 12

பூதநீயலேபொறிகளுமலேயலேபுந்தி
யேதுநீயலேயிவற்றினேமயங்கியானென்னும்
போதநீயலேயென்றிவையனேத்தையும்போக்கிச்
சோதியாகியபிரமமேநீயெனச்சொல்லி. 13

ஞேயஞானஞாதுருவெனுமிவைபலநிற்கு
மாயின்வேறறுமுத்தியன்றதுசகமாமென்
றேயுமாறிதுவதுவெனுஞ்சுட்டிலாவியல்பை
மாயைமாறியதேவிபாலருளினன்வள்ளல். 14

---

(11) மாவினே-பெரிய கன்மம்; அதாவது: தொன்றுதொட்டு விடாமலே பின்பற்றி வருகின்றதாகிய பூர்வஜன்ம கர்மம்.

(12) மூலம்-ஆதிகாரணம்.

(14) சுட்டிலாவியல்பு-அது இது என்று சுட்டிக்காட்ட முடியாத ப்ரம் பொருள்.

தேறுநீரெனவெனதுளங்தெளித்ததேசிககைம்
மாறுகாண்கிலேனுடல்பொருளாவிகண்மதிப்பில்
வேறுபோய்நினவாயினவென்றவள்விழிக
ளூறுநீரொடுமல்லமன்றொடொழுதுளைந்தாள். 15

அன்னைநீயினிக்கதலிமாவனத்தினையடைந்திட்
டென்னைமேவினைகேட்டவிப்பொருளினையெல்லா
நின்னினீதெளிந்துறுதிகொணிதித்தியாசனத்தின்
மன்னுவாயெனவேவினன்றற்கொடைவள்ளல். 16

வள்ளலுண்மலர்த்திருவடிவணங்கியம்மருங்கிற்
கொள்ளைமாதவர்தாடொழுதருள்விடைகொண்டு
வெள்ளமாகியவன்புநின்றுய்த்திடமேவித்
தெள்ளுமாரமுதனையவள்பருப்பதஞ்சேர்ந்தாள். 17

வசவன்பாலருளல்லமனுற்றெனவானோர்
பசுவின்பாணிறைசுனையிடைநழுவிவீழ்பழத்தை
மிசையும்பூங்கிளிமிழற்றொலிகடலெனவிரவ
விசையும்பாசிலைக்கதலியங்காடதிலிலங்கும். 18

விரிந்தவாழையினெட்டிலைமிசைநிறைமதியம்
பொருந்துமாறுவிண்முழுதையுமளித்தருள்புத்தே
ளருந்தவாய்மடைத்தொழிற்றிறநிரம்பியவடிசில்
சொரிந்ததாமெனமனங்களிகூர்தரத்தோன்றும். 19

இனையவாழையங்காடுகண்டெங்கண்மாதேவி
முனிவர்வானவரியாவருமுறைமுறைபோற்றத்
தனியளாயொருபுறம்பசந்துளசுவைதருசெங்
கனியவாவியவுளமொடுமிருந்தனள்களித்து. 20

பதினேழாவது

கதலிவனகதி முற்றிற்று.

---

கதி 17 - க்கு திருவிருத்தம் - 859.

---

(18) பாசிலை-பசுமை பொருந்திய இலை.

(19) மதியம்-சந்திரன். இதில் 'அம்' கருத்தாப்பொருள் விகுதி.

பதினெட்டாவது

# சாதகாங்ககதி

வேறு

விளையடுத்தவிழுமந்துடைத்தெமக்
களையடுத்தவருளுடையல்லமன்
மனனடக்கம்வசவற்குணர்த்துத
றனையெடுத்தினிச்சாற்றுதுநாமரோ. 1

காவினீடுங்கதலிவனத்துமா
தேவிபோதத்திருவருள்செய்தவண்
மேவிஞானவிளக்குறவெம்முடை
யாவிபோலும்வசவனறைகுவான். 2

மத்தர்வாதமயக்கமிலாதுயர்
முத்திசாதனமொன்றுமொழிந்தரு
ளத்தநீயென்றடிகடொழுதெழப்
பத்திவேண்டும்பரமன்பகருமால். 3

பரமமுத்திபதம்பெறுமேதுவுட்
கரணசுத்தியதனதுகாரண
மாரணரித்தமவலற்குறித்தநற்
கிரியையித்திறம்வேதங்கிளக்குமால். 4

மனமிலிங்கமருவிலேயேனுட
றனிலிலிங்கந்தரித்துமிலையிலை
யெனவியம்புமிணையிலியாகம
நினைவரன்கழனிற்கநிறுத்தினய். 5

தாவிலாதமனமொடுசார்தரா
தோவுமாயினுலகிற்புனலுமொண்
பூவுநாடொறும்போக்குறுபூசனை
யாவிபோகியவாகநிர்க்குமால். 6

---

(1) விளையடுத்த-கருமசம்பந்தமுடைய.

(4) கிளத்தல்-சொல்லல்.

(5) தரித்தல்-பூணுதல். இணையிலி-ஒப்பற்றவன்.

புறம்புகாண்குவன்புல்லியனீசனை
யறிந்தஞானியகமுறக்காண்பனா
லெறும்பிகாணாறிவின்கரும்பேகொளுஞ்
செறிந்தவாடிலைதின்பனவென்பவே. 7

கரங்கணல்லகருமஞ்செயாநிற்பத்
திரிந்துசெல்லுஞ்செலாதவிடத்துநெஞ்
சொருங்குறுதவொருமனந்தன்னினும்
பரந்தவல்லற்படுக்கும்பகையிலை. 8

துயிலையின்பெனச்சொல்லுதலிந்தியத்
தியலுநெஞ்சமிலாமையினாலன்றோ
பயிலுநெஞ்சம்பரந்துதிரிதருஞ்
செயலிலில்லைசிறிதுஞ்சுகமரோ. 9

மனமொருத்தன்வசப்படுமேலவன்
பினைவருத்தும்பிறப்பையடைந்திடான்
மனமொருத்தன்வசப்படாதோடுமே
னனிபிறப்பிடைநாளுஞ்சுழலுமே. 10

அறவினைக்குமரும்பொருளின்பொடு
பெறுவதற்கும்பெருங்கல்விகற்றுயர்
விறலினுக்குநல்வீரந்தனக்குமொண்
டுறவினுக்குந்துணைமனமென்பவே. 11

நல்லசெய்துநரரையுயர்த்தவு
மல்லசெய்தங்களற்றிடையாழ்ப்பவும்
வல்லதிந்தமனமலதையனே
யில்லையென்னவியம்புமறையெலாம். 12

நெஞ்சமாதுமைநேசனைநண்ணுமேல்
விஞ்சுபாதகங்கோடிவிளைப்பினு
மஞ்சுறானவனவ்வினையாவையும்
பஞ்சுதீயிடைப்பட்டெனமாயுமே. 13

மக்கண்மானிடரென்றுமனத்தினான்
மிக்கமேன்மைவிளங்கினரில்லெனிற்
பொக்கமேவும்பொறிகளோரைந்தினா
லொக்குமாவினையொத்துயர்வுற்றிடார். 14

(7) எறும்பி-யானை. (12) அளற்றிடை-நரகத்தின் மத்தியில்.

கெடுக்கவல்லதுங்கெட்டவர்தங்களை
யெடுக்கவல்லதுமிம்மனமென்றதை
யடக்கவல்லவனையபவக்கடல்
கடக்கவல்லவனவன்கடிதரோ. 15

ஆயின்மிக்கோரரியசெயலெலா
நேயமிக்கமனத்தைநிறுத்தல்காண்
வாயுநிற்கமனமுமுடனிற்குந்
தோயநிற்குறினிற்குந்துரும்புமே. 16

ஓடுமாவைநிறுத்துறினுள்ளுறக்
கோடும்வாய்க்கவினத்தினைக்கொள்ளுவார்
நீடுமாமனநிற்கநிறுத்துறி
லோடும்வாயுவையுள்ளுறவீர்ப்பரால். 17

அடுத்தநாடிகளாங்கொருமூன்றினும்
விடுத்துவாங்கியுமேவநிறுத்தியுந்
தடுத்தும்வாயுவைத்தன்வசமாக்கில்வாய்
மடுத்திடாதுமனமும்வசப்படும். 18

ஓடும்பொன்னுமுறவும்பகையுமோர்
கேடுஞ்செல்வமுங்கீர்த்தியுநிந்தையும்
வீடுங்கானமும்வேறறநோக்குதல்
கூடுந்தன்மைகொளுமனநன்மனம். 19

மன்னுகாமவெகுளிமயக்கமென்
றின்னகூடியெறிவளிமுற்சுட
ரென்னவாடுமியன்மனந்தீமனந்
தன்னையாருந்தடுக்கத்தகாதரோ. 20

மறிந்திடாதுமனபவனங்கடாஞ்
செறிந்தவாயிற்சிவமயமாகுமா
லறிந்துவாயுவையங்ஙனமெய்தினோ
னிறந்திடாதவிலிங்கப்பிராணியாம். 21

---

(20) காமம் - ஆசை. வெகுளி - கோபம். மயக்கம் - மனத்தெளிவில்லாமை.

(22) தேசிகன்-குரு.

இன்னவாறுபலவுமியம்பினு
னன்னைபோலுநம்மல்லமதேசிகன்
றன்னைநேர்தருசைவம்வளர்க்குமோர்
மன்னவனுகும்வசவனைநோக்கியே. 22

நின்னைநோக்கவுநின்னையிறைஞ்சவு
நின்னைவாழ்த்தவுநின்மொழிகேட்கவு
மென்னமாதவமெய்தினவோவெனப்
பன்னிநாதற்பணிந்தனனந்தியே. 23

சித்தராமனுஞ்சென்னவசவனு
முத்தனுமருண்மாச்சன்முதலிய
பத்தராகும்பலருமென்புன்றலை
வைத்தநாதன்மலரடிவாழ்த்தினுர். 24

ஆனகாலையிலல்லமனுகிய
ஞானவாரிநடந்துலகெங்கணு
மேனைமாதவர்க்கின்பமளிக்குவல்
யானெனுவுளத்தெண்ணினனென்பவே. 25

பதினெட்டாவது

சாதகாங்ககதி முற்றிற்று.

---

கதி 18 - க்கு திருவிருத்தம் - 884.

---

(23) பன்னி-சொல்லி.

(25) ஞானவாரி-ஞானக்கடல்.

பத்தொன்பதாவது

# கோரக்கர்கதி

வேறு

வசவனை முதலாயுள்ளமா தவர்தமையகன்று
பசுமதிதவழ்குவட்டுப்பருப்பதமலையைநண்ணிக்
குசைசுடுமறையோர்போற்றுங்கோரக்கனெனும்பேர்ச்சித்த
னிசைவுறவுண்மையெந்தையியம்பியவாறுசொல்வாம். 1

பொறிவழிசெலாதுநெஞ்சம்புனிதமாம்வகைபுகன்ற
நெறிமுறைவழாதியற்றிநீவிர்நின்மின்கண்மிக்க
வறவரையுலகிற்கண்டிங்கடைதுமென்றுண்டையோர்கட்
கிறையவனினிதியம்பியெழுந்துமின்னெனமறைந்தான். 2

கன்றின்வாய்முலைநெகிழ்த்துக்கறவைவிட்டகன்றதென்னச்
சென்றனனையனென்றுதிசைதொறுநோக்கிமாழ்கி
வன்றழலிழுதுபோலமனமுகக்கண்ணீர்மல்கி
நின்றனர்வசவனாதிநிகரில்சற்பத்தரெல்லாம். 3

காணுதலொழிகநல்லார்க்காணினங்கவர்பானட்புப்
பேணுதலொழிகபேணிற்பிரிவுறலொழிகவுற்றான்
மாணுயிருடம்பில்வாழும்வாழ்க்கைபோயொழிகவென்னா
வூணிடுமொருதாய்நீத்தபார்ப்பெனவுளங்குலைந்தார். 4

தண்டநாயகன்கரத்திற்றம்பிரான்றன்னைக்கண்டு
பண்டுபோலுவகைபூத்துப்பத்திசெய்தாங்கிருந்தான்
றொண்டனாகியவிராமன்சொன்னலாபுரத்தினெஞ்சிற்
கொண்டவாரியனைநாடிக்கொடுவழிதப்பிநின்றான். 5

அல்லமனறைந்தமாற்றமகங்கொடுபிறருந்தாஞ்செய்
நல்லனபுரிந்துதத்தமிடந்தொறுநணுகிவாழ்ந்தார்
தொல்லைநல்வினையாற்றன்னைத்தொழப்பெறுமடியர்தம்பாற்
செல்லுவனென்றுசென்றோன்செயலினித்தெரிக்கலுற்றாம். 6

---

(1) குசை-நாணற்புல். (2) 'தியற்றிநிலீயரோ நீவிர்மிக்க' என்றும் பாடம். மின்னென-மின்னலென. (3) இழுது-வெண்ணெய். மல்கி-மிகுந்து, பெருகி. (4) மாண்-மாட்சிமைப்பட்ட. பார்ப்பு-பறவைக்குஞ்சு. (5) உவகை-சந்தோஷம். (6) மாற்றம்-சொல். நணுகி-சேர்ந்து.

எரிபுரை தளிர் தளிர்ப்பவிளமரக்காவிற்றென்றன்
மருவுதல்போலவன்பர்மனமொடுகண்களிப்பத்
திருவுருவொன்றடைந்துசென்றவக்கருணைவள்ளல்
கருமுகிறவழ்பராரைப்பருப்பதங்கண்டுசென்றான். 7

அல்லமன்கண்டுசெல்லுமப்பருப்பதத்தின்மேன்மை
சொல்லுதலறியாராகிச்சுரர்முனிவரர்கடம்முள்
வல்லவரெனவிருக்குமறிஞருமயங்கிநிற்பப்
புல்லறிவாண்மைகொண்டுபுகலுவன்சிறிதஞ்சாமல். 8

நாடொறுமுதித்தொடுங்குஞாயிறுதனைச்சுமக்குங்
கோடுறவரைகுணக்குங்குடக்குமாய்த்திசைத்துநிற்பக்
கூடுதல்பிரிதலின்றிக்குறைமதிதலைச்சேர்ந்தின்பந்
தாடருகதிரைச்சென்னிதரிப்பதக்குன்றமாதோ. 9

பொன்னிற்குன்றெழுவாயாகப்பொருப்பளவிறந்துநிற்பச்
சென்னிக்கட்டவழ்வெண்டிங்கட்சிலாதரன்குழவிவெற்புத்
தன்னைக்கண்டவரையென்னோர்தலைமிசையேற்றுமென்னென்
றின்னற்கட்படிந்தன்றோவவ்விறைமலைவிளர்த்ததம்மா. 10

பரசிவலிங்கமொன்றுபருப்பதம்போற்றரிப்பத்
துரிசறவடைந்தேனில்லையென்னுமச்சோகத்தீயா
லுருகுறுமமையத்தோடியொருமலைகுழைத்தானன்றிக்
குருகமர்தளிரியற்குக்குழைந்தவன்குழைக்குமோதான். 11

பொருப்பிறைமகனெற்குப்பொருந்துறுதீசனும
நெருப்பனையான்சார்ந்தாங்குநிகழ்தொடர்மொழியினன்றிப்
பருப்பதமெனவேகூறப்படுமிதுவென்னுநாணுற்
றிரைப்பொலிகடலிற்சென்றுவீழ்ந்ததுசிலம்பொன்றம்மா. 12

தன்னையோர்கையால்வீழப்பிலத்திடைத்தள்ளிவந்தோன்
சென்னியால்வணங்கியேத்துஞ்சிலம்பினைவிந்தமொக்கு
மென்னலாமென்னலாமோவிணையறுபருப்பதத்தைப்
பின்னுவார்திரையிலிட்டுப்பெயர்த்தபுன்மத்தோவொக்கும். 13

---

(7) இளமரக்கா-இளமரச்சோலை.

(9) கோடு-சிகரம். குணக்கு-கிழக்கு. குடக்கு - மேற்கு. குறைமதி-பிறைச்சந்திரன். சென்னி-தலை.

(11) துரிசுஅற-குற்றம்நீங்க. குழைத்தான்-வளைத்தான்.

நகைமதிப்பிள்ளைபோலநரைத்தகூன்கிழவன்சென்றோர்
முகைமலர்ச்சுனையின்மூழ்கிமுருகுகொப்புளிக்குந்தோட்டுப்
பகைமலர்க்குழன்மடந்தைபகர்ந்தவோராணைகாத்து
மகிழ்மனத்தன்பனேபோல்வந்துமேலெழுவனன்றே. 14

சினைமலர்ப்புதன்மென்போதுசெழும்புனற்பசுந்தாட்செந்தே
னனைமலர்தமதுதண்பூநண்ணியீர்ங்கொடிகள்குண்டுச்
சுனைமலர்விழிகள்போலத்தோன்றுமப்பாரைக்குன்றிற்
புனைமலர்பலவுங்காட்டும்புரிகுழன்மகளிர்போலும். 15

தூங்கிசையருவிபாயத்தொளைக்கைவெண்கோட்டுரற்கா
லீர்ங்கவுணெடுநல்யானையேற்பவெந்தழலலாமற்
றேங்குதண்புனன்மேனோக்காதென்பதுதீரச்சென்று
பூங்கதிர்பனிவெண்டிங்கள்போன்மெனத்திவலைசெய்யும். 16

விஞ்சையருளர்நரம்பின்வீணையாழெழுமின்னோசை
குஞ்சரமனையவென்றிக்குன்றவர்புறத்திலென்றுந்
தஞ்செவிமடுத்துக்கேட்பார்தனிநிலையோகமுற்றோ
ரஞ்செவிநிறையவுள்ளேயரியயாழோசைகேட்பார். 17

பீடுறுகருவினோடுபெயரியவில்லினும்ப
ரோடுறுபசும்பொனாற்செய்தோங்குறுசிகரமொன்று
நீடுறுசிலாதரன்றனெடுந்தவப்பிள்ளைக்குன்றின்
மோடுறுமுடியின்மீதுகவிழ்த்தபொன்முடியையொக்கும். 18

செங்கதிரவனெழுந்ததிவாவிடைக்குடம்பைசெற்றிப்
பொங்கொளிமரத்திற்சீர்சால்புள்ளினம்பொறையுயிர்த்துக்
கங்குலினடைகிடப்பக்கருதிவந்ததனைக்கண்டு
வெங்கனல்கொளுந்திற்றென்றுமீமிசைச்சுழன்றிரங்கும். 19

---

(14) நகைமதிப்பிள்ளை-வெண்மையான இளம்பிறைச் சந்திரன். முகை-பூவரும்பு. முருகு-வாசனை.

(15) குண்டு-ஆழம். புரிகுழல்-பின்னலையுடைய கூந்தல்.

(16) ஈர்ங்கவுள்-குளிர்ச்சியான மதஜலம் பெருகுகின்ற கன்னம். திவலை-நீர்த்துளி. (17) குஞ்சரம்-யானை; புதர்களில் வசிப்பதினால் காரணப்பெயராயிற்று. நிறைய-நிரம்ப.

(18) பீடு-பெருமை. உறு-உரிச்சொல். சிலாதரன்-மலையின்மீதுவசிக்கும் பரமசிவன். மோடு-உயரம்.

(19) செங்கதிரவன்-சூரியன். மீமிசை-ஆகாயம். கொளுந்தி-கொளுத்தி, இது மெலித்தல் விகாரம்.

நறுமலர்க்குழன்வெண்முத்தநகைமலைமடந்தைமிக்க
வறம்வளர்ப்பதற்குநெற்சிற்றளவிருநாழியென்று
கறைமிடற்றிறையளப்பவொருபெருங்கருவிதானிவ்
வெறிமலர்க்குடுமிக்குன்றின்வேய்களுளொன்றிற்பெற்றாள். 20

நெடியவன்குறுகியப்பாணின்றுகைதொழுமவ்வெற்பின்
மிடியுடையொருவன்விற்கும்விறகினைக்குறித்துச்சென்று
வடியுடைநவியங்கொண்டோர்மரத்தினைத்துணித்தலோடும்
படியுறும்பசும்பொனுரும்பரிசுகொண்டுவந்துசெல்வான். 21

கொண்டல்கண்முழவினார்க்குங்கோதைவெள்ளருவிவெற்பில்
வண்டுபாண்முரன்றுமூசிமலர்திளைத்தூறுசெந்தே
னுண்டுகண்டுயில்பூங்கொம்பருயர்மரத்திவர்ந்திராசி
ஞெண்டுகண்டஞ்சிமந்திஞெரேலெனவிழியுமன்றே. 22

தளிர்க்குளகினைத்தேன்றோய்த்துத்தனதுவாய்கொடுக்குஞ்செய்கை
பளிக்கறையதனுட்கண்டுபரிந்துவேறொன்றினுக்கிங்
களித்ததென்றுளமயங்கியரும்பிடியொருகூர்ங்கோட்டுக்
களிற்றினைமுனிந்துசெல்லுங்கம்பலையுடைத்தக்குன்றம். 23

நண்ணுறுமதியின்மானைப்பிடித்துநீநல்குகென்
றெண்ணுதன்மடந்தைவேண்டவொருகுறமகன்கேட்டன்று
பெண்ணுரைகொண்டிராமன்பிடிப்பதற்கெண்ணுமாபோ
லெண்ணிலனிதற்கென்செய்வேனென்றுளநைந்துநிற்பான். 24

மேருமந்தரமேயாதிவெற்பெலாமெனைவெறுப்பச்
சாருமென்மாட்டேமுக்கட்டம்பிரானெனநினைந்து
சேருமொன்னலரையஞ்சிச்சிலம்பழுமாறுபோல
வாரவெள்ளருவிபாயுமழகினையுடைத்துமாதோ. 25

---

(20) கறைமிடற்றிறை - கடலிலிருந்துண்டான விடத்தை யுண்டதால் நீலகண்டம் பொருந்திய பரமசிவமூர்த்தி. இது காரணப்பெயர்.

(21) மிடியவன்-தரித்திரன். படி-பூமி.

(22) கொண்டல்-தண்ணீரைக்கொள்ளுவதால் மேகத்திற்குக் காரணப் பெயர். மூசி-மொய்த்து. மந்தி-பெண்குரங்கு.

(23) குளகு - இளந்தளிர் (இலைமேயும்விலங்கின் உணவு) "இலைநுகர் விலங்குணவே குளகெனவியம்பலாகும்" என்பது நிகண்டு. கம்பலை - சப்தம்; ஓசை. (24) நைந்து-உருகி.

(25) முக்கட்டம்பிரான்-பரமசிவன். ஒன்னலர்-பகைவர்.

இனையனவளமிகுத்தவெந்திருச்சயிலந்தன்னை
யனையினுமினியனெனங்கோனல்லமன்சென் றுநண்ணித்
தனியுடல்சித்திபெற்றுத்தருக்குமக்கோரக்கன்று
ளனியுளமகிழ்ந்திருக்குநல்லிடந்தனையடைந்தான். 26

அத்தனேர்வருதல்கண்ணுற்றப்பெருஞ்சித்தன்றன்னோ
டொத்தவோர்சித்தனாகவுன்னுபுதனைவியந்து
நித்தனுண்மலர்த்தாடாழாநின்றுகைகுவித்துஞான
சித்தநீவருகவென்றோர்தவிசிடைச்சேர்த்திச்சொல்வான். 27

வேறு

இரவிவானவனெழுந்ததுமின்றெனக்கதாஅன்று
தெரிவவாயினகண்களுமின்றுநின்சிறந்த
வரவுநானெதிரின்றுபெற்றமையினின்வரவு
பொருவின்மாதவம்புரிந்திடார்க்கெளியதோபுகலின். 28

மதலையாகியநற்குணஞ்சார்ந்துநல்வாய்மை
சிதைவிலாவடியாரிணஞ்சேர்ந்திடாதவன்கண்
ணுதலினூனையுஞ்சேர்ந்திடானென்பவெந்நூலு
முதலிலான்பெறுமூதியம்யாதுகொன்மொழியில். 29

ஒருவிருந்தினர்க்குரைசெயுமுகமனோடொப்பக்
குருபரன்றனக்கினையனவின்மொழிகூறி
வருபெருந்தகையார்கொனீயுரையெனவாழ்த்தி
யருளினங்கடறனைவினுய்கின்றனனன்றே. 30

செறிந்தமூலவாங்காரத்தின்வேறெனத்தீர்ந்திட்
டிறந்திடாததற்கண்டவனென்னையுங்காண்பான்
மறிந்துபோமுடன்மானியையுரைப்பதென்மதித்தென்
றறிந்தஞானிகள்வேறறவறிபவனறைந்தான். 31

ஆதிநாதனதருளினாற்குளிகையாதிகளான்
மேதையாமுடல்சித்திபெற்றவனென்றும்விளியா
துதலாலதுபெருதவனழியுமென்றறைந்தான்
பூதமேனியேதானெனப்பொருந்துபுந்தியினன். 32

---

(26) சயிலம்-மலை. தருக்கும்-அகங்காரமடையும்.

(28) இரவிவானவன்-சூரியன். (29) ஊதியம்-இலாபம்.

(30) முகமன் - உபசாரவார்த்தை. (31) மூலம்-காரணம். மறிந்து-அழிந்து. (32) ஆதிநாதன்-பரமசிவன். பூதசரீரம்-அழியக்கூடியதேகம்.

உடம்புவாழ்தருன்வாழ்தலுமூன்பொதிந்தியற்று
முடம்புசாதருன்சாதலுமாகவேயுரைத்தா
யுடம்புதானுயிரென்னநீயுன்னினேபோலு
முடம்புவேறறியாவுலகாயுதனெருத்து. 33

யாக்கைதானெனிலெனதுடம்பென்பதிங்கென்னை
போக்குமாடைபொன்முதலியபொருளுளொன்றெனதென்
ருக்குவார்தமிலதனையானெனன்பவரைய
பார்க்கில்யாருளர்பகர்தியென்றல்லமன்பகர. 34

யானினைந்தனனேடினனென்றியம்புதலாற்
ருனெனப்படுகின்றதேதெனக்கதுதன்னை
நீநிகழ்த்துகவென்றுகோரக்கனின்றியம்ப
ஞானநற்குருபானிதுநவின்றனனயந்து. 35

நானினைந்தனனெனல்கரணத்தினைநண்ணு
மானதன்மையாலுடல்பொறிகரணங்களனைத்து
நானெனும்படிவரும்வரத்தான்பலவதனு
னீநவின்றதத்தியாசமென்றறிகெனநிகழ்த்த. 36

ஓழியுமென்னுயிரெனுமிடத்தவ்வுயிரொழிய
மொழியவேறுமோருயிருளதோவிதைமொழிநீ
பழியினல்லருட்குன்றமேயென்றவன்பகரச்
செழியமென்மலர்ப்பதத்தெமையாள்பவன்செப்பும். 37

உயிரெனும்பெயரியங்குகாற்கியற்பெயருரைப்பி
னயலுறுந்தனக்கப்பெயராகுபேராமென்
றியலுணர்ந்தவரியம்புவரென்றெமக்கிறைவன்
மயலறும்படியுணர்ந்திடீதுரைத்தனன்மன்னே. 38

(33) ஊன்-இறைச்சி. உலகாயுதன்-உலகாயத சமயத்தோன்; புறச் சமயம் ஆறின் ஒன்று, அது சார்வாகன கோட்பாட்டின்படி உலக இன்பமே சிரேஷ்டமென்னும் ஓர் நிரீச்சுவரவாதசமயம்.

(34) யாக்கை-உடம்பு; கட்டப்பட்டது என்னும் காரணத்தால் வந்த பெயர்.

(36) கரணம்-கை கால் முதலிய அவயவங்கள். பொறி-மெய் வாய் கண் மூக்கு செவி.

(38) இயல்-சுபாவ தருமம். இறைவன்-தலைவன்; இது இறைமையென்னும் பண்படியாகப் பிறந்த பெயர்.

தன்னைச்சச்சிதானந்தமென்றருமறைசாற்ற
மின்னிற்கெட்டிடுந்தசைநிணமென்புதோன்மேய்ந்த
வின்னற்பொய்க்குடிலாகியவுடம்பினையானென்
றுன்னிக்கெட்டனையென்கொனீயென்றினுமியம்பும். 39

வெருவுறப்படும்பிறவியையொழித்துமெய்வீடு
மருவுதற்குளம்வைத்தவனிம்மலவடிவைத்
தெருவினிற்புனிதம்படாவொன்றனைத்தீண்டி
யருவருப்பவன்போலருவருத்ததையகற்றும். 40

மருந்துகொண்டுநோய்தீர்ப்பவர்போற்சிவமருவி
யிருந்தவிவ்வுடம்பினைப்பெரியவர்விடவெண்ணா
மருந்துகொண்டுநோயோடுறமதிப்பவன்போல
விருந்தவிவ்வுடம்போடுறவெண்ணினையென்றே. 41

பிறந்தவாகமொன்றிறந்திடாப்பெருமையுமுடைத்தோ
வெறிந்தவான்சிலைவீழ்ந்திடாதிருப்பதிங்கில்லை
செறிந்தகாரியமென்பதென்றாயினுஞ்சிதையு
மிறந்திடாதுகாரணமெனப்படுமதேயென்றும். 42

மருந்தினாலுடனித்தமாமென்றுநீவகுத்த
திருந்துவாழுநாட்பன்மைகொண்டன்றிவேறில்லை
பொருந்திநீயுடலழிந்திடாதென்பதுபொருந்தா
தருந்தவாவினிவீடுவேண்டென்றனனையன். 43

---

(39) சச்சிதானந்தம் · உண்மை யறிவானந்த ரூபமாகிய மங்களவஸ்து; இச்சொற்றொடரை மூன்று பதமாகப் பிரித்து, சத்-உண்மை, சித்-அறிவு, ஆனந்தம்-ஆனந்தம். இப்பெயரை இடைவிடாது உச்சரிப்பவர்களுக்கு நல்லுண்மையான வறிவையும் என்று மழியாத பேரானந்தத்தையுங் கொடுக்கக் கூடியது எனவும் பொருள் விரித்துக் கூறலாம். தசை-மாமிசம். நிணம்-கொழுப்பு. குடில்-தேகம், குடிசை.

(40) மெய்வீடு-மோக்ஷம். மலவடிவு-மலசம்பந்தமாகிய வடிவத்தை.

(42) ஆகம்-தேகம். வான்சிலை-இந்திரதனு; ஆகாயத்தில் வீசியெறிந்த கல்.

(43) மருந்து-தேவாமிருதம்; இதற்குச் சாவாமருந்தென்றும் பொருள் கூறுவர்; இங்குக் காய கற்பஞ் செய்து நிலைநிறுத்துவதற்குரிய தென்னும் பொருள்படும்.

ஏதுசொல்லினுமென்னுடலழிவுறுதென்றும்
வாதுசெய்வதென்காட்சியாலுணர்த்துவன்வலியின்
றுதிநாதனதருளினுலென்றுகோரக்கன்
றீதிலாவருள்வாரியோடுரைத்திதுசெய்யும். 44

இன்னியங்களின்முழங்குவெள்ளருவிவெற்பெறிந்த
மன்னவன்படையன்னதோரொளிரயில்வாய்வா
டன்னையெம்பிரான்கைக்கொடுத்தனையனென்றன்னை
நின்னிரும்புயவலியினுலெறிகெனநிகழ்த்தி. 45

அத்தவீச்சிறகன்னதோர்தோலறுமேனுஞ்
சித்தனுனலேனென்றுமுன்னின்றனன்செருக்கி
நித்தன்யானிவன்கருதியதேசெய்துநெஞ்சின்
வைத்தமாதருக்கொழிப்பலென்றருளுளம்வலித்தான். 46

வாங்குவாளினைமின்னெனவிதிர்த்தருண்மாரி
யோங்கிவானுருமேறெனவதிர்த்தவனுடம்பிற்
றங்கமால்வரைமீதெறிந்தானெனத்தாக்க
வாங்கொரோதைகிண்ணென்றுமேலெழுந்ததையன்றே. 47

திருப்பருப்பதநடுங்கியதவ்விறற்சீற்றத்
தரக்கனுற்றிதுதனையுமின்றெடுத்தனனுமென்
றுரைப்பதற்கரிதாகியவச்சமுற்றோடிப்
பொருப்பிறைக்கொருமகளரன்புயங்கள்புல்லினளால். 48

விஞ்சைமாதர்தம்யாழொலிகேட்டமாவேட
ரஞ்சிலோதியர்பதலைகேட்டயரசுணம்போ
னெஞ்சுமாழ்கினர்புள்ளினமெழுந்தகாணிமிர்த்துத்
துஞ்சுமாவெழுந்தோடினவான்றுளிதுளித்த. 49

---

(44) ஏது-காரணம். வாது - சொற்போராடல். வாரி - சமுத்திரம். அருள்வாரி-கருணைக்கடல். (45) இன்னியம்-இனிமையான வாத்தியங்கள். (46) 'அத்தவீச்சிறகன்னதோர்தோலறுமேனும்' என்று இவ்வாசிரியர் கூறியதை நாலடியாரில் தூய்தன்மை என்னும் அதிகாரத்து முதற்பாட்டில் 'ஈச்சிறகன்னதோர் தோலறினும்வேண்டுமே, காக்கை கடிவதோர்கோல்' என்பதனோடும் ஒப்பிடுக. நித்தன்-அழிவில்லாதவன். (47) வான் உரும் ஏறு-ஆகாயத்திலுண்டாகும் பேரிடி. ஓதை-சப்தம். (48) திருப்பருப்பதம்-கைலையங்கிரி. விறல்-வலிமை. பொருப்பிறை-மலையபருவதராசன். (49) விஞ்சைமாதர் - வித்தியாதரமகளிர். அஞ்சிலோதி - சில்வட்டப் பொற்றகடணிந்த கூந்தலையுடைய பெண்கள். அசுணம்-இது ஒரு பறவை; இனிய யாழோசையைக் கேட்டு மகிழும்; பறையோசை கேட்டால் பிராணனை விடும் என்பார்கள்.

இன்னவாறொலியெழவுடலூறின்றியிருப்ப
முன்னமேவியசெருக்கினுமும்மடங்கெய்தி
யென்னைநேர்பவரிலையெனவவனுளத்தெண்ணித்
தன்னையேநனிவியந்தமையறிந்தனன்றலைவன். 50

ஒலியெழுந்திடவின்னணநினதுபேருடம்பு
வலியடைந்தநின்னொப்பவரிலைவளிவழங்கு
முலகிலென்றுகைகுலைத்திளநகைபுரிந்தொருகைம்
மலர்பொருந்துவாளவன்கையிற்கொடுத்திதுவகுத்தான். 51

வாங்கும்வாளினானின்வலியொடுநமர்வலியுந்
தாங்கியென்னைநீயெறிந்துகாணென்றுநந்தலைவ
னாங்குநின்றனன்சித்தனுமஞ்சிலனாகி
யோங்கிவாளினாலெறிந்தனனொப்பிலானுருவை. 25

அணுமயங்குமின்னுழைகதிரெறிந்தவாளாக
வினைமயங்குமெய்ப்படாதுவாள்வறிதுபோயிற்றுப்
பனைமயங்குதோண்மாயைதன்படாமுலைபடாத
மணமயங்குதண்சோதிமேல்வாள்படவற்றோ. 53

வேறு

வானெறிந்துகையிளைத்தகோரக்கனாதன்மிகமனம்வியந்து
நானிறைஞ்சும்பரஞ்சுடரேயிவனென்றுமெய்விதிர்ப்பநடுநடுங்கித்
தானடைந்தசெருக்கொழிந்துதலையன்பினெறிநடப்பத்தலைப்பட்டெங்கோன்
றேனடைந்தசெழுங்கமலத்திருவடியில்வீழ்ந்தெழுந்துசெப்புகின்றான். 54

நின்னையறியாதுமதுவுண்டவன்போன்மனஞ்செருக்கிநினைந்தபாவம்
பின்னரெதிர்நின்றுநினதுரைமறுத்துப்பித்தனெனப்பிதற்றுந்தீமை
யின்னுயிர்கொன்றுடல்கவருமறவன்போற்செய்தபிழையெல்லாமெந்தாய்
மன்னியநின்பேரருளாற்றீர்த்தெனையாட்கோடியெனமறித்துந்தாழ்ந்தான். 55

செய்தபிழைபோகவினிப்பிழைசெய்யாதுடம்புநசைதீர்ந்துநின்றன்
மெய்தெரியினெனக்குநீயினியனெனப்பெருங்கருணைவெள்ளங்கூற
வுய்தலிலென்பிழைபொறுத்திட்டடித்தரியவானமுதமூட்டுகின்றாய்
கைதருசெம்மணியனையாயான்செய்வதேதுளதுகைம்மாறென்று. 56

முற்றுமருள்செய்துநீயானறியவேண்டுபொருண்மொழிதியென்று
பற்றுடலநசைதீர்ந்துகோரக்கனிற்பவவன்பருவங்கண்டு
கற்றறியுமறிவினாலறிவரியபரஞ்சோதிகருணைகொள்ளப்
பெற்றதிருவுளமகிழ்வுற்றன்பொடுகேண்மதியென்னப்பேசலுற்றான்

(50) நனி - மிகவும்; உரிச்சொல். (51) வளி-ஆகாயம்; காற்று. (54) தேன்-வண்டு. (55) மது-கள். மறவன்-வனவேடன். கைம்மாறு-பிரதியுபகாரம்.

இருந்தபடிகுகேசனைநீயறிவையெனினின்பிறவியெனுநோய்தீர்ந்து
பொருந்துறுவைபேரின்பமென்றமலன்கூறவவன்போற்றியெந்தாய்
பரிந்தருள்செய்குகேசனெனுமொழிப்பொருளேததுகூறப்படுவான்யாவன்
றெரிந்துணரவருள்செய்வாயென்றுதொழவெம்பெருமான்செப்புகின்றான். 58

குகையிதயமதன்கணமரிறையீச:னென்றுபொருள்குறித்துக்கொண்
நிகழனையகுகேசமொழியுடையன்யான்றனெனவேநிமலன்கூற [மோ
வகமகிழமுகமலர்ந்துசித்தனறைகுவனீயேயாகிலுன்றன் [ன்றான்.
முகையவிழ்மென்மலர்க்காத்திற்சிவலிங்கங்கொண்டதென்கொன்மொழிதியெ

பிறந்தபயன்பெறவுலகரெனைக்கண்டுகொண்டுமனம்பிறழ்தலின்றிச்
சிறந்தசிவலிங்கமலர்க்கரங்கொண்டுபூசனையாஞ்செய்யவேண்டி [று
நிறைந்தவெனதுருவாகுமிக்குறிகைக் கொண்டனன்யானீங்காதென்
மறிந்துதெளிகுதிமனமென்றருள்செய்தெங்குருதேவனறையலுற்றான். 60

போதகனாகியகுரவனெஞ்ஞான்றுநற்கருமம்புரிகவென்று
வேதமுதலாகியநூன்முழுதுமொருங்கொருவந்தம்விதித்தலாலே
சாதகனாகியபருவமாணாக்கன்பாசவலிதணிக்கவல்லான்
மேதினிமேலுடலொடுநற்செயல்விடுவதன்றியிடைவிடலாகாதால்.

என்றுதனதியலுணர்த்தியுடம்புநானென்றிருந்தவியல்புபோல
நின்றவெனையுணர்ந்துநீசோகம்பாவனைகொண்டுநிற்பையாயிற் [சை
பொன்றலுறுவிடங்கலுழன்றனை நினைப்பப்போதல்போற்போமவிச்
நன்றறிதியெனவறிவித்தனனெங்கோன்கோரக்கனாதன்றன்னை. 62

ஞானகுருபரனருளாற்றனக்குரைத்தமொழிப்பொருளைநன்றறிந்திட்
டூனவடிவென்பதுவிட்டுண்மையலாவனைத்தையுநீத்துண்மைகண்டு
தானதனையடைந்துதானதுவென்னுமருளகன்றுதானேயாகி
வானவருமறிவரியபெரும்புகழ்க்கோரக்கனவண்மன்னினானால். 63

பத்தொன்பதாவது

**கோரக்கர்கதி முற்றிற்று.**

---

கதி 19 - க்கு திருவிருத்தம் - 947.

---

(59) குகையிதயமதன்கணமரிறை - குகையாகிய இருதயகமலத்தினுள் வசிக்குங் கடவுள்.

(61) போதம்-ஞானம்.

இருபதாவது

# முனிவரர்கதி

வேறு

பணிவரைமகளொடுபவளவார்சடைத்
தனிவரையமர்திருச்சயிலநீங்கியே
துனிவரையல்லமன்சுருதிமெய்ப்பொருண்
முனிவரையுணர்த்தியமுறைமைகூறுவாம்.

அருந்தவமுயன்றகோரக்கற்கம்முறை
விரிந்தறிவுருவமாமெய்ம்மைத்தன்மையைப்
பரிந்தருளமலனப்பாலுமுத்தரம்
பொருந்துநர்தமக்கருள்புரியப்போயினான். 2

நல்லனதீயனநாடுறூஉதுகொள்
வல்லழலெனவருண்மழையெனப்படு
மல்லமனெதிர்ந்தவரறமுளாரற
மில்லவரெனாதறிவியற்றினானரோ. 3

யாவருந்தனதருட்கேற்றுளாரெனப்
பாவவன்றளையறப்பரிந்துநன்னெறி
மேவவந்தருள்புரிவிமலனாயிடை
மாவழங்குறுமொருவனத்திற்போயினான். 4

அக்கொடுவனத்தெதிரன்பென்கின்றதுட்
புக்கறிகிலாவொருபுளினன்கூன்புறக்
கொக்கெனநாடொறுங்கொலைகுறித்தவன்
கைக்கொடுமரமொடுகடிதுதோன்றினான். 5

அன்பனாய்க்கண்ணிடந்தப்பும்வேடனுக்
கின்பமீகுதல்புகழ்க்கேற்றதன்றுநான்
வன்பனாய்த்திரியுமிம்மறவற்காப்பலென்
றென்பொலாநெறிமனமிரங்கிற்றென்றனன். 6

---

(1) பணிவரை-இமயமலை. சயிலம்-மலை.

(6) அன்பனாய்க் கண்ணிடந் தப்பும் வேடன்-கண்ணப்பநாயனார். என் பொலாமணிமன மிரங்கிற்றென்பவே என்றும் பாடம்.

நல்லறிவவனுளநடுதற்கொப்பிலா
வல்லமன்வினையறவருட்கண்வைத்தனன்
கொல்லையின்விதையிடக்கொழுப்புக்காழுளி
புல்லெரிவுறவழற்போகட்டென்னவே. 7

மேவுதீவினையெலாம்விளிந்துதூயனுய்ப்
பாவியேனுய்வகைபகர்தியென்றனன்
மாவலால்வழங்குருவனத்தில்வேட்டுவன்
யாவர்தாமிறையருளெய்தினுய்ந்திடார். 8

அறிவெனும்வேலினலைம்புலன்களா
மறியினமருளெனும்வலையைத்தப்புறு
தெறிகுவையெனினுனக்கில்லைதுன்பெனு
நெறியினைவழுவறநிமலன்கூறினன். 9

அறிவொடுமனஞ்சிலையம்பதாகநான்
குறியெனவெய்வையேற்குமரநின்றனைப்
பொறிமதிலிலங்கைமுன்புரந்துளான்றலை
பறிபடவெய்தவன்பணியுமென்றுமே. 10

இப்பரிசெறழ்வலியெயினனுய்வகை
செப்பிநன்னிலையருள்செய்திருத்தியே
யப்புறமருளுடையமலன்போம்பொழு
தொப்பறுதவவனமொன்றுதோன்றிற்றே. 11

கோடமைகரிகளுங்கொடுமடங்கலும்
பாடமைபகைதவிர்பரிசினதற்
காடரவொடுமதியமர்பிரான்சடைக்
காடலதுவமையாங்கண்டதில்லையே. 12

பெயர்க்குறுகால்கள்கையாகப்பெற்றவு
முயிர்க்குறுநாசிகையாகவுள்ளவு
மயக்கறுதீயினைவளர்த்துவான்புனல்
பயக்குறுமுனிவரர்பணிகள்செய்யுமால். 13

---

(9) ஐம்புலன்-சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம்.
(10) பொறி-யந்திரம்.

மறைபலவோதுநர்மகம்வளர்க்குநர்
கறைமிடறுடையநங்கடவுட்பூசனை
முறைவழிபுரிகுநர்மூச்சவித்தொரு
தறியெனவசைவறவிருக்குந்தன்மையார். 14

வேறு

ஆயிருக்குமருந்தவர்தங்கள்பாற்
போயிவர்க்குறுபோதனையாற்பவ
நோயகற்றுவலென்றுநுவன்றனன்
றூயெனக்கொருதாயெனுமல்லமன். 15

நோற்றுநோன்புடனோந்துவருந்துவீ
ராற்றுநீர்மகமாதிவினையினான்
மாற்றுமாயைமலஞ்செறுவிற்படு
சேற்றினாற்கழுஞ்சேறுநிகர்க்குமால். 16

ஞானங்கொண்டுநணுகுஞ்சிவபத
மூனங்கொண்டகருமத்துறுவது
வானங்கொண்டுவளர்த்தல்புகையநு
மானங்கொண்டுவளர்த்தலையொக்குமால். 17

குடுமியங்கிரியொப்பக்குவித்தபுற்
சுடுதல்கொண்டுபிறவிசுடப்படா
தடுபுலன்களறிவெனுமங்கியிற்
சுடுதல்கொண்டுபிறவிசுடப்படும். 18

போதமாகும்புனிதத்தழலினுட்
பேதபாவனைப்பேரவிபெய்வனே
லாதிசோவுடைமாசியவனென
வேதம்யாவும்விளங்கவிளம்புமே. 19

---

(14) மகம்-யாகம்.

(15) பவம்-பிறப்பு.

(17) புகையநுமானம்-இது தருக்கநூலார் கூறும் எண்வகைய பிரமாணங்களில் ஒன்று. புகை முதலிய குறிகளால் மலை முதலிய விடங்களில் நெருப்பு முதலியவை யுண்டென்று ஆராய்ந்தறிதல் அனுமானமாம்.

(19) பேதபாவனை-ஒன்றை மற்றொன்றாக நினைத்தல்.

*மறையினுள்ளகருமமனவினை*
*வறியர்கொள்ளுதல்போலமதியறுஞ்*
*சிறியர்கொள்வர்தெளிதத்துவமசி*
*யறிஞர்கொள்வரணிகொளுஞ்செல்வர்போல்.* 20

*என்றுகூறவிருந்தவரன்பொடு*
*நின்றுஞானநெடுந்தகைதாண்மிசை*
*யின்றுநீவரவெத்தவஞ்செய்தன*
*மன்றயாமெனவாழ்த்திவணங்கினார்.* 21

*மாயைதோன்றியஞான்றுமனத்தெழு*
*மூயமோகமுடிந்திடச்செம்மலர்*
*வாயினாற்றுருவாசன்சொலப்படுந்*
*தூயனாமிவனென்றுதுதித்தனர்.* 22

*இன்னவாறிங்கிருந்தவரின்புற*
*மன்னுஞானமறைமொழிகூறியே*
*தன்னைமேவுந்தலைமைபுரிந்தன*
*னன்னைபோலுநம்மல்லமதேவனே.* 23

*இருபதாவது*

## முனிவரர்கதி முற்றிற்று.

---

*கதி 20-க்கு திருவிருத்தம் - 970.*

---

(20) *தத்துவமசி*-இது ஒரு மகா வாக்கியம். இவ்வாக்கியம் சாமவேதத்தின் சாந்தோக்கிய உபநிஷத்திலுள்ள மகா வாக்கியமாகும். அது தத்-துவம்-அசி யென மூன்றுவகையாய்ப் பிரிக்கப்படும். அன்றியும் இம்மகா வாக்கியமானது சாந்தோக்கிய உபநிஷத்தில் உத்தாலகமுனிவர் தமது புத்திரனாகிய சுவேதகேதுவிற்கு ஜகத்தை யுண்டுபண்ணும் ஈசனைக்காட்டித் தத்துவமசி என்று கூறினார். இங்கு தத் என்பது சர்வசக்திமானும், சர்வஞ்ஞனும், விபுவும், சுதந்திரனும், பரோட்சனும், மாயியும், பந்தமோக்ஷமின்றியவனுமாய ஈசனாம் என்றும்; துவம் என்பது அற்ப சக்திமானும், அற்பஞ்ஞனும், பரிச்சின்னனும், அநீசனும், கர்மாதீனனும், அவித்தியாமோகிதனும், பந்தமோக்ஷமுடையவனும், பிரத்தியட்சனுமாய சீவனாம். இங்குத் தத்துவமசி (அது நீயாயிருக்கிறாய்) என்றுரைப்பதினால் ஈசுவர ஜீவர்களின் அபேதம் வாச்சியார்த்தத்தால் விளங்குகின்றது.

இருபத்தோன்றாவது

# சூனியசிங்காதனகதி



வேறு

*அல்லமனையறிதற்கோரறிகருவியாகவுன்னிச்*
*சொல்லரியவெழுநிலைப்பொற்சூனியசிங்காதனமொன்*
*றில்லையெனவில்லையெனுமெங்கள்குருவசவேசன்*
*மல்லலுறவினிதாற்றிவைகுமுறைவகுத்துரைப்பாம்.* 1

*ஒடுக்குமனம்வீட்டுநெறிக்கொருதுணையாகும்புறத்து*
*நடக்குமனநிரயவழிநடப்பதற்குத்துணையாமென்*
*றிடக்கர்மனமடக்கும்வகையெம்பிரானியம்பியவா*
*றடக்கமனமுறுநெறியினருணந்திதலைப்பட்டான்.* 2

*நில்லாதுபோமனத்தைக்கால்பிடித்துநிறுத்தியே*
*வில்லாருமதியமுதம்விருந்திட்டுநெட்புறீஇப்*
*பொல்லாதபுலனுகரப்புறத்துநிலைதடுமாறிச்*
*செல்லாமலுடன்கொண்டுசித்திரமொத்திருந்தனனால்.* 3

*நின்றமனங்கொண்டுதானித்தமாந்தனையுணர்த்த*
*வென்றுவருஞானகுருவெனவெழுந்துவளர்காத*
*லொன்றுமொழிவறநிற்பவுவப்பதுலகிற்பொருள்வே*
*றின்றியருணந்திபிரானெனந்தைவரவினைநோக்கி.* 4

*எவ்வுருவினொடுவருமோவெம்பிரான்றெளியகிலேன்*
*செவ்வியவோர்தவிசமைத்துச்சேர்ந்ததன்மேலிருப்பவனை*
*யவ்வியமிலல்லமனெனறறிவன்யானென்றுதுணிந்*
*திவ்வுலகமுளம்வியப்பவிதுசெய்தானருணந்தி.* 5

---

(3) மதி-சந்திரன்; இது எல்லாராலும் மதிக்கப்படுவதென்பது காரணப் பெயர். இதை வேதாந்தநூலார் குண்டலிசத்தி யென்பர். அது இங்கு பூரணமான சந்திரனைக் குறிக்கும். இக்குண்டலிசத்தியானது பரவஸ்துவில் வாஸ்துவத்தில் அபேதமாயும், கற்பிதத்தில் பேதமாயு மிருக்கும். இதை எழுவகை நிலையென்பர் அதாவது: சுபேச்சை, விசாரணை, தனுமானசி, சத்துவாபத்தி, அசம்சத்தி, பதார்த்தாபாவனை, துரியம்.

## வேறு

ஆதியாதாரமாதியடுக்கெனப்பன்னிறத்த
சோதியேழ்நிலைகளோங்கச்சூனியபீடமொன்று
போதினேனுளம்வியப்பப்பொன்மணிபளிங்குகொண்டு
சாதிநான்மறைகள்போற்றுஞ்சைவநாயகன்செய்வித்தான். 6

காரணவுபாதியேழ்மேற்கண்டிடுஞானிபோலச்
சீரணிநுதலின்மீதுசென்றுகாண்யோகிபோலப்
பூரண்ஞானநந்தப்போதகனிருப்புக்காண்பா
னேரணிநிலைகளேழ்மேனிகழ்வெளித்தவிசமைத்தான். 7

களங்கமின்மதியம்போலக்கண்டவர்மனமலர்த்தும்
பளிங்குசெய்நிலையுள்வந்துபார்ப்பவர்மெய்ந்நிழற்போய்
விளங்குதறன்மேற்றோன்றவெங்தெரிபசும்பொனாற்செய்
துளங்கொளிநிலையைச்சென்னிசுமத்தல்போற்செய்தவொக்கும். 8

திருந்தியபளிங்குகொண்டுசெய்தவந்நிலையின்வாய்தல்
பொருந்துதநெறிகிலாராய்ப்புகுந்துகாண்மனிதரெல்லாங்
காங்கொடுதடவிக்கண்டுகண்டெரியார்கள்போல
வருந்தியமனமகிழ்ந்துவசவனைவியப்பரன்றே. 9

நினைவினுலொருவன்செய்தநெஞ்சுளாலயமேயன்றி
வினையினுலுலகர்செய்துவிளங்கியபணிகடம்மு
ளினையதோடுவமையாதலில்லையென்றும்பரெல்லாந்
தனையலானிகரிலாததவிசினைவியந்துநின்றார். 10

அம்பராசனமியன்றவதிசயங்கேளாமுக்கட்
டம்பிரானடியாராகத்தரையுளாரெல்லாஞ்சென்று
செம்பொனாலியன்றவந்தச்சீர்கெழுபீடநோக்கி
யெம்பிரான்வசவதேவனிணையடிதொழுதிருந்தார். 11

---

(6) சோதி யேழ்நிலை-பிரகாசம்; இது தீபத்தைப்போன்று தனது பிரகாசத்தில் பிறிதொன்றை யபேட்சியாது தான் எல்லாவற்றையும் பிரகாசிக்கச்செய்யும் சொற்பிரகாச வடிவம். இது விரிக்கில் பெருகும். இதை மூலாதாரம் முதல்சோதி யிறுதியாகச் சப்தநிலை யுடையன வென்பர். நான்மறை- இருக்கு யஜுர் அதர்வணம் சாமம் என்பர்.

கரையிதுகல்விக்கென்னக்கற்றவர்பலருமேத்தத்
தரைமிசையமைத்திருந்தசாரதாபீடமேபோ
லுரைமனமிறந்ததாமிவ்வொருதனிஞானபீட
மருட்டுருகுருகுகேசனன்றியேறிடுதற்காமோ. 12

இப்பெரும்பீடமேறியிருந்திடவல்லோனென்றும்
வைப்பெனும்படிமறைந்தெம்மனத்திருப்பதற்குவல்ல
வப்பெருங்கருணைக்குன்றமாகுமல்லமனேயென்று
செப்புறுபரிசிலானுய்ச்சிந்தைசெய்திருந்தானந்தி. 13

கரைபொருகங்கையாற்றிற்கண்ணிவைத்தரசவன்னம்
வருதலைநோக்கிநிற்கும்வாறுபோலிருள்விழுங்கிப்
பெருகொளிவிரிக்குஞானபீடமொன்றமையவாக்கிக்
குருபரன்வரவுநோக்கிக்கொண்டிருந்தனனெங்கோமான். 14

ஏட்டினைப்புதுநீராற்றிலெதிர்கிழித்தேறவிட்டோன்
பாட்டுடைத்தலைவனன்பர்பலருநம்வசவன்றன்னை
நாட்டமுற்றடையுமாசானமக்குமாமென்றிருந்தார்
வீட்டினுக்கேற்றுஞ்சோதிவிருந்திற்குமுதவுறுதோ. 15

இருபத்தோராவது

சூனியசிங்காதனகதி முற்றிற்று.

---

கதி 21 - க்கு திருவிருத்தம்-985.

---

(12) சாரதாபீடம்-சாஸ்வதிபீடம்.

## இருபத்திரண்டாவது

# சூனியசிங்காதனத்திலிருந்தகதி

### வேறு

பள்ளம்புகுபுனல்போனெறிபடருஞ்சிவனடியா
ருள்ளம்புகுமருணந்தியிவ்வுலகோரறியாமற்
கள்ளங்கொளுமனமோடுசெய்யணைமேலொருகருணை
வெள்ளங்கடிதேறுஞ்செயல்விருப்பாலெடுத்துரைப்பாம். 1

சிரனுடுறுகயலாடல்செய்செந்நாடுடையுழவ
ரானுடுறுமொருகாவிரியறனுடுறுமுறைபோற்
பானுடுறுமடியார்வினைபரியத்திரிகுரவன்
வானுடுறுமுருகும்பரவசவன்புறவசவன். 2

பொன்னுனைமைகதிர்வீசணைபுரிந்தீராறுபருவம்
பின்னுயினையான்செய்தொழில்பிள்ளைத்தொழிலாயிற்
றெந்நாள்வருமெனையாளுடையெம்மானறியேனென்
றுன்னுவருதுயரோடுளமுளைந்தான்வினைகளைந்தான். 3

இவ்வாறமர்நாளோர்பகலெலமையாளுடைவசவன்
செவ்வாறுசென்மனத்தல்லமதேவன்வரனேன்றிற்
றவ்வாறதுநிகழ்வுற்றவனுர்வந்தனையொருநா
னெவ்வாறுரைசெய்வன்பணியிறையுஞ்சொலவரிதால். 4

வலமாடினவிழிதோளருள்வசவற்கதிதூரஞ்
செலுமாடவன்வருநாள்விழியிடமாடியசெயல்வாய்
குலமாதுளமெனவேமகிழ்கொண்டன்புநிறைந்து
மலமாயைகடுரக்குஞ்சென்னவசவற்கிதுபுகல்வான். 5

---

(1) செய்யணை-விசித்திரமாகச் செய்தமைத்த சிங்காதனம்.

(2) பரன்-மேலானவன்; அதாவது பரத்துவத்தைக் கொடுக்குங் கடவுள்.

(3) அறுபருவம்-கார் கூதிர் முன்பனி பின்பனி முதுவேனில் இளவேனில் என்பனவாம். இவை முறையே ஆவணி புரட்டாசிமாதங்களைக் காரெனவும், ஐப்பசி கார்த்திகை மாதங்களை கூதிரெனவும், மார்கழி தை மாதங்களை முன்பனியெனவும், மாசி பங்குனிமாதங்களைப் பின்பனியெனவும், சித்திரை வைகாசி மாதங்களை இளவேனிலெனவும், ஆனி ஆடிமாதங்களை முதுவேனிலெனவுங் கூறுநிற்பர் என்பதாம். பிள்ளைத்தொழில்-விளையாட்டுத்தொழில். வினை-பூர்வஜன்மகருமம்; இங்கு பொதுவாக வினையென்று குறித்தமையால் தீவினை நல்வினை இரண்டையும் உளப்படுத்திக் கூறியதென்க. (5) மலம்-மூன்று வகையான குற்றங்கள். அவையாவன: ஆணவம் கர்மம் மாயை.

வேறு

*நற்குறிபலவுமிற்றைநாணிகழ்கின்றவென்பால்*
*வற்கலைமுனிவர்போற்றும்வசவவந்நிகழ்ச்சியானும்*
*பிற்பெறுபயன்யாதென்றுபெருந்தகைவினவநின்ற*
*சிற்பரமுணர்ந்தசென்னவசவதேசிகனுரைப்பான்.* 6

*ஐயவிந்நிமித்தந்தன்னாலல்லமன் காண்பையின்று*
*மெய்யுரையிதுகாணென்னாவிடுத்தனன்மருகனெங்கள்*
*கையுறுமமுதனான்றான்கருதியபடிவிண்ணப்பஞ்*
*செய்யவுமகிழ்வுபூத்துச்செயல்செய்வார்க்குரைக்கலுற்றான்.* 7

*உடம்பெனும்வனத்தினின்றவுயிரெனுங்கன்னிதன்னைத்*
*தொடர்ந்திசைமணத்தாற்சேர்ந்ததுணைவனல்லமனின்றெய்து*
*மடைந்தருள்கல்யாணத்தையணிமினென்றெந்தைகூற*
*நடந்தனர்நன்றென்றன்னார்நகரியோர்க்குணர்த்தினால்.* 8

*அலர்கதிர்ஞாயிறாருமணிநெடுந்தேர்க்கொடிஞ்சி*
*விலகுறவதிற்றாக்காமன்மேலளவொருசாணிற்பப்*
*பலர்புகழ்மணிமாடத்துப்பறக்குமொண்கிளியொழுங்கி*
*விலைசெருகியபசும்பூந்தோரணமிசையவார்த்தார்.* 9

*போதகக்குருநம்மூருட்புகக்கொடிகட்டனன்றென்*
*றாதரவொடுமசைத்தாரவிர்கொடிமாடத்தும்பர்*
*சோதிதன்னிரதமென்றுஞ்சுழன்மெனநகுதல்போல*
*வீதியுளாடியோடுவிளங்குறுநிலைத்தேர்செய்தார்.* 10

*குங்குமநறியசந்தங்குழைத்ததண்பனிநீர்சிந்திப்*
*பொங்கெழின்மறுகனைத்தும்புதைசெழுஞ்சேறுசெய்தார்*
*மங்கலமனைமுன்பந்தர்மணப்பந்தருண்மையாகக்*
*கொங்கவிழிதழ்நறும்பூங்கோதைகடூக்கினால்.* 11

*வயலிடஞ்சேர்ந்துநின்றவாழையுங்கரும்பும்பாளை*
*யுயரிளங்கமுகுமொன்றோடொன்றுநின்றுசாவித்தாமெல்*
*லியருந்தொடைதோள்கண்டமெனுமுறுப்பழகிரக்குஞ்*
*செயலில்வந்தடைந்தவென்னச்செழுங்கடைத்தலைமுனார்த்தார்.* 12

---

(6) முனிவர்-உலகப்பற்றைத் துறந்தவர். சிற்பரன்-பரமசிவன்.
(8) கன்னி-பெண். வனம்-காடு, தண்ணீர். (9) கொடிஞ்சி-தேர்ச்சீலை.
(11) மறுகு-வீதி. கோதை-மாலை. கொங்கு-வாசனை.

இலையினாற்பொலிந்தவாழைதொடையினாலெய்தும்பேறு
முலையினாற்பெறுவமென்றுமுன்னிவந்திருத்தல்போலக்
கலையினாற்சிறந்தவல்குற்கயற்கணார்நிறைகுடங்கள்
விலையினாற்சிறந்தசெம்பொன்வேதிகைமீதுவைத்தார். 13

மனத்திருளகற்றுநின்றமணிச்சுடர்வரவுபார்ப்ப
நினைத்துவந்திருத்தல்போலநெடுமணிக்கதவுவாய்தன்
முனைத்திருவிளக்குவைத்தார்முகிழ்முலைக்கருநெடுங்கட்
டனிச்சிலைநுதற்பூங்கோதைச்சரிகுழற்றளிர்க்கைநல்லார். 14

அல்லமகுரவன்றன்னையருணந்தியோடுகாணச்
செல்லுவமென்றுசெம்பொற்சீர்கெழுவிமானத்தோடு
மொல்லையினிலத்திழிந்தவும்பர்வாழ்மகளிர்போல
வில்லெனுமருங்குன்மாதரிருந்தனர்நிலைத்தேரேறி. 15

திருநகரிதனையின்றுதிருந்தவேறலங்கரிப்ப
நெருநலுள்ளனகழித்துநீத்தவையமரர்கோமா
னொருநகரலங்கரித்தற்குரியனவென்னினந்தி
பெருநகரணியின்மிக்கபெருமையார்கூறவல்லார். 16

இன்னணமலங்கரித்தவெழின்மணிமறுகினூடு
மன்னவர்மன்னனுய்யமந்திரிக்கிழமைபூண்டோன்
றன்னொருகுரவன்றன்னைத்தானெதிர்கொள்ளவேண்டிப்
பொன்னவிர்கோயினின்றும்புறப்படாப்போதலுற்றான். 17

பதியுமப்பதியாற்காணும்பசுவுமப்பசுவின்ஞானம்
பொதியுமைம்பாசந்தானும்பொருளெனவழக்கிற்கூறும்
விதியுமப்பாசம்பொய்யாய்வேறறும்வீடுமோதி
மதிமயக்கறுத்தசென்னவசவனுமருங்குசென்றான். 18

எம்மடிமாசுமுக்கணிறையவனடிமைபூண்டோர்
தம்மடிமாசுநீக்குந்தன்றொழினெறிவழாத
செம்மடிவாலமாச்சதேவனுமன்புதாயின்
மும்மடியாகுநந்திமுதல்வனோடுருகுசென்றான். 19

சங்கரன்சடையிற்பாம்புந்தவழ்ந்தெதிர்கிடந்தபிள்ளைத்
திங்களுஞ்செய்தவொப்பச்செங்கைமானவசமாகக்
கங்கையுந்திரையடங்கக்கானமுன்பாடியீச
கிங்கரன்றனதுபாங்கர்கின்னரப்பிரமன்சென்றான். 20

(13) வேதிகை - மேடை. (16) நெருநல் - நேற்றையதினம். அமரர் கோமான்-தேவேந்திரன். (20) பாங்கர்-பக்கம்.

தண்டினர்கரகக்கையர்சடையருத்தூளனத்தர்
புண்டரநுதலர்கற்றேய்பூந்துகிலுடையர்நீல
கண்டனையகம்புறத்துங்கண்டவர்வினையினீங்கித்
தொண்டுறுநெறியினின்றோர்சூழ்ந்தனரெண்ணிலாரே. 21

தோள்வலந்துடித்தநின்றுசுடரிலேவேற்புஞ்ஞான்று
கோள்வலங்கொள்ளுஞ்செம்பொற்குன்றெனுமார்பிற்காண்பேம்
வேள்வலங்கொண்டநெற்றிவிழியிறையருளாலென்னும்
வாள்வலங்கொண்டசேனைமறவர்வாரிதிபோற்சூழ்ந்தார். 22

எங்கள்வாழ்வனையநந்தியெழுந்தருண்மறுகினூடு
மங்குல்வானிரவிப்புத்தேண்மணிநெடுந்தேர்ப்பைங்கிள்ளை
தங்கள்காற்றாட்குடைந்துதரிப்பரிதாகியோட
வங்கண்மாஞாலமெல்லாமதிர்தரநடந்தவம்மா. 23

அரவொடுமண்சுமக்குமடுகளிறெட்டோடும்போர்
பொரவொருகளிநல்யானைபோதுமென்றெண்ணிலாத
விரவொடுபுரைநிறத்தவீர்ங்கவுட்சிறுகட்டுங்கு
கரவளைவெண்மருப்புக்கடாக்களிறெழுந்தவன்றே. 24

ஆனைமேற்கொண்டும்வாவுமாடல்வெம்பரியிவர்ந்துங்
கூனல்வேய்தொடுத்துஞான்றகுச்சுடைச்சிவிகையூர்ந்துஞ்
சேனைகாவலரெண்ணில்லார்சிலைமதன்கோலமென்ன
மானவேன்மன்னர்மன்னன்மந்திரிமருங்குசென்றார். 25

நலங்கிளர்மதன்குடைக்குநகைமணிக்காம்பிலென்ன
விலங்குறுபசும்பொற்காம்போடெண்ணில்வெண்குடையெழுந்த
புலன்களைவென்றவீரன்போகியமறுகிலெங்கும்
விலங்கினையன்றியந்தவிலங்கின்வாலாடிற்றன்றே. 26

மாயைதன்றேல்வியெல்லாமாதர்க்கும்வந்தவன்றே
நாயகன்றன்னைப்பற்றிநாம்வென்றிகொள்வமென்று
போயுறுதன்மைபோலப்புணர்முலைக்கருநெடுங்கட்
டேயுநுண்மருங்குன்மாதர்திரள்பலவெழுந்தவன்றே. 27

---

(21) புண்டரம்-சைவர்கள் விபூதியால் மூன்று கீற்முக நெற்றியிலிடும் திருநீறும். (22) கோள்வலம்கொள்ளல்-சந்திர சூரியர் பிரதக்ஷணம் வருதல். (23) மங்குல்-மேகம். (24) கடாக்களிறு-மதம்பொருந்திய ஆண் யானை. கவுள்-கபோலம்.

பரிகளின்முழக்குமிக்கபல்லியமுழக்கும்பூட்கைக்
கரிகளின்முழக்கும்வீரக்கழலொடுசெல்லும்வெங்கோ
ளரிகளின்முழக்குமாதரணிகளின்முழக்குஞ்செங்கைச்
சரிகளின்முழக்கும்விம்மித்தடங்கடல்போன்றவன்றே. 28

ஆடுவகவரியெங்குமசைவனசிவிறியெங்கு
மூடுவகுடைகளெங்குமுழங்குவவியங்களெங்கும்
பாடுவவிசைகளெங்கும்பாய்வனகரிகளெங்கு
மோடுவபுரவியெங்குமுயர்வனதூளியெங்கும். 29

கரிகலமசையாநின்றகவரிகணுரைகண்மொக்குள்
விரிகுடைமதுகைவீரர்விதிர்க்கும்வாளுகண்மீன்பாயும்
பரிதிரைமுழக்கமார்க்கும்பல்லியமுழக்கமாகப்
பொருகடலெனவெழுந்துபோயதுவசவன்சேனை. 30

வேறு

இன்னவாறெழுந்திரளொடுநந்தியெம்பெருமான்
றன்னைநேர்குருபரனெதிர்சென்றவன்றாளைச்
சென்னியால்வணங்குவனெனுமோகையாற்சென்றான்
றன்னும்வானவர்தொகுதியும்வியப்பொடுதுதிப்ப. 31

அத்திறஞ்செலுஞ்செலவினையகங்குருட்டமணர்
புத்தர்கண்டிவரென்கொலோவறிதெதிர்போதல்
பித்தனென்றுதம்மிறைவனைச்சொல்லுமிப்பேய
ரெத்திறஞ்செயாரெனச்சிவசரணரையிகழ்ந்தார். 32

மன்னன்விச்சலன்பாலடைந்தருகரெம்மன்ன
நின்னகர்க்கொருபுதுமையொன்றுற்றதுநீகே
ணன்னிமித்தமொன்றெய்தியதேகொடுநந்தி
தன்னிடத்தொருவன்வருமென்றெதிர்சாரும். 33

தண்டநாயகன்றோள்வலந்துடித்ததுதன்னைக்
கொண்டுதான்வருங்குருபரனென்றெதிர்கோடல்
கண்டவோர்கனவிற்பெறுமடிசிலைக்கருதி
யுண்டுபோம்விருந்தினர்தமைத்தேடுதலொக்கும். 34

(28) பரி-குதிரை. பல்லியம்-வாத்தியம். பூட்கை-தும்பிக்கை. கோளரி-சிங்கம். (31) ஓகை-சந்தோஷம்.

ஒருவன்வந்திடுமெனவெதிர்கடற்படையொருங்கு
பாவிவந்திடச்செலுமிவன்றன்னைநீபார்த்துப்
பொருவின்மந்திரக்கிழமைநல்கியவுனைப்போல்வா
ரரவின்வன்றலைப்படிமிசையிலையெனவறைந்தார். 35

அருகர்வாசகங்கேட்டலுமுளம்வியந்தடிகேள்
விரகினான்மிகுதண்டநாயகனுமெவ்விளைவு
கருதினான்கொலோவறிகிலமுடிவுறக்காண்பம்
வருகநீரிருமின்களென்றிருந்தனன்மன்னன். 36

தண்டநாயகன்றனதுளந்தங்குறத்தானத்
தண்டநாயகன்றன்மனந்தங்கியதலைவன்
றண்டநாயகன்றனையிகழ்சமண்செருக்கழியத்
தண்டநாயகனெதிர்செலநினைந்தனன்றனித்து. 37

என்னைக்காண்குவனெவ்வகைசெல்லினுமென்று
துன்னற்கோவணமொடுவிரிகுஞ்சியுந்தோன்றத்
தன்னைக்காண்குநர்பித்தனென்றெள்ளவென்றனக்குப்
பொன்னைப்போலுநல்வசவனாயகனெதிர்போனான். 38

வேறு

மருவினின்றவரிவன்மருளனேயென
விரைவிலிங்ககலகவெனவிலக்கினா
ரொருவருங்கண்டிறையுருவுணர்ந்தில
ருருவுகண்டெள்ளுநருணரவல்லரோ. 39

அல்லமனாயிடையாடலுன்னியே
பல்லெழுவாயுடைப்பாலனாகுவன்
கொல்லிளவேறெனக்குமாரனாகுவன்
வில்லெனவுடல்வளைவிருத்தனாகுவன். 40

விஞ்சையர்மகிழ்வுறவீணையொன்றுகைக்
கஞ்சமென்மலர்கொடுகானம்பாடுவ
னஞ்சனவிழிமணியரிச்சிலம்படி
வஞ்சியர்மனமயல்வளரவாடுவன் 41

---

(35) படி-பூமி. மிசை-மேல். (36) விரகு-தந்திரம். (38) குஞ்சி-ஆண்மகன் தலைமயிர். (41) விஞ்சையர்-வித்தியாதர உலகத்தவர். கஞ்சம்-தாமரை. அஞ்சனம்-கண்ணிலிடும் மை.

இந்திரனிவனெனயானைமேற்கொளா
வந்தொருபுடைநரர்மருளத்தோன்றுவன்
பைந்தொடிபெயர்தருபாணிபோலவே
பந்திமுன்முடங்குளைப்பரிநடத்துவன். 42

வானிடைக்கண்டனன்மனையிற்கண்டனன்
சேனையுட்கண்டனன்றெருவிற்கண்டனன்
யானெனக்கடிநகரெங்குந்தோன்றுவன்
ஞானநற்கண்ணினாற்காணுநம்பனே. 43

ஆடுநர்தம்முடனாடுநல்லிசை
பாடுநர்தம்முடன்பாடுமென்மலர்
சூடுநர்தம்முடன்சூடும்வாள்விதிர்த்
தோடுநர்தம்முடனோடுமல்லமன். 44

பொருவிலாவளநகர்பொருந்துமானிடர்
வரைவிலாவாடலிவ்வகைசெய்கிற்பவ
ரொருவரோபலர்கொலோவுணர்கிலோமென
வெருவினாரல்லமன்விநோதநோக்கியே. 45

மண்ணிடைமறைவுறுநிதியவைப்பினைக்
கண்ணிடுமஞ்சனக்காரன்காண்கைபோ
னண்ணிடுமுணர்வுடைநந்தியெம்பிரா
னண்ணலையறிந்தனனையமின்றியே. 46

உடம்பெலாமுள்ளமாயுருகிக்கண்கணீ
ரடங்குறுதொழுகமெய்விதிர்ப்பவன்பிறற்
றொடர்ந்தெலாவுயிரையுந்தொண்டுகொண்டரு
ணெடுந்தகாயருளெனநிலத்திறைஞ்சினான். 47

தண்டநாயகனிலந்தண்டிற்றாழ்ந்தெழத்
தொண்டராயவரொடுதுன்னினாரெலாங்
கண்டுநீர்விழியுகக்கசிந்தவன்பினா
லண்டநாயகன்றிருவடியிறைஞ்சினார். 48

நந்திதனன்பையுநந்திபால்வரு
மெந்தைதன்னருளையுமென்சொல்வாமெனச்
சிந்தினர்மலர்மழைதேவர்யாவருந்
துந்துமியதிர்த்தனர்தொண்டரார்ப்பவே. 49

(42) முடங்குளை-வளைந்தமயிர். (46) நிதியம்-திரவியம். வைப்பு-புதையல்.

மயலிலாநங்குருவசவன்வாழ்தரு
மியலினாலல்லமனெண்ணிவந்தருள்
செயலினாலடியவர்திரள்களித்தலாற்
கயிலையேவளங்கெழுகல்லியாணமே. 50

தெரியநற்றண்டநாயகன்றன்செய்கையும்
பெரியவக்குருபரன்பெருமைதன்னையுங்
கரியமெய்ச்சமணர்தாங்கண்டுமன்பில
ரரியவற்றரிதழுக்காறுவெல்வதே. 51

தந்திரமுடிவெனுஞ்சைவதேசிகன்
வந்தெதிர்தனதுதாள்வணங்கினாரொடு
செந்திருமகளுலாந்தெருவுட்போகியே
நந்திதன்மந்திரநணுகினானரோ. 52

தேவருமுனிவருஞ்சித்தராகிய
யாவருமிதனியலின்னதென்றுளத்
தாய்வருநிலையுடையம்பராதன
மூவருமடிதொழுமுதல்வனோக்கினான். 53

அசைவறுமறிவுருவாகுமல்லமன்
றிசையுறுமணியணைச்சென்னிமீமிசை
வசையறுவழிநடைவசவதேசிக
ணிசையமருலகிடையேறவேறினான். 54

கூறருமொளியுடைக்குதிரைத்தேரினான்
வேறொருமணிமயவெற்பிவர்ந்தெனத்
தேறருமணைமிசைதேசிகோத்தம
னேறலுமலர்மழையிழிந்தவென்பவே. 55

முரசொடுபல்லியமுழக்கெழுந்தன
துரிசறுமடியவர்தொகுதிகைகுவித்
தரகரவெனுமொலியண்டகூடமட்
டொருகணமொடுங்குமுன்னோடிற்றென்பவே. 56

---

(51) *அழுக்காறு-பொறாமை.
(52) மந்திரம்-வீடு.
(56) கணம்-ஓர் சிறிய கால அளவை.

வேறு

முதனிலைமுதலாமூவிருநிலையின்மூலமாமுதலவாதார
விதழவிழ்கமலப்பொகுட்டினுணின்றவிலிங்கமோராறெனநின்று
நுதன்மிசையிலகுநிட்களம்போலநுவன்றவேழாநிலையாகு
மதன்மிசையமலனல்லமதேவனமர்ந்தனனமரரும்வியப்ப. • 57

உடம்பொடுபொறிநாற்கரணமற்றுயிரென்றுரைத்திடப்படுமுபாதிகளைக்
கடந்துளநிலையிற்சோதியாயிலங்கக்கண்டிடுதுரியனைப்போல
நெடுந்தவிசமையவமைத்தசெம்மணிப்பொன்னிலைகளோரேழையுங்கடவா
விடந்தனிவிசும்பென்றல்லமனிருப்பவிருந்தவர்யாவருங்கண்டார்.

ஆடினர்சிலவரங்கைகள்கொட்டியல்லமன்பெரியதோர்புகழைப்
பாடினர்சிலவர்விழிபொழிவெள்ளம்பாய்வுறக்குவித்தகைதலைமேற்
சூடினர்சிலவர்நிலமிசைவீழ்ந்துதொழுதனர்சிலவர்மெய்ப்புளக
மூடினர்சிலவர்பரவினர்சிலவர்முக்கணனடியவரன்றே. 59

இந்தியம்விடயங்கரணமெய்யென்னுமியாவையுங்காண்கிலேனுங்கு
மந்தரவணைமேலிவர்ந்திருந்தருளுமண்ணலைக்கண்டவப்பொழுதே
முந்தியபரமாநந்தவாரிதியுண்மூழ்கினனமுந்தினனம்மா
தந்திரமெவற்றுஞ்சிறந்ததுசைவதந்திரமெனுமருணந்தி. 60

மண்டலமவத்தைகுணமபிமானமலமிவையனைத்தையுங்கடந்துட்
கண்டிடும்வண்ணம்புறத்துநீயெம்மைக்காணியவமைத்தவிச்செய்கை
வெண்டிரைசுருட்டுங்கருங்கடலுலகில்வேறுளர்செய்வதன்றென்று
தொண்டர்கடுதிக்கும்வசவனைத்துதித்தான்சுரரெலாந்துக்குமெம்பெருமான்.

உன்னருளுளதேற்கமலன்மாறெழிலுமொருசிறுதுரும்புசெய்கிற்கு
மென்னநல்வசவன்புகன்றுகைகூப்பியிணைவிழிபுனலுகவுருகித்
தன்னுணர்கிலனுய்வசமறநிற்பத்தண்கதிர்ச்செம்மணிகுயின்ற
பொன்னரியணைமேல்விசும்புறவிருந்தான்புல்லருமல்லமதேவன்.

இருபத்திரண்டாவது

சூனியசிங்காதனத்திலிருந்தகதி முற்றிற்று.

---

கதி 22 - க்கு திருவிருத்தம் - 1047.

---

(58) துரியம்-சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி என்னும் மூன்றவத்தைகளையும் அறிவதாகி நான்காம் பொருளா யிருத்தலின் துரியமென்றது ஆன்மாவை.

இருபத்துமூன்றவது

# ஆ ரோ க ண க தி

வேறு

ஒருவருண்ணவொருவர்பசிகெடார்
தரையிலென்னுந்தருமொழிபொய்த்திட
வருளினல்லமனுரும்பசிகெட
விரவியுண்டமிகுதிவிளம்புவாம். 1

தண்ணந்திங்களிற்றண்ணெனத்தண்கதிர்
வண்ணங்குன்றுறுஞாயிறுவார்சிலைப்
பண்ணங்குன்றுறுபான்மையினுதனத்
தெண்ணந்தேவனிருந்தருள்காலையில். 2

வசவனுள்ளம்வயல்புகுநீரென
விசயனல்லமன்மேனிவடிவமா
யசைவிலன்பிறிதொன்றுமறிந்தில
னிசையுமோவியமென்னவிருந்தனன். 3

கழுமணித்தவிசென்னுங்கலத்திடை
யழிவறத்திகழல்லமனுகிய
செழியநற்சுவைதென்னவசவனும்
விழியினுக்குவிருந்திட்டனனரோ. 4

முனிவினைக்கொலுமோளிகைமாரனும்
வினையினைத்தெறுமெய்ம்மடிவாலனுந்
தனைநிகர்க்குந்தவிசமர்பூவினை
மனமெனப்படும்வண்டுறவிட்டனர். 5

முன்னிருந்தமுதுக்குறைவாளரும்
பின்னடைந்தபெரியருமாகிய
மன்னிருந்தமணித்தவிசின்புடைத்
துன்னியெங்கணுஞ்சூழ்ந்தனர்தொண்டரே. 6

---

(3) ஓவியம்-சித்திரம்.

புண்டரந்திருநெற்றியிற்பூசிமெய்க்
கண்டியென்னுங்கலனணிவார்சிலர்
பண்டைநான்மறையின்பயனாகவே
கொண்டவஞ்செழுத்துங்குறிப்பார்சிலர். 7

நந்தனந்தருநாண்மலர்மஞ்சனஞ்
சந்தனஞ்சுடர்தண்புகையாதிகொண்
டிந்தியங்களெலாமடங்குள்ளமோ
டந்திவண்ணனையர்ச்சிப்பரோர்சிலர். 8

தாவில்பூசனைதாம்புரிகிற்பதிற்
பாவெலாஞ்சொலப்பட்டிடுமைம்புலக்
காவல்செய்யுங்கருத்துடையார்தமக்
கேவல்செய்தனன்றென்றுசெய்வார்சிலர். 9

பூசனைத்தொழில்பூண்பதினெண்மடங்
கீசனைத்துதித்தேத்துதனன்றென
ஊசலொத்தவுளமிலராய்ப்புலத்
தூசிநிற்பத்துதிப்பவரோர்சிலர். 10

அங்கலிங்கமயக்கமிதுவென
மங்கலந்தருமாமறையின்முடித்
தங்குறுந்தத்துவமசிதன்பொருள்
பங்கமின்றிப்பகர்பவரோர்சிலர். 11

பாசமேதுபசுவெனப்பட்டதே
தீசன்யார்பதியெவ்வகையாருயிர்க்
காசுதீரவருளுமருளுடைத்
தேசிகாவெனத்தேர்பவரோர்சிலர். 12

புறந்தினஞ்செயும்பூசையினன்றெனச்
சிறந்தகஞ்செய்தியானமருவிமெய்ம்
மறந்திருந்தமனஞ்சிவலிங்கமுற்
றிறந்திடுந்திறமெய்தினரோர்சிலர். 13

---

(7) நான்மறை-நான்கு வேதங்கள்.

(8) நாண்மலர்-அன்று பூத்த மலர்.

(12) இப்பாடலில் பதி பசு பாச விளக்கத்தைக் குருவின்வாய்க் கேட்டுணர்தலே முறையென்பதை விளக்குவது காண்க.

ஓடிநீளுமுயிர்நின்றிடாதெனி
னீடுமாமனநிற்பதன்றுதலால்
வீடுமேவரிதென்றுவிதிமுறை
நாடிவாயுநலிபவரோர்சிலர். 14

இனையராகியிருந்தவக்காலையி
லனையனுகியவல்லமன்றன்னிடை
நினைவெலாமுறநின்றுதமதிடை
மனமிலாதவசவனைக்கண்டனர். 15

## வேறு

பெரியவர்சிறியவரென்னும்பெற்றிமை
யரவணிகடவுடனடியர்தம்முளே
தெரிபவனெவனவன்சிறியனேயென
விரிவுறுமறையெலாம்விளம்புமென்பவே. 16

ஆவுரித்திடினுநீறணியுமன்பனம்
மாவுரித்தவனெனவணங்கத்தக்கவன்
பூவுரித்தவன்பதம்புனையப்போற்றுற
நாவுரித்தெனமறைநான்குமோதுமால். 17

வந்தவர்வருபவர்வருகின்றார்களா
மந்தமிலடியர்மாட்டாற்றுஞ்செய்கையைச்
சிந்தனைசெய்கிலன்றேசிகன்செயு
மிந்திரசாலமுற்றிருந்துநந்தியே. 18

பத்தியிற்றவறினேன்பாலிருந்துநாந்
துய்த்துடற்சுமப்பதிற்றுறத்தனன்றென
மெய்த்தவக்குழாமெலாம்வெகுண்டுபோயின
வத்தனற்றண்டநாயகனைவிட்டரோ. 19

துன்றியமெய்த்தவர்துறந்துபோயபின்
மன்றல்செய்மற்றைநாண்மனையையொத்தொரு
தன்றனிநற்புரந்தனிப்பக்கண்டன
னன்றறிநற்செயனந்திதேவனே. 20

வழுவினனன்புசெய்வழியையின்றுநான்
குழுவுறுமடியவர்க்குறித்துசெய்தவிவ்

(14) "ஓடி மீளும்" என்றும் பாடம்.
(17) ஆ-பசு. (20) மன்றல்-கலியாணம்.

வொழிவறுமடிசிலுண்டொழிந்திடாதுதீர்ந்
தழிவுறுமேயெனவகந்தளர்ந்தனன். 21

சங்கமபத்திசெய்தண்டநாதனே
சங்கமபத்திசெய்தகைமைபூண்டுநான்
சங்கமபத்தியிற்றவறினேனென்றாற்
சங்கமபத்திசெய்தன்மையெண்மையோ. 22

இழிப்பினும்வெறுப்பினுமில்லினுள்ளன
வழிப்பினுமுடம்பினையரிந்துகொல்லினும்
பழிப்பறுசங்கமபத்திசெய்பவ
னொழிப்பதுபிறவியென்றுலகமோதுமே. 23

இம்முறைசங்கமபத்தியெய்திய
வெம்முடைநந்திதனெண்ணமுற்றுற
வம்மடையடிசிலுண்டலமன்மாதவர்
தம்முறுபசியெலாந்தணிப்பவுன்னினான். 24

ஒருவன்யான்சிறுபசியுடையன்சிற்றுணா
விரைவுறவிடுதிநீவேண்டுமாறுபின்
பரிவுளவடியவர்பாற்செயென்றனன்
பொருவறுவசவனைநோக்கிப்போதகன். 25

ஐயனுமுனிவுறாதருளும்வண்ணம்யான்
செய்யுநல்வினையெனமகிழ்ந்துதேவனைப்
பையவுண்மனையிடைப்பணிந்துகொண்டுபோய்ப்
பெய்யுமென்மலர்மணிப்பீடத்தேற்றினான். 26

ஏற்றியவருள்வசவேசனெம்பிரான்
காற்றுணைமலர்களைக்கந்தமஞ்சன
நாற்றமென்மலர்நறும்புகைவிளக்கெனப்
போற்றியவிவைகொடுபூசைசெய்தனன். 27.

---

(22) சங்கமபக்தி - வீரசைவர்கள் செய்யும் பக்தியாம். இப்பக்தியை வேறுவிதமாகவுங் கூறுவார்கள். அதாவது: கடவுளிடத்துப் பூசிக்கத்தக்க புத்தியோடுண்டாகும் பிரீதியே பக்தியெனப்படும். இது மனத்தினாற் செய்யும் பக்தி, வாக்கினாற்செய்யும் பக்தி, காயத்தினாற்செய்யுழ் ப்க்தி, இலௌகிக பக்தி, வைதிகபக்தி, ஆத்தியாத்மிகபக்தியெனப் பலவாம்.

(26) பைய-மெல்லல.

பூசனைசெய்தபின்போற்றிநின்றுபொற்
பாசனமமைத்துமென்பதம்படைத்துமேல்
யோசனைகைகமழ்கறியுமொள்ளிய
போசனமுறையிடப்புரிந்துநந்தியே. 28

அருந்துகவெனவடிதொழலுமக்கலந்
திருந்தியவமுதுளோரவிழுஞ்சேடியா
தருந்தினனோரிமைப்போதினல்லமன்
பொருந்தியவவரிறும்பூதராகவே. 29

பின்னருமம்முறைபெய்யவையனவ்
வன்னமுமம்முறையருந்திப்பின்னரும்
பின்னருமம்முறைபெய்யவுண்டனன்
றன்னுளம்வியந்தனன்றண்டநாயகன். 30

சிறுச்சிறிதனமிடுஞ்செய்கையாலரு
ளிறைக்கெழிலுதரவெந்நெருப்பெழுந்ததால்
விறற்கனலம்முறைவிறகிடக்கனன்
றுறப்பெரிதெனவெழுந்தோங்கல்போலவே. 31

எண்ணியவெண்ணியாங்கியற்றுமேவல
ரண்ணலும்வருகெனவழைத்துநம்மனைப்
பண்ணியபதமெலாம்படைமினென்றலுந்
துண்ணெனவனமிடுந்தொழிறொடங்கினார். 32

வேறு

அளவறுமடியர்க்கெல்லாமாக்கியவடிசிற்குன்றங்
கொளவுறுகூடையோடுகூடைகடாக்கக்கொண்டு
வளமுறுகயிலைக்குன்றம்பெயர்த்திவண்வைத்ததென்னத்
தளவுறழடிசிலெங்கடம்பிரானெதிர்குவித்தார். 33

பருப்பொருபொருப்பெனத்தாம்படைத்தனர்சிலரெடுத்து
விரைப்புதுநெய்கவிழ்த்துவிடுத்தனர்சிலர்மணக்கும்
பொரிக்கறிபளிதம்பாகுபுளிங்கறிபலவுமெல்லா
நிரைத்தொருசிலர்சொரிந்துநின்றனர்முகில்கள்போல. 34

வடைபடுதிகிரியாகமாங்கனிகவண்கல்லாக
வுடைபடுகழைக்கரும்பங்கொண்கதையாகக்கொண்டு
கடைபடுமுலகிற்கெல்லாங்காரியகருத்தன்முன்னர்ப்
படைபடையெனச்சொரிந்தார்படைமுகத்திளைஞர்போல. 35

---

(31) ஓங்கல்-மலை.

குளங்கரையாகவந்தக்குளத்தினுட்பசுவின்றீம்பால்
விளங்குறுமமுதவேலைவிடுத்தெனவிட்டார்சில்லோ
ருளங்கனிமூவர்செய்யுளொத்தமுக்கனியுமேனோர்
வளங்கெழுதொடர்புபோலுமற்றையபழமுந்தூர்த்தார். 36

எண்ணிலரிடுவவெல்லாமினியனவின்றுவென்றான்
கண்ணிமையொடுங்குமுன்னர்க்கடிதயின்றுதவுறுமல்
வண்ணமென்மலர்க்கைவாங்கிவறிதிருந்தனனெங்கோன்றேர்ப்
பண்ணவன்பரிக்குமேடுபள்ளமென்பனவங்குண்டோ. 37

சற்றினுமுண்கவென்றுதமருபசரியாவண்ணஞ்
சற்றினுமிடுகவென்றுதம்பிரானுண்ணுநின்றான்
மற்றிதுகண்டுநின்றோர்மட்கலமொழியவேறு
பற்றிலையென்றுநந்திதிருமுகம்பார்த்துச்சொன்னார். 38

உண்விளையாடல்செய்யுமொருவனைக்கண்டுவேண்மேற்
கண்விளையாடுநெற்றிக்கடவுண்மெய்யடியாரெல்லாம்
விண்விளையாடுஞ்சோலைவியனகரிடத்திற்செல்வப்
பெண்விளையாடுந்தம்மிற்பேரனமிடுதற்கெண்ணி. 39

பாண்டின்மேலேற்றிவந்தும்பானையிற்சுமந்துவந்தும்
வேண்டியபாகமுற்றுவேறுவேறாயவன்ன
மாண்டகைக்குரவனுண்ணவளவிலர்சொரிந்துயர்த்தா
ரூண்டழல்வெறுக்கும்வண்ணமூட்டுவமென்பார்போல. 40

மலையெனவமலஞானவாரிமுன்சொரிந்துயர்ப்பா
ரிலைமலர்பசுங்காய்கந்தமிளஞ்செழுந்தண்டாற்செய்த
வுலையமைபல்காயம்பெயொண்கறியமுதுவேறு
பலபலமுறைமயங்கப்படைப்பர்வல்விரைந்துவந்து. 41

குய்கமழ்கறிகளிட்டுக்குவிப்பவர்சிலரெடுத்து
நெய்கவிழ்கையராகிநிற்பவர்சிலர்நிரம்பப்
பெய்கவிழ்சொரியென்றான்பால்பெய்பவர்சிலரளைந்த
கைகமழ்தயிர்க்குடத்தாற்கவிழ்ப்பவர்சிலரங்கம்மா. 42

இட்டவர்மறியவன்னமிடுதற்குவிரைந்துசெல்வார்
முட்டுவரெதிர்நடந்துமூரல்கைவாங்கிவாங்கிக்
கொட்டுவரடிசிறந்தகூடைகள்கவிழ்த்தெறிந்து
தட்டுவரனம்படைக்குந்தம்பிரானடியரன்றே. 43

(40) பாண்டில்-வண்டி. (43) மூரல்-சோறு.

இன்னணம்படைத்தவெல்லாமிமைப்பினிலயின்றுசைவ
மன்னவன்வயிற்றின்வெந்தீவளர்த்தினிர்நீயிரெல்லா
மென்னநல்வசவதேவனிருந்தபல்பண்டங்கொண்டு
முன்னவன்பசியையாற்றமுன்னிமற்றிதனைச்செய்தான். 44

அவரையும்பயறுமெள்ளுமரிசியுமவலுங்கொள்ளுந்
துவரையுங்கடலையுஞ்செஞ்சோளமுநெல்லும்புல்லுங்
குவரையுங்கயிலையும்பொற்குன்றமும்போலஞாலத்
தெவரையுங்களிப்புச்செய்யவெங்கணுங்குவிப்பித்தானால். 45

குன்றெனக்குவித்தவெல்லாங்கொள்ளெனக்கொண்டுநம்பன்
மென்றரைக்கணத்துளின்னுமெல்வனகொணர்மினென்ன
வன்றிறற்றண்டநாதன்மனத்தினாலவையியற்றி
நின்றிடத்தம்பிரானுநினைவினாலவையயின்றான். 46

நோக்கினாலளித்தவெல்லாநோக்கினாற்றொலைத்தானந்தி
வாக்கினாலளித்தவெல்லாம்வாக்கினால்வள்ளலுண்டு
போக்கினானிடுதலுண்ணலென்னுமிப்போரின்கண்ணே
தூக்கினாலிருவர்தாமுந்தோல்வியுற்றுடைந்தாரில்லை. 47

படைத்திடுந்தொழின்முயன்றபத்தனதியல்புமன்ன
துடைத்திடுந்தொழிலினின்றதூயவனியலுநோக்கி
யடுத்தநற்பத்தரெல்லாமனையவரிருவர்சீரு
மெடுத்துரைத்துளம்வியப்புற்றிறைஞ்சினரொருங்குமாதோ. 48

இடுதற்குவல்லானந்தியிடும்பொருளெவற்றையுங்கை
தொடுதற்குவல்லானிந்தத்தூயவனென்பரிவ்வா
றிடுதற்குவல்லாரில்லையென்பரிவ்வாறுநாங்கை
தொடுதற்குவல்லார்தம்மைச்சொல்லவுங்கேளேமென்பார். 49

கண்ணப்பனன்பினானேகறியெனவமைத்தவூனை
யுண்ணப்பனூனின்வேறுமுயிருணின்றமைவனென்று
வண்ணப்பொன்னனையசென்னவசவதேசிகன்வணங்கி
விண்ணப்பஞ்செய்தான்றுங்கவிடைமுகங்கரந்தானோடு. 50

## வேறு

சென்னவசவன்சொல்லியவச்செயலேசெய்யுஞ்செயலென்று
மன்னுமருளின்மடிவாலமாச்சிதேவன்வந்துரைப்ப

---

(50) வண்ணம்-நிறம்.

வென்னையுடையானும்மொழியேயெனதுமனனைத்தேற்றுமது
பின்னையுளதோகதகமலாற்பெருநீர்தெளித்தற்கென்றுரைத்து. 51

பொறிகள்கரணம்பூதங்கள்புலன்கண்மற்றும்பல்வகைய
கறிகளாகவாருயிரேகலந்துண்பதமாநீயுண்ணப்
பெறுகதிலன்யானெனநின்றுபிறவிப்பிணிதீர்மருத்துவன்ற
னறியமலர்மெல்லடிபணிந்தானமையாளுடையவருணந்தி. 52

வசவனிலைகண்டருண்ஞானவள்ளலல்லமப்பெயரான்
பசியின்வந்தேனலன்பொருட்குப்படர்சாமக்குவந்திலன்யான்
கசியுநினதுமனத்தன்புகாணவந்தேனென்றேத்தி
யிசையின்மலியுமரனடியார்யாருமகிழவெடுத்தணைத்தான். 53

கண்போலுயிர்கள்கண்டறியக்கதிர்போற்காட்டும்பெருமானை
யுண்போன்யானுமூட்டுமுனக்கூட்டுவேனென்றெழுந்தமையா
லெண்போதென்போற்பேதைமையாரில்லையில்லையென்றனன்பின்
பண்போடமலனெதிர்நின்றான்பத்திவடிவமாயினான். 54

செம்மைநெறியானருணந்திதேவன்றன்னைப்புகழ்வமோ
பொய்ம்மைதீருமல்லமனைப்புகழ்வமோவிங்கன்றியிவர்
தம்மைவிழியாற்காண்பதற்குத்தவஞ்செய்துடலமிதுபெற்ற
வெம்மையாமேபுகழ்வமோவெனநின்றனர்தம்பிரானடியார். 55

பரிந்தநந்திமுகநோக்கிப்பசித்தாரென்றுநீதளரப்
பிரிந்தவந்தவடியர்தமைப்பிறங்கலனையநின்மாடத்
தருந்தவணங்கிக்கொணர்தியெனவறிவானந்தமயன்கூற
விரைந்துவிடைகொண்டெழுந்தன்புவெள்ளஞ்சென்றதவரிடத்தில்.

சென்றவசவனருட்குரவன்றிருமேனியிற்றானங்கணிந்த
மன்றன்மலருஞ்சந்தனமும்வடிவிற்றிகழமடிநிமிர்ந்து
தின்றன்முதலகறிமணக்கத்தேக்குவிடுத்துமுகமலர்ந்து
கொன்றைகமழ்வேணியனடியார்குழாங்களிருப்பக்கண்டனனால். 57

கண்டநந்தியடிபணிந்துகடையேன்செய்தபிழையெல்லா
முண்டுபொறுமின்வருகவெனவுள்ளங்களிப்புற்றாங்கிருந்த
தொண்டர்வசவநின்பெருமைசொல்லவெளிதோவயிறாரப்
பண்டுபோலவாய்கைதொழிற்படாமலயின்றேமின்றென்று. 58

(52) பொறிகள்-மெய் வாய் கண் மூக்கு செவி என்பன. கரணம்-மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்பன. பூதங்கள் - பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் என்பன. புலன்கள்-சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்பன.

தேவருண்ணவவியுண்வுசெந்தீமுகத்திலிடுதல்போ
லோவில்யாங்களெல்லேமுமுண்ணவடிசிலல்லமன்ற
ளுவின்மருவவிடுநினையோர்நாவோபுகழுந்தாத்தனெ
வாவியனையநந்திசிரமலனடியார்புகன்றேத்தி. 59

உலகிலொருவன்சிவயோகியுண்டதம்மசராசரமா
மலகிலுயிர்களெலாமுண்டதாகுமென்னமறைகூறு
மிலகுமுறைரையைக்காட்சியானின்றிங்குணரவுணர்த்தினன்
கலகவினைகடீர்க்குமருட்கண்ணன்றிகழல்லமதேவன். 60

ஆதலாலவ்வல்லமனையருந்தலெம்மையெலாமருத்தல்
பாதமவனைப்பணிதலெமைப்பணிதலாகுமெஞ்ஞான்றும்
பேதமில்லைநல்வசவப்பெயரோய்செல்கவென்னமலை
மாதுதழுவக்குழைந்ததோள்வள்ளலடியார்தமைவணங்கி. 61

மீண்டுநந்தியல்லமனூர்மென்பூங்கமலவடியிறைஞ்சி
யாண்டபெருமானடியார்களன்னையுண்டவுணவுகரு
வீண்டுமகவுமுண்ணல்போலெந்தையுண்டவெலாமுண்டு
பூண்டமகிழ்வோடிருந்தனர்சீபுனைந்தமலரும்புனைந்தென்றான். 62

மாறனடித்தவடிபட்டமன்னுமுயிரின்றிறமெல்லா
மீறில்புகழ்கங்கணவசவனிட்டவடிசிலுண்டுபசி
யாறியிருந்தவாதவினாலல்லமன்பூரணனென்னக்
கூறுமொழிமெய்மெய்யென்றுகூறியுலகங்களித்ததால். 63

இவ்வாறருந்தியமைதிபெறுமெங்கள்பரமயோகிதான்
றெவ்வாகியவைம்புலன்வென்றதிறல்கூர்வசவன்றனைமகிழ்ந்து
சைவாகமமுநான்மறையுஞ்சாற்றும்பொருளையுணர்த்துதற்குச்
செவ்வாய்மலரத்திருவுள்ளஞ்செய்துதனிவீற்றிருந்தனனால். 64

இருபத்துமூன்றாவது

**ஆரோகணகதி முற்றிற்று.**

---

கதி 23 - க்கு திருவிருத்தம்-1111.

---

(64) சைவாகமம்-காமியம், யோகசம், சிந்தியம், காரணம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகத்திரம், அஞ்சுமான், சுப்பிரபேதகம், விசயம், நிசுவாசம், சுவீரயம்புவம், அனலம், வீரம், ரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், விம்பம், புரோற்கிதம், இலளிதம், சித்தம், சந்தானசருவோத்தமம், பாரமேச்சுரம், கிரணம், பேதம், வாதுள மென்பனவாம்.

இருபத்துநான்காவது

# மனோலயகதி

வேறு

மயங்குதலின்றிமனோலயமெய்திற்
சயந்தருமுத்திதலைப்படுமென்று
நயந்தருமல்லமநாதன்விளங்க
வியம்பியவண்ணமியம்புதுமன்றே. 1

பத்தர்கடங்கள்பசிக்குணுமையன்
றத்துவநல்குகருத்தொடுதங்க
வத்தலையன்பொடகங்குழைகின்ற
வித்தகநந்திவிளம்புவனன்றே. 2

விருப்புவெறுப்புருவாம்விடயத்தோ
டிருக்குமயற்சகமென்பதிலாமற்
பரப்பிரமத்தியல்பார்ப்பதெனக்குத்
தெரித்தருளென்றுரைசெய்துதுதித்தான். 3

அண்ணலுமார்வமடைந்தருணந்தி
மண்ணுலகோர்தளைமாறுபுஞானக்
கண்ணுறுமாறுகடாவினனென்று
புண்ணியனோடுபுகன்றிடுகின்றான். 4

யானெனதென்பதிருந்திடுகாறு
ஞானமுறானதுநண்ணிலனாகிற்
றானிலையாதசகந்திகழ்கிற்குந்
தீனமிலாதசிவந்திகழாதே. 5

கறங்கெனுமாறுழல்கின்றகருத்துப்
பிறந்திறவாதபெரும்பிரமத்தி
லிறந்திடில்யானெனதென்னுமகந்தை
மறைந்திடுமன்றிமறைந்திடுமோதான். 6

யானிதுசெய்வலெனக்கிதுசெய்வ
ரேனையரென்னவிருந்தகருத்தான்

(1) மனோலயம்-மன ஒருமைப்பாடு. (2) வித்தகன்-ஞானச்சொரூபன். (3) பரப்பிரமம் - ஒப்புயர்வற்றகடவுள். எப்பொருட்கும் விவர்த்தகாரண மாயும் தனக்கொரு காரணமுமின்றி மேற்பட்டு வியாபகமாக விருப்பது எந்த வஸ்துவோ அதுவேயாம். (4) தளை-பந்தம். (6) கறங்கு-காற்றாடி.

மேனிகழ்முத்திதிரும்பலிருட்டாற்
பானுவைமேவுறுபற்றைநிகர்க்கும். 7

இருவினைதாம்வரும்யானெனலாலவ்
விருவினையால்வருமின்பொடுதுன்ப
மிருவினையானெனலின்றெனிலில்லை
யிருவினையில்லெனிலில்லைபிறப்பே. 8

மனத்தையடக்கமனந்துணையாகும்
பினைத்துணையின்றதுபெற்றனனாயிற்
றனிச்சிவமேயொருதானெனவாழ்வ
னினைத்துமறந்துநிலத்துழலானே. 9

வாரணமாகுமனத்தையடக்கிற்
காரணமாயைகளைந்தொழியாது
பூரணமாகியபோதமடைந்திட்
டாரணமோதுமரும்பொருளாவான். 10

வேறு

விரிந்தநெஞ்சங்கருவியாம்விடயமுணரவிரியாம
லொருங்குநெஞ்சங்கருவியாந்தன்னையுணரவொருங்காமல்
விரிந்தநெஞ்சமுடையவனைவிடாதுபிறவியென்றுணர்க
வொருங்குநெஞ்சமுடையானையுறாதுபிறப்பென்றுணர்கவே. 11

அந்தக்கரணசுத்தியேயறிவையறிதற்சாதனமவ்
வந்தக்கரணசுத்திதனக்கறையுங்கருமமாரணங்க
ளந்தக்கரணசுத்திதானாவதவாவற்றிடுதலே
யந்தக்கரணசுத்தியினாலடைவன்பிண்டப்பெயரன்றே. 12

ஆசையறுதல்வீட்டின்பநேரேயடையக்காரணமா
மாசையறுதலலதில்லைப்பலநூலனைத்துமாய்ந்திடினு
மாசையறுவோன்சிவனாதறிண்ணமெனநன்றறிந்திருந்து
மாசையுறுதலென்கொண்டோவந்தோமனிதரறியேமே. 13

ஆசுதீர்ந்தமனத்தினிடையன்றியுணர்வுதோன்றாது
மாசுதீர்ந்தவாடியிடையன்றிவதனந்தோன்றுமோ
பாசநீங்குபரஞ்சுடரைநினைக்குநினைவாற்பற்றுமனங்
காசநீங்குகண்போலத்தன்னைக்காணவிளங்குமால். 14

(14) ஆடி-கண்ணாடி.

வானமல்லேன்வளியல்லேனழனீரல்லேன்மண்ணலல்லேன்
ஞானமல்லேன்வினையல்லேனானேசிவமென்றெண்ணினோ
னூனமில்லாவொருசிவமேயாவனிவ்வாறன்றாதா
னீனமெல்லாமுடையவுடம்பெடுத்துச்சுழலுமெஞ்ஞான்றும். 15

தன்னைச்சிவமென்றறிந்தவனேயறிந்தான்றன்னையுண்மையாத்
தன்னைச்சிவமென்றறியாதானறியானென்றுந்தன்னுண்மை
தன்னைச்சிவமென்றென்றறிவனென்றேபாசந்தனைநீப்பன்
றன்னைச்சிவமென்றறியாதான்றனக்குப்பிறப்பேதுணையாகும். 16

தன்னைப்பேதமாய்க்காண்கைசகத்திற்காணப்பட்டதாந்
தன்னைப்பேதமறச்சிவமென்றறிவோன்ஞானிதானொருவ
னென்னக்கருதிமறையதுநீயானாயென்னவத்துவிதந்
தன்னைப்புகலுங்கண்டதனைச்சாற்றன்மறையின்கருத்தன்றே. 17

தூய்தாகியநெஞ்சுடையார்க்குத்தாமேசிவமாத்தோன்றுமாற்
றீதாகியநெஞ்சுடையார்க்குத்தெளியவபேதமிகலின்றி
வேதாகமங்கள்விளம்பிடினும்விளங்காதென்றும்வேறென்னும்
வாதாலழிவரவர்மாயைமயக்கமயங்குமதியினர். 18

நெஞ்சஞ்சோகம்பாவனையினிற்கநிறுத்திவிடயங்க
ளஞ்சுந்துறவாத்துறந்தசிவயோகியொருவனடியிணையிற்
றுஞ்சுந்திருமான்முதலமரருள்ளமவனைத்துதித்திறைஞ்சா
தெஞ்சுந்தவமாமுனிவரிலையெனநான்மறையுமியம்புமால். 19

என்றுகருணைபொழிவிழியெங்கோமானுண்மையினியம்ப
நின்றவசவராயனுளமழல்சேர்மெழுகினெக்குருகிச்
சென்றுகுரவனடிபணிந்தான்சென்னவசவன்முதலாகத்
துன்றுசரணருய்ந்தனம்யாமென்றுதுதித்துத்தொழுதனரால். 20

இவ்வாறருளாற்றனையுணர்த்தியிருந்தஞானவியல்வீர
சைவாசிரியனல்லமனித்தரையிற்பருவந்தலைசிறப்ப
வுய்வானினைந்துதனைநோக்கியுற்றவடியார்க்குபதேசஞ்
செய்வானியன்றவடியொடுசென்றருள்செய்செயல்செய்துலாவினான்.

இருபத்துநான்காவது

மனோலயகதி முற்றிற்று.

---

கதி 24-க்கு திருவிருத்தம் - 1132.

---

இருபத்தைந்தாவது

# மான்மியகதி

## வேறு

வியனிலமேவியவிழுமியோர்க்கெலாஞ்
செயிரறுமல்லமன்செய்தநன்றியைக்
கயிலையினுதல்விழிக்கடவுடன்புடை
மயிலியலொடுசொலுமாறுகூறுவாம். 1

ஆயிடையருணந்தியாதிமாதவர்
நேயமோடமர்வுறநிறுவியல்லமன்
மாயிருஞாலமேன்மானிடர்க்கெலாம்
போயருள்செயுந்தொழில்பூண்டுளானரோ. 2

இன்னணமல்லமனிருநிலத்துறத்
தன்னிகர்கயிலையிற்சிங்கந்தாங்கிய
பொன்னணைமிசையமர்புராரிதன்னொடு
மின்னணிமுலையுமைவிளம்பன்மேயினாள். 3

அல்லமனருள்பெறற்கடைந்தநந்தியோ
டெல்லையினின்கணமெனதுநற்கலை
மெல்லியனிலமிசைமேவிச்செய்ததென்
சொல்லுதியெனவுமையிறைவன்சொல்லினான். 4

நந்திநல்வசவனாநாமங்கொண்டமர்ந்
தந்தமிலெம்மடியவரையாமெனப்
புந்திசெய்தவர்விழைபொருளளித்தமண்
சிந்தியநிலமிசைச்சிறப்புற்றானரோ. 5

அறஞ்செயுநின்கலையாகுமங்கைபோய்ச்
சிறந்துளவுலகின்மாதேவிப்பேர்பெறீஇ
மறஞ்செயுமதன்வலிமாளமாய்த்தெலாந்
துறந்தனள்குரவனைத்துருவிப்போயினாள். 6

நண்ணியநங்கணநாதர்தாமுமக்
கண்ணகன்ஞாலமுற்றெம்மைக்காணிய
வண்ணநல்வினைகள்பல்வகைபுரிந்தவ
ரெண்ணியபலநகரிடத்துவைகினார். 7

---

(1) வியன்-விசாலமான. விழுமியோர்-மேலோர் - (முத்தர்கள்.) செயிர்-குற்றம். (3) புராரி-பரமசிவன்; திரிபுர தகனஞ் செய்தவன்.

(5) புந்தி-புத்தி. விழை-விருப்பம். (6) துருவி-தேடி.

அளக்கரும்விரதராயவரிருந்திடத்
துளக்கமினிலையுடைத்தூயனல்லமன்
கொளக்குறைபடாதபேரின்பங்கூட்டுண
விளக்கினனுலகினில்வீரசைவமே. 8

வேறு

எவ்வகைச்சமயத்திற்குமிறைவனேயெனினுநேயஞ்
சைவநற்சமயத்துற்றான்சைவத்தும்வீரசைவத்
தவ்வவர்பிறவிநீக்குமல்லமன்விருப்பமுள்ளான்
மைவரிக்கயனெடுங்கண்மடவராலென்றான்வள்ளல். 9

சமயமெவ்வகையினுந்தான்சைவமேலாயதென்கொ
லமையுநல்வீரசைவமதனினுஞ்சிறந்ததென்கொ
லிமையவர்பரவுமுக்கணெம்பிரானருள்செய்யென்ன
வுமையவள்வினவவேழமுரித்தவன்விளம்புமன்றே. 10

உரைக்குமெச்சமயத்திற்குமுத்தரபாகஞ்சைவந்
தரிக்குமச்சைவத்திற்குத்தரமெனவீரசைவந்
தெரிக்குநற்காமிகாதிசிரத்தினிற்றிகழுங்கண்டா
யரிக்குரற்சிலம்பரற்றுமடிமலர்த்தடங்கணல்லாய். 11

புறந்தருசமயம்புக்குப்புறமலாச்சமயத்தெய்தி
யறந்திகழ்சைவமுற்றாங்கதிற்சரிதாதியாற்றிச்
சிறந்துளவீரசைவஞ்சேர்ந்தபின்வீடுநண்ணு
நறுந்தளிர்கவற்றுமேனிநனைமலர்வல்லியன்னாய். 12

அறுமறைமுடியுஞ்சீர்சாலாகமமுடியுமொத்துப்
பொருமறமிலாமன்முற்றும்பொருளினைவிளங்கக்காட்டித்
தருமுறையதனால்வீரசைவமேதலைமைத்தாமிவ்
விருமறுவறுநன்னூலுமிதிற்பிரமாணமாகும். 13

ஒன்றொருவிடயந்தன்னிலுறுசுவைநிறைவென்றாக்கி
யென்றுமெம்முகத்தளித்திட்டெம்பிரசாதங்கொண்டு
துன்றுறுகருமமுன்னாத்தூய்மையிவ்வீரசைவத்
தன்றிவேறொருமார்க்கத்தினடுக்குமோவடுக்கண்மாதே. 14

ஆதலால்வீரசைவத்தறிவினையறியச்செய்தான்
மாதர்மாதேவியாமுன்வண்கலைமாதினுக்கு
மேதையாம்வசவனாதிமெய்யடியவர்க்குஞான
போதகாசிரியனென்னும்பொருவிலல்லமன்வேற்கண்ணாய். 15

(15) மேதை-ஞானம்.

பருவபேதத்தாற்பேசப்படும்பொருள்பருவங்கண்டு
திரிவின்மாமுனிவர்யோகர்சித்தர்கண்முதலானோர்க்குப்
பொருவிலாவல்லமப்பேர்புண்ணியன்புகன்றுட்கொண்டான்
குரவவார்குழன்மடந்தாயென்றனன் குன்றவில்லி. 16

அம்மையுண்மகிழ்வுபொங்கவல்லமன்பெருமைகேளா
மம்மர்செய் துளங்கலக்குமாயையைக்கடந்தானென்றன்
மெய்ம்மைநின்பவளவாயால்விளம்பநானறிந்தேனென்று
மும்மதில்வலிதொலைத்தமுக்கணுயகனைத்தாழ்ந்தாள். 17

அங்குமைமாதினோடுமல்லமன்பெருமைகூறித்
திங்கள்வெண்முகிழ்புனைந்தசெஞ்சடைப்பரமன்மேவ
விங்கருண்மேகமென்னுமிணையிலெங்குருகுகேசன்
மங்கலமுத்தியின்பம்வழங்குமத்தொழிலினின்றான். 18

மூத்தவரிளைஞர்நோயர்முகிழ்முலைமாதர்நல்ல
தீர்த்தொழிலாளர்பொல்லாத்தீத்தொழிலாளரென்றும்
பார்த்திலன்யாவர்மாட்டும்பரிந்தருண்மாரிபெய்து
காத்தனனமலஞானகாரணன் குருகுகேசன். 19

இன்னவாறருளினானேயிவ்வுறவிவர்வேறென்னு
தன்னைபோ லுயிர்கட்கெல்லாமாரருளொருங்குசெய்தே
யென்னையாளெனக்கொண்டானுமிணையடிக்குருகுகேசன்
மன்னுமாதவர்கணெஞ்சமலர்தொறும்வாழாநின்றான். 20

எல்லொளியிரவிபோலவிருண்மலமிரித்திலங்கு
மல்லமன்சரிதமோதிலறம்பொருளின்பம்வீடாம்
நல்லனபயனோர்நான்குநண்ணுவனிதனைக்கேட்க
வல்லநல்வினையினானுமற்றவைமருவிவாழ்வன். 21

மதியிலார்மதிஞராவர்மகவிலார்மகவுயிர்ப்பர்
நிதியிலார்நிதிபடைப்பர்நிலையிலார்நிலைத்துவாழ்வர்
பதியிலார்பதிகிடைப்பர்பழுதிலிவ்விருபத்தைந்து
கதியினுனிரம்புகாதைகற்றவர்கூறக்கேட்பின். 22

## நூல்செய்த காலம்

பார்கெழுசகாத்தமூவைஞ்ஞூற்றெழுபானுன்காவ
தாகியகரநாமங்கொளாண்டுறுவிடைஞாயிற்றிற்
சீர்கெழுமல்லமன்றன் றிருவிளையாடற்காதை
கார்கெழுமிடற்றெங்கோமான்கருணைகொண்டியம்பினானே. 23

(16) குன்றவில்லி-மகமேருமலையைக் கையில் வில்லாகக்கொண்ட பரமசிவன். (17) மம்மர்-காமத்தாலுண்டாகும் மயக்கம். (21) எல்-இருள்.

மாசறுமல்லமப்பேர்வள்ளறன்சரிதந்தன்னி
ஞசறுஞ்செய்யுளெல்லாமன்புடன்படிப்பார்தம்மை
யேசறுமனிதரென்னவிசைப்பதோகரித்தோல்போர்த்த
வீசனென்பதுவேயன்றியேதுமற்றேதுவம்மா. 24

## வாழ்த்து

புண்ணியருலகில்வாழ்கபுலஞ்செறுநோன்புவாழ்க
பெண்ணொருபாகன்பூசைபேணிவாழடியர்வாழ்க
கண்ணுதலொருவன்சார்ந்தகற்புடைச்சைவம்வாழ்க
வண்ணலல்லமன்சீர்கேட்குமாதரவாளர்வாழ்க. 25

பொருவரும்பூதிவாழ்கபூதியையணிவோர்வாழ்க
திருவளர்கண்டிவாழ்கசிறந்தவஞ்செழுத்தும்வாழ்க
குருவருள்வாழ்கமெய்யைக்கூறுநாவோர்கள்வாழ்க
வெருவரும்பிறவிதீர்க்கும்வித்தகர்வாழ்கவாழ்க. 26

அல்லமன்சரிதச்செய்யுளதனிலோர்செய்யுள்கற்க
வல்லவரருத்தமோதவல்லவர்வரையவல்லோர்
செல்வமீதென்னவன்பாற்செவிப்புலனிறைக்கவல்லோ
ரெல்லவரும்பூமீதிலென்றும்வாழ்ந்திடுகவன்றே. 27

இருபத்தைந்தாவது
மான்மியகதி முற்றிற்று.

---

கதி 25 - க்கு திருவிருத்தம் - 1159.

---

## பிரபுலிங்கலீலை
முற்றிற்று.

---

பூமகள்விலாசம் பிரஸ், சென்னை:—1935.

